அறிமுகப்படுத்துகிறோம்!

1973

# KFJ-ன் தங்க புதையல்




## தங்கம் மற்றும் வைரம் வாங்கும் திட்டம்.

எங்கள் தங்க புதையல் திட்டத்தில் சேர்ந்து நீங்கள் கனவு காணும் நகைகளை எளிய தவணை முறையில் வாங்குங்கள். உங்களுக்கு விருப்பமான தவணை முறையை தேர்ந்தெடுத்து முதல் தவணையை **KFJ Purchase Plan Office**-ல் செலுத்த வேண்டும்.

| மாத தவணை | 30 மாதங்களுக்குப் பின் மொத்த மதிப்பு | |
|---|---|---|
| | தங்க நகைகளுக்கு | வைர நகைகளுக்கு |
| ரூ.1000/- | ரூ.30000 + ரூ.10000 (ரூ.40000) | ரூ.30000 + ரூ.12000 (ரூ.42000) |
| ரூ. 500/- | ரூ.15000 + ரூ. 5000 (ரூ.20000) | ரூ.15000 + ரூ. 6000 (ரூ.21000) |

மாதாந்திர தவணைகளை உங்கள் அருகாமையில் இருக்கும் வங்கியிலேயே செலுத்தும் வசதி. சென்னையில் மட்டும்

- இன்றே இத்திட்டத்தில் சேர்ந்து தங்க நாணயம் ஒன்றை இலவசமாக பெற்றிடுங்கள்.
- அறிமுகப்படுத்துவோருக்கான சிறப்பு பரிசுகளும் உண்டு.

மேலும் விவரங்கள் பெற எங்களை 4984274, 4985454, 4984617 ஆகிய போன் நம்பர்களில் அணுகவும்

இத்திட்டத்தில் சேருவதற்கு வசதியாக எங்கள் [illegible]




கேரளா ஃபாஷன் ஜுவல்லரி
• தங்கம் • வெள்ளி • வைரம்

KFJ Purchase Plan Office: 17, சாந்தி விஹார், 140, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன்: 498 4617, 498 5454, 498 4274. ஃபேக்ஸ்: 4985580. [illegible], மயிலாப்பூர், சென்னை - 600 004.

## தீபாவளிக்கு....



## மற்றவை...



# மங்கையர் மலர்


நவம்பர் '97
மலர் : 17

தீபாவளிச் சிறப்பிதழ்

இதழ் : 10

## 1998 ஆம் ஆண்டு ராசி பலன் வெளி வந்துவிட்டது! ரூ. 15.00



கடந்த 15 வருடங்களாக மணிமேகலைப் பிரசுரம் வெளியிடும் ராசி பலன் புத்தகம் வாசகர்களிடம் சிறந்த வரவேற்பைப் பெற்று வருகிறது. ஜோதிட கர்த்தா திரு விட்டலாபுரம் ராஜுவின் அருமையான கணிப்பு 80% தங்களுக்குப் பொருந்தி வரும். 12 ராசிகளுக்கும் ஒரே புத்தகம். **இதர நூல்கள் :** சனிப் பெயர்ச்சிப் பலன்கள் (16.4.1998 வரை) 15.00; ஜோஸியம் கற்றுக்கொள்ளுங்கள் 57.00; கோட்சாரப் பலன்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் முறைகள் 60.00; முக ஜோதிடம் பார்ப்பது எப்படி? 10.50; நோய் நீக்க உதவும் இரத்தினங்களும் இராசிக் கற்களும் 42.00; மேலைநாட்டு ஜோதிடர்கள் சொல்லும் ஜோதிடம் 37.00; ஜாதகம் பார்ப்பது எப்படி? 49.00; நிராயன துல்லிய பாவஸ்புடக் கணிதம் 43.00; கௌசிக ஜோதிட சிந்தாமணி 17.00; உங்கள் ஜாதகத்தில் நாக தோஷமும் பரிகாரங்களும் 12.00; பதஞ்சலி நாடி ஜோதிடம் பாகம் - 1 ரூ. 72.00; பாகம் - 2 ரூ. 60.00; மணிமேகலைத் தூய திருக்கணிதப் பஞ்சாங்கம் 1926 முதல் 2000 வரை ஒரு செட் விலை ரூ. 460.00; மணிமேகலை வாக்கியப் பஞ்சாங்கம் 1926 முதல் 2000 வரை ஒரு செட் விலை ரூ. 460.00.

## கீ போர்டு வாசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள் ரூ. 28.00

Casio, Yamaha போன்ற சிறு இசைக் கருவிகளை வாசிக்கும் முறைகளை இந்நூலாசிரியர் திரு நடராஜசர்மா எளிமையாக விளக்கியிருக்கிறார். சுலபமாக கற்றுக்கொள்ள அற்புதமான புத்தகம். **இதர நூல்கள் :** நாகஸ்வரம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 16.00; தவில் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 19.00; கடம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 18.00; மிருதங்கம் மற்றும் கஞ்சிரா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 78.00; புல்லாங்குழல் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் (தமிழக அரசின் 5000 ரூபாய் பரிசு பெற்ற நூல்) 45.00; வீணை வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 45.00; வயலின் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 38.00; ஹார்மோனியம் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 45.00; புல்புல்தாரா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 15.00; கிட்டார் வாசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள் 58.00; தபேலா வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 22.00; ஜலதரங்கம் வாசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள் 39.00; மாண்டலின் வாசிக்கக் கற்றுக்கொள்ளுங்கள் 25.00; நடன முத்திரைகள் 22.00; இசைப் பிரியர்களுக்கு அண்ணமாச்சாரியாரின் அரிய பாடல்கள் 30.00.

## ஐந்து மொழி அகராதி ரூ. 100.00 (தமிழ்-ஆங்கிலம்-பிரெஞ்சு-ஜெர்மன் இத்தாலியன்)

இந்தியாவில் முதல் முறையாக இப்படியொரு பயனுள்ள நூல். மொழி வல்லுநர் பேராசிரியர் திரு **சக்திப் புயல்** அவர்களின் அரிய முயற்சி இது. இந்நூலின் முன்னுரையில் இவர் சொல்லியிருப்பது போல் "உலகம் முழுதும் பரவி விட்டார்கள். அவர்களுக்கு இரு மொழி அகராதி போதுமானதல்ல! இந்த அகராதி தமிழுக்கும் ஐரோப்பாவிற்கும் பாலம் அமைக்கிறது". **இதர நூல்கள் :** மணிமேகலை ஆங்கில-ஆங்கில-தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி (தமிழ் வார்த்தைகளுக்கு ஆங்கில அர்த்தங்கள்) ரூ. 78.00; மணிமேகலை ஹிந்தி-தமிழ்-ஆங்கில அகராதி ரூ. 26.00; மணிமேகலைத் தமிழ்-தமிழ் அகராதி (தமிழ் வார்த்தைகளுக்குத் தமிழ் அர்த்தங்கள்) ரூ. 112.00; மலையாளம்-தமிழ் அகராதி ரூ. 50.00; தமிழில் கலந்துவிட்ட பிறமொழிச் சொற்களுக்கான அகராதி ரூ. 30.00; எதிர்ப்பத அகராதி ரூ. 13.00; சட்டச் சொல் அகராதி 42.00; வரலாற்றுச் சொற்களுக்கான அகராதி 23.00; ஹிந்தி கற்றுக் கொள்ளுங்கள் 50.00; ஹிந்தியில் பேசுவது எப்படி? பாகம் - 1 ரூ. 32.00; பாகம் - 2 ரூ. 17.00; ஹிந்தியிலும் தமிழிலும் கடிதங்கள் எழுதுவது எப்படி? 14.00.



## நீங்கள் உயரமாக வளர வேண்டுமா? ரூ. 9.00

குள்ளமானவர்கள் என கருதப்பட்ட ஜப்பானியர்கள் சராசரியான உயரத்தைப் பெற்று விட்டார்கள். எனவே நடைமுறையில் உயரமாவது சாத்தியம்தான். **இதர நூல்கள் :** ஒல்லியாக இருக்கு நீங்கள் குண்டாக விரும்புகிறீர்களா? 9.00; உடல் பருமனைக் குறைக்கச் சுலபமான வழிகள் 15.00; சிவப்பாக ஆக வேண்டுமா? 12.00; முகப்பருவைப் போக்க மூப்பது வழிகள் 9.00; தலைமுடியைப் பாதுகாப்பது எப்படி? 20.00; உடம்பு உறுதியாக இருக்க வேண்டுமா? 13.00; உடல் உறுதி பெற உடற் பயிற்சி முறைகள் பாகம் - 1 ரூ. 15.00; பாகம் - 2 ரூ. 32.00; பெண்களுக்கான எளிய உடற்பயிற்சிகள் 18.00; யோகாசனம் கற்றுக் கொள்ளுங்கள் 30.00; பெண்களுக்கான யோகாசனம் 19.00; செக்ஸ் பிரச்சினைகள் 17.00; செக்ஸ் சந்தேகங்கள் 20.00; செக்ஸ் சக்கரைகள் 21.00; இரகசிய நோய்கள் 11.00; ஆண்மைக் குறைவும் பெண்மைக் குறைவும் 18.00; தாது பலம் பெறத் தங்கமான யோசனைகள் 18.00.

---

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி.பி.பி.யில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும்போது பணம் செலுத்தினால் போதும். (தபால் செலவு தனி). சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக்கொள்வது சிக்கனம். தினமும் விற்பனை நேரம் : காலை 8.00 மணி முதல் மாலை 8.00 மணி வரை. ஞாயிறு விடுமுறை. கடிதம் எழுதவேண்டிய முகவரி :



# மணிமேகலைப் பிரசுரம்



தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 4342926 தொலைநகல் : 044-4346082

## ....சில வார்த்தைகள்



நம் நாடு சுதந்திரம் அடைந்து ஐம்பதாண்டு விழா கூட கொண்டாடி விட்டோம். என்னது இது. ஆகஸ்ட் மாதம்தானே இப்படித் தொடங்கி எழுத வேண்டும் என்று நினைக்கிறீர்கள், இல்லையா?

விஷயம் இருக்கிறது. தனிமனிதனுக்குச் சுதந்திரம் என்பது எப்போது அங்கீகரிக்கப்படுகிறது? சிறு குழந்தைகளை முழுமையாக சுதந்திரமாக விடுவதில்லை. பெரியவர்களாகி, 'சரி இனிமேல் இவன் இவன் காலாலேயே நிற்பான். நல்லது கெட்டது புரிந்து கொள்வான்' என்ற நிலையில்தான் சுதந்திரமாக விடுகிறோம். (அதற்கப்புறமும் எண்பது வயசானாலும் தன் அறுபது வயது மகனைக் குழந்தையாகவே பாவிப்பது, மருமகளின் எரிச்சல் அது வேறு கதை) பொதுவாக நாம் இப்படி வைத்துக் கொள்வோம்.

# தேவை நமக்கு சமூகப்ரக்ஞை!

அந்த வகையில் சுதந்திர இந்தியக் குடி மகன்/மகள்களான நாம் பல சமயங்களில் நடந்து கொள்வதைப் பார்க்கும்போது வருத்தமாகத்தான் இருக்கிறது. உலகெங்கும் நம் திறமை, அறிவு மதிக்கப்படுகிறது. இந்தியர்கள் புத்திசாலிகள் எல்லாம் சரி.

ஆனால் பொதுவாழ்க்கையில் பல்வேறு நிலைகளில் நாம், நம்முடைய மக்களின் நடவடிக்கைகளைப் பார்க்கும்போது ஏன் இவ்வளவு அடிப்படை நாகரிகம் கூட இல்லாமல் நாம் இருக்கிறோம் என்றுதான் சலித்துக் கொள்ளத் தோன்றுகிறது.

ஒரு 'ட்ராஃபிக் ஜாம்' எனும் போக்குவரத்து நெரிசல் ஏற்படட்டும். பின்னாடி வந்த ஒரு கார் எதிரே வண்டிகள் வருவதற்காக வழிவிட்டிருக்கும் இடத்தில் மிக வேகமாகப் போய் குறுக்காக நின்று விடும்.

ட்ரெயினில் போகும்போது நம் பெட்டி படுக்கைகளை எல்லாம் நன்றாக அகலவாட்டில் பரப்பி மேலே அடுக்கி விட்டு 'அப்பாடா' என்று கைதட்டி விட்டு உட்கார்ந்து கொள்வோம். அடுத்தவர்கள் வந்து பெட்டியை எங்கே வைப்பார்கள் என்பது பற்றி நமக்கு என்ன கவலை?

நம் வீட்டினுள் சுத்தமாகக் கூட்டி துடைத்து 'பளிச்சென' ஆக்கிய பிறகு குப்பைகளைக் கொண்டு போய் குப்பைத் தொட்டியின் 'பக்கத்தில்' கொட்டி விட்டு வந்து விடுவோம். அதிலும் பெண்கள் 'இன்னபிற சமாசாரங்'களை அப்படியே போட்டு



**மஞ்சுளா ரமேஷ்**

விட்டு வந்து விடுவார்கள். ஏனென்றால் இன்னாருடையது என யார் கண்டுபிடிக்கப் போகிறார்கள்?

பொதுமக்களுக்காக மிகச் சிறப்பாகக் கட்டப்படும் 'டாய்லெட்'டுகள் ஒரு மாதத்தில் அதன் கதி என்னவாகும் என்பது நமக்குத் தெரியும். அதிலும் பெண்கள் உபயோகப்படுத்துபவை...

இப்படி சின்னச் சின்ன விஷயங்கள்தான். நிறைய சொல்லிக் கொண்டே போகலாம். 'சமூகப்பிரக்ஞை'யே இல்லாத இந்தத் தன்மை நம்மிடம் மிக அதிகமாக இருக்கிறது.

நாம் டி.வி.யின் முன் உட்கார்ந்து 'கமெண்ட்' அடிக்கிறோம். 'நம்ம கிரிக்கெட் டீம்ல ஒருத்தனுக்குக் கூட 'ஸ்பிரிட்'டே இல்லப்பா. அவனவன் அவனவன் பேருக்குத் தான் ஆடறானே தவிர இந்தியா ஜெயிக்கணும்னு யாருக்கு அக்கறை இருக்கு?' பேசுகிறோமா?

நமக்கு இருக்கிறதா அந்தப் பொதுவுணர்வு என்பதைப் பார்க்க வேண்டிய காலகட்டத்தில் இருக்கிறோம். மிகவும் நாகரீகம் கொண்டவர்களாக மாறி வரும் கால கட்டம் இது. ஒவ்வொரு பெண்ணுக்கும் தான் நன்றாக இருக்க வேண்டும், தன் வீடு அழகாக இருக்க வேண்டும் என்பதில் மிகுந்த நாட்டம் இருக்கிறது. 'கன்ஸ்யூமர்' உலகமாக இந்தியா மாறிவரும் காலகட்டம் இது. ஒவ்வொரு மனிதரும், கம்ப்யூட்டரும் தொழில்நுட்பத்தில் தங்களை அடிக்க ஆளில்லை என விளம்பரப்படுத்திக் கொள்ளும் காலகட்டத்தில் வாழ்கிறோம். ஒவ்வொன்றையும் மிக நுணுக்கி ஆராய்ந்து தேர்வு செய்வதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறோம். இந்திய மூளைதான் தலைசிறந்தது ஆயிற்றே!

ஆனால் பொது பிரக்ஞை, சமூகப்பிரக்ஞை நம்மிடையே சிறிதாவது இருக்கிறதா என்றால் தேடித்தான் பார்க்க வேண்டியதாக உள்ளது.

மேஸ்திரியும், சூப்பர்வைசரும் இருந்தால் தான் ஒழுங்காக வேலை செய்வோமா நாம்? அவ்வளவு நாம் குறைந்தவர்களா நாம்? கர்மயோகத்தையும், வாழ்க்கை நெறிகளையும் உபதேசித்த மகான்களின் வாரிசுகளாக அல்லவா நாம் இந்த பூமியில் அவதரித்திருக்கிறோம். பின் ஏன் இப்படி?

டிராபிக் கான்ஸ்டேபிள் இல்லையென்றால் யார் சாமர்த்தியமான வண்டியோட்டியோ அவன் முன்னே போய்விடுவான். ஒருவருக்கொருவர் முட்டிக் கொண்டு சண்டை போட்டுக் கொள்வார்கள்.

இதிலே டிராபிக்ஜாம்தான் ஆகவேண்டும் என்ற அவசியம் கூட இல்லை. இரண்டு ஆட்டோ ஓட்டிகளுக்குள் கருத்து வேறுபாடு என்று வைத்துக் கொள்ளுங்கள். ரொம்பவும் கூலாக வண்டியை நடுரோட்டில் நிறுத்தி

# வாங்க, இனம் வாங்க!

"உங்களுக்குப் பிடித்த ஒரு பெண் வி.ஐ.பி. உங்கள் வீட்டுக்கு வருகை தருகிறார் – அதுவும் தீபாவளித் திருநாளன்று. அந்தச் சந்திப்பு எப்படியிருக்கும்?" – இப்படிக் கேட்டவுடன் அந்த இளம்பெண்கள் பரவசப்பட்டுப் போனார்கள்.



இதோ அவர்கள் தட்டிவிட்ட கற்பனைக் குதிரைகள்.

**ஜெயஸ்ரீ :**

"எனக்குப் பிடித்த விளையாட்டு டென்னிஸ். எனக்குப் பிடித்த வீராங்கனை சந்தேகமில்லாமல் ஸ்டெஃபிகிராஃப் தான். என்ன ஓர் அற்புத ஆட்டம்! என்ன ஒரு அழகும் கம்பீரமுமான பர்ஸனாலிட்டி! அவங்களை தீபாவளிக்கு வீட்டுக்குக் கூப்பிடுவதிலே இன்னொரு ரகசிய காரணமும் உண்டு. காதைக் கொண்டு வாங்க சொல்றேன். அவங்க எப்போதும் அணிவது மினி ஸ்கர்ட் தான். எனவே தீபாவளிக்காக அவங்களுக்கொண்ணு, எனக்கொண்ணுன்னு ரெண்டு செட் உடை இந்த வகையில் வாங்கிடுவேன் (இல்லேன்னா இதையெல்லாம் போட்டுக்க வீட்டிலே அனுமதிக்க மாட்டாங்களே). குலோப் ஜாமூன், ஜிலேபி ரெண்டும் அன்றைய மெனுவில் நிச்சயம் உண்டு. குலோப்ஜாமூனை அவங்க நாசூக்கா வெட்டித் தின்னும் அழகையும், ஜிலேபியின் முதல் எது முடிவு எதுன்னு கண்டுபிடிக்கச் சொல்லி அவங்க படும் அவஸ்தையையும் ரசிக்கணும். தீபாவளியை ஏன் கொண்டாடறோம்னு விளக்கிச் சொல்லுவேன். கிருஷ்ணன் நரகாசுரன் பத்தியெல்லாம் சொல்லும்போது அவங்க முகபாவங்கள் எப்படியிருக்கும்! நினைக்கவே வேடிக்கையா இருக்கு. அந்த நட்சத்திர ஹோட்டல் எல்லாம் அவங்களுக்கு அலுத்திருக்கும். எனவே கைவேந்தி பவனில் இட்லி தோசைதான் அவங்களுக்கு. கொஞ்ச நேரம் டென்னிஸ் கத்துக் கொடுங்களேன்னு கேட்டுக் கொள்வேன். டென்னிஸாம் கத்துக்கலாம்; ஸ்டெஃபியோடு ஆடினேன்னு தோழிகள் கிட்டே பெருமையடிக்கவும் வசதியாய் இருக்கும். ஏகநாதரின் போதனைக்கும் டென்னிஸுக்கும் உள்ள தொடர்பு என்னன்னு கேள்வி கேட்பேன். அவங்க முழிச்சா "லவ் ஆல்"ன்னுதானே டென்னிஸ் தொடங்குதுன்னு சொல்லி விழுந்து விழுந்து சிரிக்க வைப்பேன். என்ன ஒரு அற்புதமான தீபாவளி!"



**அகிலாண்டேஸ்வரி :**

"நமக்குப் பிடிச்ச வி.ஐ.பி.யாகவும் இருக்கணும். கலகலன்னு பேசக்கூடியவங்களாகவும் இருக்கணும். அட, எழுத்தாளர் சிவசங்கரி ஐடியலாக இருப்பாங்களே. அவங்க எழுத்துக்களையும், தொலைக்காட்சி நிகழ்ச்சிகளையும் பார்க்கும்போது தற்கால பிரச்

ஸ்ரீ துர்க்கை அம்மன் துணை

✆ 8261329

# தனலக்ஷ்மி  சாரீஸ்

## தேவேந்திரா சுங்குடி தயாரிப்பாளர்

20 வருடமாக தரமான தேவேந்திர சேலைகள் தயாரித்து புகழ் பெற்ற நாங்கள், இப்பொழுது 8 வருடமாக மதுரை சுங்குடி சேலைகள் சொந்தமாக தயாரித்து வருகிறோம்.

எங்களிடம் 100's special, 120 superior (Combed Cotton) அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்கிறோம். இந்த இரண்டு quality சேலைகளையும் அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்வதால், குறைந்த விலையுள்ள புடவையும் நீடித்து உழைப்பதற்கு உத்தரவாதம் தருகிறோம்.

நாங்கள் 9½ கெஜம் (8.70 m), 10½ கெஜம் (9.70 m) மற்றும் 6 கெஜம் (5.50 m) அதிக அளவில் தயார் செய்வதால் அதிக Varaitys கிடைக்கும். நாங்கள் Latest Bathik designs, Banthini prints, Gold prints மற்றும் Latest Computer Screen Printing designs தயார் செய்கிறோம். மற்றும் பட்டுப்புடவை போன்று Grand Look கொண்ட உயர்தர காட்டன் புடவைகள் கிடைக்கும். உயர்ரக காட்டன் நூலால் நெய்யப்படுவதால் அதிக Maintanance தேவையில்லை. நீங்கள் குறிப்பிட்டு சொல்லும் designகளையும் செய்து தருகிறோம்.

சேலைகள் அதிக நாள் நீடித்து உழைக்க வேண்டுமென்ற குறிக்கோளுடன் தயார் செய்கிறோம். மற்றும் எங்கள் கம்பெனியில் ஏற்படும் Small defects Sarees குறைந்த விலைக்கு தருகிறோம்.

நாங்கள் மொத்தமாகவும் சில்லரை விலையிலும் விற்பனை செய்து வருகிறோம். மற்றும் எங்களிடம் மங்களகிரி காட்டன் (No Maintanance), பெங்கால் காட்டன் (120 Counts) கோவை Veeco Sarees (Pure Cotton and Silk Cotton) பாலிகாட்டன், குண்டூர் காட்டன், வெங்கடகிரி காட்டன், பாலியஸ்டர், பெல்காம் சாரதா சேலைகள், பெங்களூர் Printed Silks, கரிஷ்மா காட்டன் மற்றும் சூரத் சிந்தெடிக் சேலைகள், ஃபேன்சி Printed Silk சேலைகள், சேலம் வேஷ்டிகள், டவல்கள், மேட்சிங் ப்ளவுஸ்கள், உயர்ரக ஈரோடு காட்டன் கிடைக்கும்.

அமைதியான சூழலில் Car Parking வசதியுடன் தரமான காட்டன் சேலைகள் வாங்க சிறந்த இடம்.

ஞாயிறு விற்பனை உண்டு.

எங்கள் கடை விலாசம்:

14.11.96 முதல் எமது இந்த தனலஷ்மி சாரீஸ் நிறுவனம் இடம் மாற்றப்பட்டுள்ளது. புதிய முகவரி

நெ. 1, கோபாலகிருஷ்ணா ரோடு (டாக்டர் நாயர் ரோடு, Second left from Pondy Bazzar turning) தி.நகர், சென்னை -17.

எங்கள் தயாரிப்பு சேலைகள் அனைத்தும் கோயம்புத்தூரில் கீழ்கண்ட விலாசத்தில் கிடைக்கும்.

P.R. Shanthi, No.15, Siva Sakthi Colony, Vadavalli, Coimbatore 641 041.

# 'வாக்கிங்' -சரியாக 'நடப்போம்'!

உடலை ஆரோக்கியத்தோடு வைத்திருப்பதற்கு உடற்பயிற்சி மிகவும் அவசியமானது. உடற்பயிற்சிகளில் இப்பொழுது "வாக்கிங்" பயிற்சியானது பிரபலமாகிக் கொண்டு வருவதை நாம் பார்க்கின்றோம். "வாக்கிங்" எப்படி முறைப்படி செய்ய வேண்டுமென்று விருதுநகர் மாவட்ட திருவில்லிப்புத்தூர் நுகர்வோர் நீதிபதியாக இருந்து ஓய்வு பெற்ற திரு. கனகசபாபதி (வயது 65) விளக்குகின்றார்.




இவர் – முதியோர் பிரிவில் ஒரு தேசிய தடகள யோகாசன வீரர். பல போட்டிகளில் கலந்து கொண்டு வெற்றி பெற்றுள்ள இவர் பாண்டிச்சேரியில் நடந்த சர்வதேச யோகாசன விழாவில் கலந்து கொண்டு சிறந்த யோகாசனம் செய்து காட்டுபவராக தேர்ந்தெடுக்கப்பட்டு தகுதிச் சான்றிதழும் பரிசும் பெற்றிருக்கிறார்.

உடற்பயிற்சி செய்வதில் "வாக்கிங்" மிகவும் சுலபம் என்று சொல்லப்படுகின்றது. அப்படிச் சொல்வது சரியில்லை. தேக ஆரோக்கியத்திற்கு அனுகூலங்கள் கொடுக்கக் கூடிய நடைப்பயிற்சியானது ஓட்டப் பயிற்சியை விட மிகவும் கடினமானது என்று சொல்லலாம். மருத்துவர்கள் அல்லது உடற்பயிற்சியாளர்கள் நடங்கள் அல்லது சுறுசுறுப்பாக நடங்கள் (பிரிஸ்க் வாக்கிங்) என்று ஆலோசனை கூறுகின்றார்களே தவிர எப்படி "வாக்கிங்" செய்வது என்று தெளிவாகக் கூறுவதேயில்லை. சாதாரணமாகவோ அல்லது சுறுசுறுப்பாகவோ வாக்கிங் செய்தால் மட்டும் நாம் எதிர்பார்க்கின்ற அனுகூலங்கள் கிடைப்பதில்லை. கடற்கரையிலும், மைதானத்திலும் பூங்காவிலும் பல தரப்பட்ட ஏராளமானவர்கள் காலையிலோ அல்லது மாலையிலோ நடப்பதைத் தினமும் பார்க்கின்றோம். சரீர ரீதியாக முழு அனுகூலங்கள் கிடைக்கும்படியாக நடைபயிற்சி செய்கின்றார்களா என்றால் என் அனுபவத்தைப் பொறு



வரையில் இல்லை என்று தான் சொல்வேன்.

நடையானது சாதாரணமாக இல்லாமல் ஊக்கமுள்ளதாக இருக்க வேண்டும். எவ்வளவு தூரம் தினமும் நடக்கின்றோம் என்பது முக்கியமில்லை. ஒரு குறிப்பிட்ட தூரத்தை எவ்வளவு குறைந்த நேரத்தில் ஊக்கமாக நடந்து செல்லுகின்றோம் என்பதுதான் மிக மிக முக்கியம். நடைப் பயிற்சி



பூசணம், பூஞ்சாளம் அல்லது பூஞ்சகாளான் என்பது நுண்ணுயிர்களில் ஒருவகை. பிரெட், சப்பாத்தி, ஊறுகாய், காய்கறிகள் மீது, மஞ்சள், பச்சை, கறுப்பு, வெள்ளை நிறங்களில் பஞ்சுபோல் படர்ந்து காணப்படும். பூஞ்ச காளம் உடலில் சென்றுவிட்டால், சிறுநீர், மலம் வழியாக வெளியேறாது. அவை சிறிது, சிறிதாக உடலில் சேர்ந்து, கல்லீரல், சிறுநீரகம், மூளை போன்ற உறுப்புக்களை பாதிக்கின்றது. எனவே கவனமாக இருக்க வேண்டியது மிக அவசியம்.

— ஆர். கீதாஞ்சலி

படிப்படியாக காலப் போக்கில் முன்னேற்றம் இருக்க வேண்டும். தேகம் ஆரோக்கியமாகவும் இருக்க வேண்டும். நடக்கும்பொழுது ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டு நடப்பது சரியில்லை. நடக்கும்பொழுது கால்களுக்கு ஷூக்கள் அணிந்து கொள்வது மிகவும் நல்லது. செருப்புக்கள் போட்டு நடக்கக் கூடாது. நடக்கும்பொழுது மூக்கியானது சமமாகவும் சீர்பிரமாணமாகவும் இருத்தல் வேண்டும். மனதை ஒரு நிலைப்படுத்தியிருக்க வேண்டும். இப்படி நடைப் பயிற்சி செய்தால் பிராணாயாமம் (மூச்சுப் பயிற்சி) தியானம் உள்ளடக்கமாகும். இப்படி நடைப் பயிற்சி செய்தால் இவைகள் செய்வதற்காக தனியாக நேரம் ஒதுக்க வேண்டிய அவசியமில்லை.

ஊக்கமுள்ள நடைப்பயிற்சியின்போது நமது உடலின் எல்லா அவயவங்களும் ஒன்றாகச் சேர்ந்து முன்னுக்கும் பின்னுக்கும் இனிமையான வேகத்தில் அசைய வேண்டும். தோள் பட்டைகள் சுழல வேண்டும். கைகள் இங்குமங்கும் ஊஞ்சலாட வேண்டும். உடம்பின் எல்லா பாகங்களும் அடிவயிற்றெலும்பில் மிதக்கும்படியாக இருக்க வேண்டும்.

நடக்கும்பொழுது முதுகை வளைக்காமல் உடலை நிமிர்த்தி தோள் பட்டைகளை சற்று பின் நோக்கி தலை நேராகவும் வயிற்று பாகத்தை சற்று உள்ளே இழுத்தபடி நடக்க வேண்டும். நடக்கும்பொழுது ஒவ்வொரு முறையும் ஒரு காலை முன்னால் எடுத்து வைக்கும்பொழுது பின் பாதத்தை மட்டும் தரையில் ஊன்றியும் பாதத்தின் முன்பகுதியானது தரையில் படாமல் சற்று தூக்கியும் அப்பொழுது பின்கால் மூட்டியானது விரைப்பாகவும் இருக்க வேண்டும். இதே மாதிரிதான் மற்றொரு அடுத்த காலை தரையில் எடுத்து வைக்கும் பொழுது செய்ய வேண்டும். முன்னுக்கும் பின்னுக்கும் இப்படித்தான் நடக்கும் பொழுது செய்ய வேண்டும். இடுப்புக்கு மேலேயுள்ள பகுதியானது இலேசாக மிதக்கும் வண்ணம் இருக்க வேண்டும். பின்னால் இருந்து பார்க்கும்பொழுது இடுப்பில் பின் பகுதியானது கடல் அலை போல மேலும் கீழும் ஊசலாடுவது போலிருக்க வேண்டும். இப்படித் தான் ஊக்கமுள்ள நடைப்பயிற்சி இருக்க வேண்டும். எடுத்த எடுப்பில் நடைப் பயிற்சியின் பரிபூரணம் காண முடியாததால் தொடர்ந்து விடாப்பிடியாக இப்படி பயிற்சி செய்தால் பரிபூரண தன்மையை யாராலும் அடைய முடியும்.

ஊக்கமுள்ள "வாக்கிங்" செய்வதினால் தசைகள் மூட்டுக்கள், தசை நார்கள் என்று உடலின் பல பாகங்கள் சுறுசுறுப்பு அடைகின்றது. இருதயதுடிப்பு அதிகரிக்கின்றது. தசைகளுக்கும் இருதயத்திற்கும் வேண்டிய ரத்த ஓட்டம் சிறப்பாகக் கிடைக்கின்றது. மூச்சு விடுதலும் இருதய துடிப்பும் சீராக இருக்கும். சத்துள்ள இரத்தமானது உடம்பின் பல பாகங்களுக்கு விநியோகிக்கப்படுகின்றது. மலச்சிக்கல் வராது. சர்க்கரை வியாதி உள்ளவர்கள் நிவாரணம் காணலாம். ஆஸ்த்மா விரட்டப்படுகின்றது. மூட்டுவலி மற்ற எலும்புகள் சம்பந்தப்பட்ட வலிகள் எதுவும் வராமல் தடுக்க முடியும்.

இப்படி "வாக்கிங்" பயிற்சி செய்வதினால் அதைரியப் படுத்துதல், ஏளனம், நகைப்பு இவைகளுக்கு இலக்கு ஆவோமா என்றும், இப்படிப்பட்ட பயிற்சியாவது நடைமுறைக்கு சாத்தியப்படுமா என்றும் உங்கள் மனதில் ஐயப்பாடு எழலாம். இவைகளை எல்லாம் இலட்சியம் செய்யக் கூடாது. நோக்கம் மீதே குறியாக இருக்க வேண்டும். ஊக்கமுடன் செயல்பட்டால் இந்த முறை பயிற்சியானது எந்த வயதிலும் சாத்தியப்படும். இப்படி பயிற்சி செய்தால் நீங்களும் விரைவில் பரிபூரண வாக்கராக உடல் ஆரோக்கியத்தோடு வாழலாம்.



"கங்கா ஸ்நானம் ஆயிற்றா?" தீபாவளியன்று ஒவ்வொரு இல்லத்திலும் கேட்கப்படும் கேள்வி இது. ஸ்நானம் செய்தது தமிழ்நாட்டில் ஓடும் நதிகளின் நீரினால் இருந்தால் கூட அன்று அது கங்கா ஸ்நானம்தான். ஆனால் நிஜமான கங்கை நதிக்கரையில் உள்ள காசியில் தீபாவளித் திருநாள் எப்படிக் கொண்டாடப்படுகிறது? அன்று கங்கையில் ஸ்நானம் செய்து காசி விஸ்வநாதரையும், விசாலாட்சி தாயாரையும், அன்னபூரணியையும் தரிசிப்பவர்கள் பெறும் இன்பம்தான் எப்படிப்பட்டது?

காசியில் தமிழர்கள் அதிகமாக வசிக்கும் பகுதி 'அனுமான் காட்' என்ற கங்கைப் படித்துறை அமைந்துள்ள நகரப்பகுதி. அங்கு தமிழர்கள் விடியற்காலையில் எண்ணெய் தேய்த்துக் கொண்டு கங்கையில் நீராடுகின்றனர். கங்கைக் கரை ஓரமாக அறுபத்தி நான்கு ஸ்நானக் கட்டங்கள் உள்ளன.

# லட்டுத் தேரில் அன்னபூரணி

படித்துறை ஓரமாக, ஆலயங்களும் அமைந்துள்ளன. இந்த ஸ்நானக் கட்டங்களில் மிக முக்கியமானவை ஐந்து. இவை அஸிகட்டம், அஸி - நதி கங்கையில் சங்கமமாகும் கட்டம்.



தசாஸ்வமேத கட்டம் - பத்து அஸ்வமேத யாகம் செய்த பலன் கிடைக்கும் கட்டம். வருணா கட்டம் - வருணை நதி கங்கையில் சங்கமமாகும் கட்டம். மணிகர்ணிகா கட்டம் - மகேஸ்வரன் கங்கைக் கரையில் நீராடி ஆனந்த நடனம் செய்த வேளையில், அவருடைய காதிலிருந்து குண்டலமும், முடியிலிருந்த மணியும் கங்கையில் தெறித்து விழுந்து கலந்த இடம். இந்த ஐந்து முக்கியமான கட்டங்களிலும் தீபாவளியன்று ஸ்நானம் செய்கின்றனர். கங்கைக் கரையில் மூங்கிற் குடைகளின் நிழலில் அமர்ந்துள்ள பண்டாக்கள் ஸ்நானம் செய்து வருபவர்களுக்குப் பூஜைகளை செய்து வைக்கிறார்கள். தீபாவளி - தீப - ஆவளி - தீபங்களின் வரிசை. இப்பெயருக்கேற்ப இத்தினத்தில் பண்டாக்கள் அமர்ந்திருக்கும் இந்த இடத்தில் மூங்கிற் கழிகளின் நுனியில் கூடைகளின் உள்ளே தீபங்களை ஏற்றி வைப்பார்கள்.

மணிக்கர்ணிகா கட்டத்தில் நீராடிய பிறகு கங்கை நீரை



## பண்டிகைக்குச் சில டிப்ஸ்!

லட்டு செய்யும் போது பாகு முற்றி பூந்தி போட்டவுடன் இறுகி விட்டால் கவலை வேண்டாம். சிறிதளவு நீரை கொதிக்க வைத்து பாகுடன் உள்ள பூந்தியில் ஊற்றி சிறிது நேரம் கழித்து நன்றாகக் கிளறினால் இளகி விடும். லட்டு பிடிக்க சுலபமாகிவிடும். (இரண்டு டம்ளர் மாவு அளவில் செய்த லட்டு என்றால் ஒரு டேபிள் ஸ்பூன் அளவு நீர்).

பாகு பதம் இல்லாமல் பூந்தி போட்ட பின்பு இளகுவாகவே இருந்தால் மீண்டும் அடுப்பில் வைத்து இளந்தீயில் சிறிது நேரம் கிளறிக் கொண்டே இருந்தால் கெட்டிப்பட்டு விடும். சமயம் பார்த்து 'டக்'கென்று எடுத்து, சிறிது ஆற விட்டு லட்டு பிடிக்கலாம்.

லட்டு செய்வதற்கு பூந்தி அழகாகப் பிழிய வேண்டும் என்று சிரமப்பட தேவையில்லை. கட்டி தட்டிக் கொண்டு, கட்டியும் மூட்டியுமாக பூந்தி வந்தாலும் பரவா யில்லை. அவற்றை மிக்ஸியில் போட்டு ஒரு சுற்று சுற்றி எடுத்து சர்க்கரை பாகில் போட்டு லட்டு செய்தால் மிகவும் மென்மையான லட்டு கிடைக்கும்.

லட்டுக்கு செய்த பூந்தியை அப்படியே பாகில் போட்டு ஒருநாள் முழுதும் ஊற வைத்து எடுத்து பிசைந்து பிசைந்து லட்டு பிடித்தாலும் மென்மையான லட்டு கிடைக்கும்.

— சி. பூங்கோதை

எடுத்து வந்து காசி விசுவநாதருக்கு அபிஷேகம் செய்கின்றனர். தீபாவளியன்று, நாமே லிங்கத்திற்கு அபிஷேகம் செய்து கையால் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொள்ளக் கூடிய பாக்கியம் கிடைக்கும். காசி விசுவநாதர் ஆலயத்திலிருந்து சிறிது தூரத்தில் அமைந்திருப்பது காசி விசாலாட்சியின் ஆலயம். இங்கு தீபாவளியன்று தங்க விசாலாட்சி தரிசனம் பெறலாம்.

காசியில் தீபாவளியன்று விசேஷமான அலங்காரங்களுடன் எழுந்தருளுவது அன்னபூரணி. அன்று அன்னபூரணியின் தரிசனத்துக்காக பக்தர்கள் ஆயிரக்கணக்கில் கூடுகின்றனர். காசியில் விசுவநாதர் ஆலயத்துக்கு இணையாக மிகச் சிறப்புடன் விளங்குவது அன்னபூரணியின் ஆலயம்தான். சாதாரண நாட்களில் கருவறையில் அன்னபூரணி அம்மனின் தரிசனம் கதவின் துவாரம் வழியாகவே பக்தர்களுக்குக் கிடைக்கிறது. கருவறைக்கு எதிரே எண்கோண வடிவம் கொண்ட மண்டபம் இருக்கிறது. அங்கே அமர்ந்து பக்தர்கள் பஜனை செய்கிறார்கள். பூஜை நேரத்தில் ஆலயமணி முழங்குகிறது. பசுவின் முகம் கொண்ட இந்த ஆலய மணியின் நாதத்தில் பக்தர்களின் கோஷம் கலந்து ஒலிக்கிறது. கற்பூர ஆரத்தி காட்டிக் குங்குமப் பிரசாதம் அளிக்கிறார்கள்.

தீபாவளியன்று தங்க அன்னபூரணியைத் தரிசிக்கலாம். காசியில் இருப்பவர்களுக்கு அன்னவிசாரம் இல்லை என்பது வாக்கு. ஈசனுக்கே அன்னபூரணி இங்கு உணவளித்ததாக வரலாறு கூறுகிறது. அன்னபூரணியின் திருவுருவம் இந்தத் தோற்றத்திலேயே அமைக்கப்பட்டுள்ளது. அன்னபூரணி தனது குழந்தைகளுக்கு உணவளித்துக் காப்பாற்றும் யோக மாதா · அனைவருக்கும் சகலவித சௌபாக்கியங்களையும் அளிக்கும் தேவி. உலகில் வாழும் மக்கள் எதனால் உயிர் வாழ்கிறார்களோ, எந்த சௌக்கியங்களை அடைய விரும்புகிறார்களோ, அனைத்தையும் தரும் செல்வியாக அன்னபூரணி விளங்குகிறாள்.

அன்னபூரணியைப் பூஜை செய்து வழிபடும் முதல் நாள் தனித்திரயோதசி. அன்று தங்க அன்னபூரணிக்குப் பூஜைகள் உண்டு. ஆனால் முழு தரிசனம் கிடைக்காது. திரை போட்டு மறைத்து விடுகிறார்கள். அடுத்த நாளான 'சோடி' (சின்ன) தீபாவளியன்று தரிசனத்துக்காக திறந்து வைக்கிறார்கள். தீபாவளியன்று ஐஸ்வர்யங்களை அளிக்கும் அன்னபூரணி தேவிக்குக் குபேர பூஜை நடக்கிறது. அன்று


Now with
Preethi
CHEFPRO
Preethi
CHEFPRO


FREE
Preethi
DRIPCAFE-6
Worth Rs.1150/-
Limited period offer in Tamil Nadu and Pondicherry.
T.A. TAYLOR PVT.LTD. Chennai ☎ 4347963, 4341512 Tiruchy ☎ 704465 Coimbatore ☎ 397322 Madurai ☎ 621376 Salem ☎ 443578 Pondicherry ☎ 46383

# தேவை ஒரு முதியவர்!

காலை நேர சப்தங்கள் எல்லாமே இங்கே வித்தியாசப்பட்டு 'இது வேறு உலகம்' என்று சொல்வது போலத் தோன்றியது எனக்கு...

கூவும் சேவல், 'சட், சட்' டென்று தெளிக்கப்படும் வாசல், கத்தும் மாடுகள் எதுவுமே இல்லாத வேறாகி விட்டதா சென்னை.

"மூணாவது மாடில எப்படி வாசல் தெளிப் பாளாம்' முப்பத்தியாறு வீடுகளுக்கும் பொது "காமன் ஏரியா". பட்டனை அழுத்தினா கொட்டும் நேத்தே கறந்த பால்... அம்மா எப் போதோ வியாக்கியானம் செய்தது நினைவில் வர சிரிப்பு எட்டிப் பார்த்தது.

அந்த அளவுக்கு பட்டணத்துப் புறாக் கூண்டை விமர்சித்த அம்மாவை இன்று இரா மத்துக்கு அழைத்துச் செல்வது பிரம்மப் பிரயத் தனமாகி விட்டதே...

அம்மாவையும் என்னையும் தவிர வீடே இயந்திரத்தனமான வேகத்தில் இயங்கிக் கொண்டிருந்தது. நைட்டியோடு அடுக்களையில் மீனா எதையோ அவசரமாக வதக்கிக் கொண் டிருக்க, அஷ்வின் அவசர கதியில் ரொட்டித் துண்டுகளை மென்று கொண்டிருந்தான். வாக்கிங் முடித்துக் கொண்டு வியர்க்க விறு விறுக்க உள்ளே வந்த என் தம்பி ராகவன், "வர்மா போன் பண்ணினானா?" என்றபடியே பாத்ரூமுக்குள் புகுந்து விட்டு பத்து நிமிடத்துக் குள் எலுமிச்சை மணத்தோடு வெளிவந்தான்.

"ப்ரேக்ஃபாஸ்ட் வேண்டாம். இந்தர் கூட பார்த்துக் கொள்கிறேன்" ஷூவை மாட்டிய படி.

"உனக்கு பத்து மணி ரயில் தானேண்ணா... ராத்திரி 'லெஷர்லியாய்' பேசுவோம். ஆடிட் டிங் சமயம்... ஒரே அவசரம்..."

பிரீஃப்கேஸோடு மறைந்தான்.

"பைபை... ம்மா... பை அங்கிள், பை பாட்டி..."

ஏழேமுக்கால் அடிக்கும் முன் அஷ்வின் முதுகுச் சுமையும், டையுமாக ஸ்கூலுக்குக் கிளம்ப...

"டேபிளில் டிபனும் லஞ்சும் வச்சிருக் கேன்... சாப்பிடுங்க. ஆறரை மணிக்குப் பார்க்க லாம்..." என்னிடம் புன்னகையோடு கூறிய மீனா, "வடிவு வந்தா பாத்ருமைக் கழுவச் சொல்லுங்க... இட்லிக்குப் போட்டிருக்கேன் கிரைண்டர்ல போடச் சொல்லுங்க... வரேன்..." என்று அம்மாவிடம் அவசர கதியில் சொல்லி விட்டுக் கிளம்பினாள்.

எட்டு அடிக்கும் போது வீட்டில் அம்மா வும் நானும் மட்டுமே.

பொன்சாய் அளவில் பால்கனி மூலையில் இருந்த துளசி மாடத்தைத் தூக்கி நடுவே வைத்துவிட்டு பிரதட்சிணமாக வரும் அம்மா வைக் காண சங்கடமாக இருந்தது.

"என்ன பார்க்கறே... இப்படி வந்து பார்... அண்ணாந்துதானே தென்னைமரத்தை நீ



## உஷா ஸ்ரீகுமார்

பார்த்துப் பழகியிருக்கே.. இங்கே நின்னு குனிஞ்சு பார். உச்சிக் குருத்து விரியப் போறெ அழகு தனியழகு.. நம்ம ஊரில் நாம பார்த்திருக்கவே மாட்டோம்.." அம்மா சிரித்தாள்.

ஆமாம். இங்கே எல்லாமே வேறு மாதிரி தான். எனக்கு மூன்று நாட்களுக்கு மேல் பொருந்துவதில்லைதான். ஆனால் பத்து வருடங்களாக அம்மா நகர வாழ்க்கையை வேறு வேறு கோணங்களில் ரசிக்கக் கற்றுக் கொண்டு விட்டாள்.. ரசிக்கிறாளா? இல்லை நடிக்கிறாளா?

ராகவன் கல்யாணமான புதிதில் மெட்ராஸுக்கு வந்த அம்மா, ஒரே வாரத்தில் ஊர் திரும்பினாள்.

"அந்தக் கூட்டம், அந்த அமளி, அந்தத் தண்ணி.. அந்த அவசரம்.. ஐய்யோடா. பாவம் பண்ணியிருக்கணும் நம்ம ஊரை விட்டுட்டு வெளியே போக.. நான் ராகவன் கிட்டே சொல்லிட்டேன். நான், கிழவி, வீடுன்னா நீங்க இங்கே வந்து என்னைப் பார்த்துட்டு ரெண்டு நாள் நிம்மதியா இருந்துட்டுப் போ. என்னை இந்த நரகத்துக்குக் கூப்பிடாதேன்னுட்டேன்" என்று வந்தவர் போனவரிடமெல்லாம் ஒரு மாதம் புலம்பிக் கொண்டிருந்தாள்.

"புது நாட்டுப் பெண் உத்தியோகம் பார்க்கறா.. ரங்கத்துக்கு சரிவரலை. பேச்சுக்குப் பேச்சு எதிர் வாயாடறாளாம். அதான் சரிப்படலை.." ஊர் பேசி ஓய்ந்தது.

அடுத்த ஏழு வருடங்கள் அம்மா ராகவன் வீட்டிற்குச் செல்லவில்லைதான். அஷ்வின் பிறந்த சமயத்தைத் தவிர.

திடீரென்று ஒரு நாள் அம்மா பரபரப்போடு மூட்டைகளைக் கட்ட வேண்டிய நிலைமையை ஏற்படுத்தியது ராகவனின் கடிதம்.

"அஷ்வினுக்குக் காய்ச்சல்.. மீனாவுக்கு லீவ் இல்லை. ஆயா நின்னு விட்டாள். உடனே கிளம்பி வா உன் பேரனை கவனித்துக் கொள்ள.."

லெட்டரைப் படித்து விட்டுப் பதறிக் கிளம்பினாள்.

சாதாரணக் காய்ச்சல் டைபாய்டாக விஸ்வரூபமெடுக்க, ஒரு மாதம் குழந்தையின் அருகாமையை விட்டு அம்மா நகரவில்லை.

"பத்து நாளுக்கு மேல லீவு தரமாட்டாளேம்மா.. மீனாவை ரிஸைன் பண்ணச் சொல்லலாம்னா செலவை சமாளிக்க முடியாது. இங்கே நீ அஷ்வினைப் பார்த்துக் கொண்டு கொஞ்சநாள் இரேன்.." ராகவன் கேட்க.

அம்மா எனக்குக் கடிதம் எழுதினாள்.

"குழந்தையை கவனிக்கக்கணும். 'பாட்டி.. பாட்டி' என்று ஒரு நிமிஷம் கூட என்னை



# உலகத் தரம் வாய்ந்த இரண்டு சாதனையாளர்கள் - உங்கள் வீட்டு சமையலறை மேடையில் சாதனை படைக்கட்டும்.




# ULTRA

ரொம்பப் பிரமாதம்! இந்த இரண்டு சேர்கள் போதும். எந்தவொரு முயற்சிக்கும் ஊக்கமும் உற்சாகமும் தரும். அதுவும் ஒரு துறையில் புதிதாகத் தொழில்முயற்சி தொடங்குவோர்க்கு இது மகத்தானது.

ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு, சமையலறையில் வேலைச் சுமையைக் குறைக்க இந்தியப் பெண்களுக்கு இணையற்ற துணையாக வந்தது அல்ட்ரா கிரைண்ட்+. இன்று, இந்திய இல்லத்தரசிகள் பாராட்டும் படைப்பாக, 'டேபிள் டாப்' ஆட்டுக்கல் புரட்சியில் இது முன்னணியில் திகழ்கிறது.

மிகச் சிறந்த வசதியை மேலும் சிறந்ததாக ஆக்க, இந்தியப் பெண்களுக்கு அல்ட்ரா வழங்கும் மற்றுமோர் அற்புதப் படைப்பு - அல்ட்ரா மிக்ஸர்- கிரைண்டர் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் இதுவும் சாதனை படைக்கும் சிறந்த செயல்திறனைக் கொண்டது.

அல்ட்ரா குடும்பம் உங்களை அன்புடன் அழைக்கிறது. வாருங்கள். நல்லதையே செய்வோம், அதையும் மேலும் மேலும் சிறப்பாகச் செய்வோம் என்பதை உலகுக்கு எடுத்துக் காட்டுவோம்.

எல்ஜி தயாரிப்பு

**எல்ஜி அல்ட்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**
எல்ஜி ஹவுஸ், திருச்சி ரோடு, கோயம்புத்தூர் 641 045
தொலைபேசி: 0422-316132, ஃபேக்ஸ்: 0422-311740
மண்டல அலுவலகம்: 45/1, [illegible] ரோடு, சென்னை-17 போன்: 8225735 / 36

Anugrah 2423/97 Tam

புதுயுக வசதி அல்ட்ரா. புதியதோர் அனுபவம் அல்ட்ரா.

ஏமாற்றிக்காதே."
சிரித்தான்.

"நல்ல உசரம்... எங்கண்ணா மாதிரி. மூக்கு தான் அவங்க ஜாடை... கண் அப்படியே உங்கப்பா..." என்றவள், "ஆமாம், நம்ம தெருவில் எத்தனை வீடுகள்?" என்றாள் கண்களைச் சுருக்கிக் கொண்டு...

"நாற்பது, நாற்பத்திரெண்டு இருக்கும். அதுக்கென்ன இப்போ?"

"நீ மெட்ராசுக்கு வந்த விஷயம் தெருவுக்கே தெரிஞ்சு இருக்கும், இல்லையா? இந்த அப்பார்ட்மெண்ட்டிலேயே முப்பத்தியாறு வீடுகள். ரெண்டாவது மாடியில் ஆறு மாசம் முன்னால் குடி வந்தவர் பேர் கூட யாருக்கும் தெரியாது. ராகவன் ஒரு மாசம் டெல்லி போனான். அந்த விஷயம் எதிர் ஃப்ளாட்காரனுக்கே பதினஞ்சு நாளுக்கப்புறம்தான் தெரியும். அடுத்த வீட்டில் கொலை விழுந்தால் கூட 'என்ன'ன்னு கேட்காத நாகரீகம்... நம்ம ஊர் மாதிரியில்லேடா?"

"அப்படியிருக்கும் ஊரில் உனக்கு என்ன ஒட்டுதல்... உன் பிள்ளையும் மருமகளும் ஒரு நாளைக்கு உன் கூடப் பேச அஞ்சு நிமிஷம் அபாயின்மெண்ட் தராங்க... பேரனும் வளர்ந்தாச்சு. அப்புறம் எது உன்னை இங்கே பிடிச்சு இழுக்கிறதாம்?"

"என் பேரன்தான். அந்தக் குழந்தைதான்."

"அவன் வளர்ந்தாச்சம்மா."

"ஊர் உலகின் கண்ணுக்கு அவன் ஆம்பிளை. வளர்ந்த வாலிபன். ஆனால் இப்போது அவன் இருப்பது ஒரு இக்கட்டான பருவம். ரெண்டும் கெட்டான் விடலைப் பருவம். பெரிய மனுஷன் போல ஷோ காட்டத் துடிக்கிற வயது. ஆனால் மனசால் திரிசங்கு வாழ்க்கை நடத்தும் குழந்தை வயது. இந்த வயசோட முதல் சத்ரு என்ன தெரியுமா? தனிமை தான்."

"இந்தப் பயல் காலையில் அரக்கப் பரக்க ஸ்கூலுக்கு ஓடிட்டு மத்தியானம் மூணு மணிக்கு வீடு வந்து சேருவான்.

இந்த நேரத்தில் வீடு காலியாக இருந்தால் அவன் புத்தி பல திசைகளில் போகும்டா. இந்த வயசில் பசங்களைச் சபலப்படுத்தும் விஷயங்கள் - பல வக்கிரமான புஸ்தகங்கள், விதவிதமான சேனல்களில் வரும் டீவி ப்ரோக்ராம்கள், நண்பர்கள் இன்னும் எத்தனையோ..."

"வீட்டில் ஏன்னு கேட்க ஆளில்லையென்றால் விபரீதமான சிநேகிதர்கள் வருவார்கள். அவர்களுடன் வெட்டியரட்டையில் ஆரம்பித்து பல புதுவித தேடல்களில் ஈடுபடத் தோன்றும். சிகரெட்... அதற்குள் அடைத்துக் கொள்ள வேறு பொருட்கள், ட்ரிங்க்ஸ், ஊசின்னு பசங்க சீரழிய எத்தனையோ வழிகள் இருக்கு... இதற்கான ஏதுவான நேரம் பள்ளிக் கூடம் விட்ட நிமிடத்திலிருந்து அப்பா அம்மா வீடு திரும்பும் ஆறு மணி வரைதான்."

"என்னை மாதிரி ஒரு கிழவி, 'ஏண்டா லேட்டு', 'டீவியை நிறுத்திட்டுப் படிடா... டெஸ்ட் வரதில்லியோ?' 'ஏண்டா முகம் வாடியிருக்கு? என்னடா உன் ஃப்ரெண்டோடு ஒரு மணி நேரமாய் குசுகுசுன்னு அரட்டை'ன்னு அப்பப்போ பிடுங்கினாலே போதும். இந்தக் குழந்தை தப்பு வழியில் மனசை சிதறவிட மாட்டான். என்னை மாதிரி ஒரு அறுவை வீட்டில் இருக்கிறாள் என்றாலே பிஞ்சில் பழுத்த சிநேகிதர்கள் உள்ளே வர யோசிப்பார்கள். நம்ம குழந்தை ஒரு ஆளாய் ஆகும் வரை, நல்லது கெட்டது புரியும் வயதை அடையும் வரை, இந்த புறாக்கூண்டு தாண்டா எனக்கு சொர்க்கம்... பிறகு நம்ம ஊரில் வந்து நிம்மதியாக தலையைச் சாய்ப்பேன்."

அம்மாவின் கோணங்கள் வித்தியாசமானவைதான். யதார்த்தமானவைகளும் கூட... ஊருக்குப் போய் இறங்கியதும் ரயில்வே ஸ்டேஷனில் எதிர்பட்ட வைத்தா கேட்டார்...

"எங்கேடா உங்கம்மா! வரும்போது அழைச்சிகிட்டு வரப் போறேன்னியே..." இழுத்தார்.

"அவளுக்கு அங்கே வேலையிருக்கு. அம்பியைக் கவனிக்கணும்."

---

கடந்த செப்டம்பர் மாதம் 21 ஆம் தேதி பெங்களூரில் புவனிகா ஆடிட்டோரியம் விழாக் கோலம் பூண்டது. Guild of Woman Acheivers (சுருக்கமாக GOW) என்று அழைக்கப் பட்ட மெம்பர்களால் நடத்தப்பட்டது. அன்று ஒரு புதுமையான, விருது வழங்கும் விழா! "பெஸ்ட் மாமியார் 97" நடந்தது. முதல் பரிசு பெற்றவர் ஸ்ரீமதி சத்தியபாமா. அவரை பார்த்தபோது ஒரே ஷாக். கண்கள் சரியாக தெரியாத முதியவர். இவர் தன் மகன், மருமகள், பேரக் குழந்தைகள் யாவருக்கும் தன் குறையைப் பொருட்படுத் தாமல் எல்லா விதத்திலும் உதவியாக இருந்து தன் மருமகளால் பரிசு பெற்றார். சபாஷ் சத்யபாமா. எல்லா பத்திரிகைகளிலும் மாமியார், மருமகளை கீரியும், பாம்பும் என விமர்சிக்கிறது. இதை உடைத்தெறிந்தது இந்த விழா.

— சரோஜா ஸ்ரீநிவாசன்

---

இன்றைய பெண்கள் அக் காலப் பெண்களிடமிருந்து உற்சாகம் பெற வேண்டும். அவர்கள் நடத்திய வாழ்க்கை முறையை இவர்களும் பின்பற்ற வேண்டும். இந்துப் பெண் கள் எப்பொழுதும் தார்மீக ஆன்மீகத் தத்துவங்களுக்கு முக்கியத்துவம் தர வேண்டும். எவ்வளவுதான் புதுமைக் கல்வியில் தேர்ச்சி பெற்றிருந்தாலும் ஆத்ம தத்துவத்தை மறக்காமல் உள் நோக்கை உள்ளொளியை வளர்க்கும் வேதாந்தத் தத்துவங்களைக் கற்பிக்கும் நூல்களையும் படிக்க வேண்டும். இப்படிப்பட்ட கல்வியைக் கற்காத பெண் ஆதாரமில்லாத (சிறிது அசைந்தாலும் விழுந்து நாசத்தை ஏற்படுத்தும்) பாறை போன்றவளே.

படித்த பெண்கள் தங்களைச் சுற்றியுள்ள மக்களுக்கும் சமுதாயத்துக்கும் தம்முடைய சக்தி, திறமை, நோக்கம், விருப்பம், மனப் போக்கு, இயல்பு, படிப்பின் தகுதி, வாழ்க்கை வசதி, ஒழுக்கம், பாண்டித்தியம் இவைகளுக்குத் தகுந்தபடி தம் மேல் மாசு படாமல் முடிந்த அளவு சேவை செய்யலாம். தனக்கோ தன் குடும்பத்துக்கோ தன் தாய் தந்தையர்களுக்கோ தன் சீலத்துக்கோ எந்தவிதமான அபகீர்த்தியோ அவமரியாதையோ நேரா வண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டும். சீலமற்ற பெண்கள் உயிரோடிருந்தாலும் இறந்தவர்களுக்குச் சமம்.

# உள்ளொளியை வளர்த்துக் கொள்ளுங்கள்!

பெண்ணானவள் ஆணை மிஞ்சியவளாகக் கருதப்படவில்லை. ஆணின் காலடியில் மிதிக்கப் படுபவளாகவும் இல்லை. அவனுக்குச் சரிசமமாக அவள் நிற்க வேண்டும். சும்மா அவனைப் போஷித்துப் பராமரிப்பதோடு அமையாது தோழியாக இருந்து அவனுடைய இன்ப துன்பங்களை எதிர் கொள்ள வேண்டும்.

மீண்டும் நான் வலியுறுத்துவது என்னவென்றால் படித்த பெண் குடும்பத்தைத் தானே நடத்த வேண்டும். குடும்பத்தவர்களைப் பராமரித்துப் போஷிக்கும் சுமையை எல்லாம் தானே தாங்க வேண்டும் என்பதே. தன்னலம் கருதாது பல பக்கங்களில் அன்பைச் செலுத்துவதால் பெறப்படும் ஆனந்தமானது அரியதோர் விழுமிய நிலைக்கு உயர்த்தும் அனுபவமாகும். அது மதிப்பு மிக்கதொரு சாதனையாகும்.

ஸ்ரீ சத்ய சாயியின் பிறந்தநாளை (நவம்பர் 23) யொட்டி அவருடைய அருள்மொழிகளிலிருந்து:

தொகுப்பு — மாலதி



• விரல் பதிவு ஓவியம்

நாம் அடிக்கடி வாழ்த்து அட்டைகளை அனுப்புவது இப்போது வழக்கமாகி விட்டது. கடைகளில் வாங்கி அனுப்புவதை விட நாமே மிக எளிய முறையில் அழகிய வாழ்த்து அட்டைகளைத் தயாரிக்கலாம்.

எல்லோராலும் மிக மிக எளிதாக செய்யவும் வரையக்கூடிய ஓவியங்கள் உள்ளன. இவற்றைச் செய்ய அதிகச் செலவோ, உழைப்போ தேவையில்லை. இதை வாழ்த்து மடலாகவோ (அ) வரவேற்பறையிலோ அலங்காரமாகவோ வைக்கலாம்.

### விரல் பதிவு முறை ஓவியம்

தேவையானவை :
சார்ட் (அ) அட்டை,
வண்ண பெயிண்ட்கள்.

சார்ட்டை வாழ்த்து மடலைப் போல் மடித்துக் கொண்டு மேற்பரப்பில் ஓவியம் வரையவும். வண்ணத்தைக் குழைத்து கொண்டு கட்டை விரலில் தடவிக் கொண்டு கைநாட்டை போல் பதியவைக்கவும்.

# நாமே செய்யலாம்!



• மெழுகு ஓவியம்

பின் மீன் போன்ற உருவம் வர செதில்கள், வால், கண் வரையவும். நீல வண்ணத்தில் நீர் அலைகள் வரைந்தால் மீன் ஓவியம் ரெடி.

இதே போல் பூக்கள், இலைகள் போன்றவற்றையும் விரல் பதிவுமுறையில் அமைக்கலாம்.



• காய்கறி ஓவியம்

### தென்னம் பன்னாடையில் ஓவியம்

தேவையானவை :
சார்ட் (அ) அட்டை,
தென்னம் பன்னாடை
வண்ண பெயிண்ட்கள்
பசை.

தென்னை மரத்தில் காணப்படும் வலை போன்ற பகுதியே பன்னாடை எனப்படும். இதைக் கொண்டு ஓவியம் அமைக்கலாம். முதலில் உங்களுக்குத் தேவையான ஓவியத்தை பன்னாடையில் வரைந்து அதனை சீராக வெட்டவும். பின் பொருத்தமான வண்ணம் தீட்டி சார்ட்டில் பசையின் மூலம் ஒட்டவும். இதோ ரெடி பன்னாடையில் ஓவியம்.

## ஸ்பிரே ஓவியம்

**தேவையானவை :**
சார்ட் (அ) அட்டை,
வண்ணப் பெயிண்ட்கள்
பழைய டூத் பிரஷ்,
பசை.

முதலில் ஓவியம் வரைந்து தனியே வெட்டி எடுக்கவும். படம் வெட்டிய பின் இருக்கும் வெற்றிடத்தாளை சார்ட்டில் வைத்து வண்ணம் தோய்த்த பிரஷ்ஷை கொண்டு கட்டை விரலால் நீவி விடவும். இப்போது துளித் துளியாக வண்ணங்கள் சிதறும். பின் மேலே வைத்த தாளை மெல்ல எடுக்கவும். இப்போது உங்கள் ஓவியம் ரெடி.

• ஸ்ப்ரே ஓவியம்



## காய்கறிகளில் ஓவியம்

*தேவையான பொருட்கள் :*
சார்ட் (அ) அட்டை,
வண்ணப் பெயிண்ட்கள்,
வெண்டைக்காய்.

சார்ட்டில் ஜாடியை போன்ற தாளை வெட்டி ஒட்டவும். பச்சை வண்ணத்தில் காம்பு இலைகள் வரையவும். வெண்டைக்காயை வெட்டி வண்ணத்தில் தோய்த்து பூக்களாக அமைக்கவும் இதோ பூச்செடி தயார். இதைப் போலவே நூக்கல், வெங்காயம், கத்தரிக்காய் காம்பு போன்ற காய்கறிகளிலும் ஓவியங்கள் அமைக்கலாம்.

- ஆர். வித்யா



• விரல் பதிவு ஓவியம்

## மெழுகு ஓவியம் (அ) மாஜிக் ஓவியம்

*தேவையான பொருட்கள் :*
சார்ட் (அ) அட்டை
மெழுகு
வண்ண பெயிண்ட்கள்.

முதலில் சார்ட்டில் மெழுகைக் கொண்டு உங்களுக்கு பிடித்த ஓவியம் வரையவும். பின் அதில் வண்ணம் தோய்த்த பிரஷ்ஷால் சீராக தீட்டவும். இப்போது நீங்கள் வரைந்த ஓவியம் பளிச்சென தெரியும். இதனை மாஜிக் ஓவியம் என்று கூறுவர்.



• தென்னம்பன்னாடையில் ஓவியம்

# போரடிக்காமல் பொருளாதாரம் படிக்கலாமா?

எப்படி தனிப்பட்ட மனிதனின் வாழ்க்கைக்கும் பணம் மிக மிக அவசியமோ அதே போல் ஒவ்வொரு அரசாங்கத்திற்கும் பணம்(நிதி) மிக அவசியமாகிறது. பணம், வெறும் நிர்வாகம் செய்வதிற்கில்லாமல், பொது மக்களுக்குச் செய்யும் நற்பணிக்காகவும், மேலும் நீண்ட கால நாட்டு நலனுக்காக முதலீடு செய்வதற்காகவும் தேவைப்படுகிறது.

இவ்வாறு பணம் புரட்டுவதற்கு மிக முக்கியமான வழிகளில் ஒன்று 'வரி.' 1996 - 97 ஆண்டு பட்ஜெட்டின் புள்ளி விவரப்படி இந்த ஆண்டிற்கான வருடாந்திர வருவாயில் கிட்டத்தட்ட 75% வரிமூலமாக வந்தவை. நேர்முக வரி மூலமாக ரூ. 37,003 கோடி, மறைமுக வரி மூலம் ரூ. 91,319 கோடி என்று பட்ஜெட் பட்டியல் கூறுகிறது. இதில் மாநிலங்களின் பங்கும் அடங்கும். இந்த வருவாய் இவ்வளவு முக்கியமாக இருப்பதால்தான் இது சர்ச்சைக்குரியதாகவும், நிறைய தெளிவு கனிவு கொண்டதாகவும் இருக்கிறது.

ஆண்டுதோறும் பணத் தேவை அதிகரித்துக் கொண்டே போவதால், அரசாங்கமும் அந்தச் செலவைச் சமாளிக்க வரிவிதிக்கப்படும் பொருளை/இலக்கை (விரிவுபடுத்துதல்) அகலப்படுத்திக் கொண்டே வருகிறது. அதாவது widening the tax base.

ஐந்தாண்டு முன்பு வரையில் உலகிலேயே மிக அதிகமாக வரிவிதிக்கும் நாடாக இந்தியா இருந்தது. இப்பொழுது வெளிநாட்டு முதலீட்டாளர்களை கவர்வதற்காகவும், நாட்டின் தொழில் துறையை ஊக்குவிப்பதற்காகவும் எல்லா வகை வரிகளும் படிப்படியாகக் குறைக்கப்பட்டுள்ளன. கூடவே இது வரையில் வரி செலுத்தச் செய்யும் விதத்தில் பல வகையான வருமானங்களையும் இத்துறையின் கீழ் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. இது எல்லாத் தரப்பு மக்கள்/வருமானத்தின் மீது சமமான வரி விதிப்பதற்கு ஏதுவாகும்.

இந்த மாதிரி, வரி செலுத்த வேண்டிய வருமானங்கள் அகலப்படுத்துவதற்கும்/ வருமான வரியின் அளவை குறைப்பதற்கும் இன்னொரு முக்கியமான காரணமும் இருக்கிறது. அதாவது வரி அதிகமாக அதிகமாக, வரி ஏய்ப்பும் அதிகரித்துக் கொண்டே போகிறது என்று புள்ளி விவரக் கணக்குப்படி தெரிகிறது. விளைவு? கறுப்புப் பணம். கறுப்புப் பணம் என்றால் என்ன? கறுப்புப் பணம் என்று ஒன்றும் தனியாக பெயின்ட் அடிக்கப்படவில்லை. கணக்கில் காட்டப்படாத பணத்தைத்தான் கறுப்புப் பணம் என்கிறோம். அதாவது குறிப்பிட்ட ஒரு நபரின் வருமானத்தில் இத்தனை சதவீதம் வரி கட்ட வேண்டுமென்றால் அந்த அளவு வரி கட்டாமலிருக்க வருவாயை குறைவாகக் காட்டியோ, செலவினை அதிகமாகக் காட்டியோ நிகர வரி விதிக்கப்படும் தொகையைக் குறைத்துக் கொள்வதாகும். இதனால் அரசாங்கத்திற்கு

ஒருபுறம் அந்த அளவு பண வரவு குறைகிறது. ஆனால் அதை விட பெரிய இழப்பு, கணக்கில் காட்டப்படாத பணம் பதுக்கப்படுகிறது. அதாவது நாட்டின் பொருளாதாரப் புழக்கத்திற்கு வராமல் ஏதோ ஒருவகையில் மறைக்கப்படுகிறது. இது இன்னும் பாதகம். ஏனென்றால் நாட்டில் நிதிப் பற்றாக்குறை இருக்கும் இத்தருவாயில் ஒவ்வொரு ரூபாயும் உருப்படியான, பொருளாதார தேவைக்கு உபயோகப்படுத்தப்பட்டால் தான் நாட்டிற்கு நல்லது.

இந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கையில் ஓரளவு தேவைக்கு மேல் தங்கத்தில் முதலீடு செய்வது புத்திசாலித்தனம் அல்ல என்பது புரியும். அந்தக் காலத்தில் வேறு வழி முதலீடு இருக்கவில்லை. அதனால் தங்கத்திலும், வெள்ளியிலும் முதலீடு செய்தார்கள். இப்பொழுது நிலவரம் அப்படி இல்லையே. நாட்டின் பொருளாதார நன்மையை முன்விட்டும், தனிமனிதனின் நிதி முன்னேற்றத்தை முன்விட்டும் பார்த்தால் தங்கத்தை விட மற்ற வழிகளில் முதலீடு செய்வதுதான் நன்மை என்று புலப்படும். சரி மறுபடியும் வரித்துறைக்கு வருவோம், மக்களின் வருமானத்தில் வரிவிதிப்பது எப்படி ஆரம்பமாயிற்று என்று பார்ப்போம். சுதந்திரத்திற்கு முன்பே, ஆங்கிலேய நாடாளுமன்றம் மூலம் பிறப்பிக்கப்பட்ட 'Government of India Act 1935' சட்டத்தின் கீழ், வரி வசூலிக்க ஆரம்பிக்கப்பட்டது. சுதந்திரம் கிடைத்த பிறகு நமது அரசாங்கத்திற்கு வரிவிதிக்கும் உரிமை

*தீபாவளிக்கு செய்யும் சோமாசியில் காரட், பீட்ரூட், பரங்கிக்காய் இவை மூன்றையும் பொடியாக நறுக்கி மிக்ஸியில் நைஸாக அரைத்து வெல்லம் சேர்த்து இரண்டு ஸ்பூன் நெய் சேர்த்து அடுப்பில் வைத்துப் பூரணமாகக் கிளறி, வைத்து மூடி செய்தால் சோமாசி சுவையாக இருக்கும்.*

*- வசந்தி ரவிச்சந்திரன்*



நமது constitution மூலம் வழங்கப்பட்டுள்ளது.

வரி விதிக்கும் உரிமை இந்தியாவில் மூன்று அடிப்படையிலிருந்து இயங்குகிறது. உதாரணமாக ஒரு சில வரிகள் மத்திய அரசு மட்டுமே விதிக்கலாம். வருமான வரி, கலால், சொத்து வரி மத்திய அரசின் கீழ் வருகிறது. விற்பனை வரி, வேறு நுகர்பொருட்களுக்கு மாநில அரசு வரி விதிக்கவோ, வரிச் சலுகை அளிக்கவோ உரிமை அளிக்கப்பட்டுள்ளது. Property Tax, Corporation Tax, Entry Tax என்று இதர சில வரிகள் மாநகராட்சி வழங்கலாம் என்றும் பிரிக்கப்பட்டுள்ளன.

வரி இரண்டு வகையாகப் பிரிக்கப்படுகிறது. அதாவது தனிமனிதனை பாதிக்கப்படும் விதத்திலிருந்து இரண்டு கண்ணோட்டங்களில் பார்க்கலாம். அதாவது நேர்முக வரி, மறைமுக வரி. வருமான வரி, சொத்து வரி, பரிசுத் தொகையில் வழங்கும் வரி நேர்முகமாக தனி மனிதனின் வருவாயைப் பாதிக்கிறது.

விற்பனை வரி, சுங்க வரி, கலால் இவையெல்லாம் மறைமுகமாகப் பாதிக்கிறது. அதாவது மேற்கூறிய இந்த வரிகள் உயர்த்தப் பட்டால், அது அந்தப் பொருட்களின் விலையில் பிரதிபலிக்கும். அந்த விலை உயர்வு கடைசியில் தனிமனிதனை போய்ச் சேரும்.

உண்மையில் எல்லாப் பொருளாதார நியதியைப் போல், வரிவிதிப்பதற்கும் பொருளாதார நியாயம் இருக்கிறது. அது என்னவென்று பார்ப்போம். அதாவது எந்த அளவு சமுதாய நன்மைக்காக பணம் செலவிடப்படுகிறதோ அந்த அளவுதான் மக்களிடமிருந்து வரி வசூலிக்கப்பட்டிருக்க வேண்டும். இதையே வேறு விதமாகச் சொன்னால் தனி மனிதனிடமிருந்து வசூலிக்கப்பட்ட ரூ 1 சமுதாய நன்மையாக 100 பைசாவாக பிரதிபலிக்க வேண்டும். ஆனால் நடைமுறையில் அந்த அளவிற்கு வரிப்பணத்தால் 100% நன்மை மக்களை சென்றடைவதில்லை; அதை எதிரும் பார்க்க முடியாது.

ஓரளவேனும் முன்னேறிய நாடோடு ஒப்பிடுகையில் வரி நிலவரங்கள் கிட்டத்தட்ட ஒன்று போல் இருக்குமானால் நல்ல நிலைமை என்று அர்த்தம் கொள்ளலாம். ஏனென்றால் மிக அதிகமான வரி விதிப்பு இப்போதைய உலகப் பொருளாதார நிலைமையின்படி பார்த்தால் முன்னேற்றத்தின் தடையாகும். எல்லா அரசாங்கமும் தங்கள் தாராளமயமாக்குதலை உலகமயமாக்குதலை ஊக்குவிப்பதாகவும் அங்கீகரிப்பதாகவும் காட்டிக் கொள்ள விரும்புகின்றனர்.

நமது அரசாங்கம் இன்னும் ஒரு படி மேலே சென்று VDIS என்கிற திட்டத்தையும்

# இந்த செய்தி மகளிருக்கு மட்டுமே!

உங்களுடைய இயல்பான திறனைப் பயன்படுத்தி குடும்ப வருமானத்தை அதிகரியுங்கள்.

## சிறு சேமிப்பு முகவர் ஆகுங்கள்



பல குடும்பங்களிலும் பெண்களே சேமிப்புக்கு முன்னுதாரணமாக உள்ளனர். அவர்கள் இதுபோலவே நாட்டிற்கும் வழிகாட்டியாக விளங்கி நன்மை புரிவதுடன், வீட்டு வருமானத்தை அதிகரிக்கலாம்.

**சிறு சேமிப்பு இயக்கத்திலே முகவராகச் சேருங்கள்.**

5-ஆண்டு அஞ்சலக மாதாந்திர ரெக்கரிங் டிபாசிட் திட்டத்தின் கீழ் சேமிப்பாளர்களைச் சேர்த்திடுங்கள்.

10வது வகுப்பு வரை படித்துள்ள பெண்களுக்கும் இது முழுநேர பணியாக உதவிடும்.

இல்லத்தரசிகள் கூட இந்தப் பணியை பகுதி நேர வேலையாகச் செய்திடலாம்.

முயற்சியின் வெற்றிக்கு ஏற்ற பலன். டிபாசிட் தொகைக்குத் தகுந்த வருமானம்.

உதாரணமாக, மாதம் ரூ. 25,000/- வசூல் செய்யும் பெண் முகவர் மாதம் ரூ.1,875/- வருமானமாகப் பெறலாம்.

சென்னை மாநகர் வாழ் மகளிர் தொடர்பு கொண்டு விண்ணப்பிக்க வேண்டிய முகவரி:

**துணை இயக்குநர்**
**சிறு சேமிப்புத் துறை**
சென்னை மாநகராட்சி, ரிப்பன் கட்டிடம்,
சென்னை - 600 003

**மண்டல இயக்குநர்**
**தேசிய சேமிப்பு நிறுவனம்**
இராஜாஜி பவன்,
பெசன்ட் நகர், சென்னை - 600 090

ஏனைய மாவட்டங்களில் வாழும் மகளிர் விண்ணப்பம் செய்திட அந்தந்த மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளரை (சிறு சேமிப்பு) அணுகவும்.



வெளியீடு :
ஆணையர், சிறு சேமிப்புத் துறை,
சென்னை - 600 006



DIPR/948/DIS/97

அமுல்படுத்தியிருக்கிறது. அதாவது Voluntary Disclosure of Income Scheme. இதுவரை கருப்புப் பணமாக முடக்கியிருந்தவர்கள் அதனை கணக்கில் காட்டி, 30% வரி செலுத்தி விட்டு அதைப் புழக்கத்தில் கொண்டு வரலாம். இதனால் அரசாங்கத்திற்கு கருப்புப் பணம் வெளியில் கொணரும் நன்மை உண்டு. இந்தத் திட்டத்தில் வரி செலுத்துபவருக்கு டி.வி. விளம்பரத்தில் வருவது போல் "30% வரி; 100% நிம்மதி". இந்தத் திட்டத்தின் மற்றொரு சிறப்பம்சம் அந்நிய செலாவணி மோசடி செய்யப்பட்ட கருப்புப் பணத்தைத் தவிர மற்ற எல்லா சட்டத்தின் கீழ் ஏய்ப்புச் செய்த பணத்தையும் வெள்ளையாக மாற்றலாம். அரசாங்கத்தின் எதிர்பார்ப்பின்படி இப்பொழுது நாட்டில் சுமார் ஐம்பதாயிரம் கோடி முதல் நூறாயிரம் கோடி ரூபாய் வரை கருப்புப் பணம் பதுங்கியிருக்கிறது.

இதே போல் 1976-ஆம் ஆண்டில் இந்த மாதிரி Voluntary Disclosure of Income and Wealth Act - 1976 என்ற திட்டம் அமுலுக்கு வந்தது.

டிசம்பர் கடைசியுடன் இந்த திட்டம் VDIS முடிவடைகிறது. இந்தத் திட்டத்தின் வெற்றி பிற்பாடுதான் தெரியும். வேறு சில நாடுகளும் இந்த மாதிரி தானாக கருப்புப் பணத்தின் மேல் வரி செலுத்தும் திட்டத்தை அமுல்படுத்தியுள்ளனர். உதாரணமாக பாகிஸ்தான் இந்த வகைத் திட்டம் அமுல் செய்து வெறும் 7.5% வரி செலுத்தினால் போதும் என்றும் அறிவித்தது.

மற்றொன்றும் இங்கு குறிப்பிட வேண்டும். நமது வரிகளை நிர்ணயிக்கும் எல்லா வரிச் சட்டங்களும் திருத்தப்பட வேண்டும்; காலாவதியாகி விட்டன (outdated) என்கிற கருத்தும் நிலவுகிறது. உதாரணமாக இந்திய வருமான வரிச் சட்டம் - 1962 - எடுத்துக் கொண்டால் எவ்வளவோ, அடித்தலும், திருத்தலும் வந்து, ஒருவகைக் கருத்து; அதற்கு எதிர்மறை கருத்து என்று வந்து நிறைய குழப்பங்கள் ஏற்பட்டது போல் இருக்கிறது. இவையெல்லாம் நீக்கி பாமர மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் படியான வருமான வரிச் சட்டம் கொண்டு வரப்பட வேண்டும். மேலும் சட்டம் எளிமையாகவும் ஓட்டை இல்லாமலும் இருந்தால்தான் வரி ஏய்ப்பு குறையும்.

இவ்வாறு மக்கள் முன்வந்து நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் பங்கேற்றால்தான் நமது பொருளாதாரம் உயரும்.

பொருளாதாரத்தைப் பற்றி எழுதுவதென்றால் எழுதிக் கொண்டே போகலாம். ஆனால் "போரடிக்காமல் பொருளாதாரம்..." என்கிற கட்டுரை "போரடிக்கும் பொருளாதாரமாக" மாறி விடக் கூடாது என்ற எண்ணத்துடன் இந்தக் கட்டுரையை முடிக்கிறேன்.

- ஜெயந்தி ஸ்ரீநிவாசன்

## பண்டிகைக்குச் சில டிப்ஸ்

பண்டிகை நாட்களில் 'ஷாப்பிங்' செல்லும் போது, மொத்த ரூபாய்களையும் ஒன்றாகக் கொண்டு செல்லாமல், பிரித்து எடுத்துக் கொண்டு, தனித்தனி இடங்களில் வைத்துக் கொள்ள வேண்டும். குடும்பத்தினர் சேர்ந்து செல்லும் போது, வளர்ந்த பிள்ளைகளானால், சட்டையின் உட்புறம் வைக்கச் சொல்லிக் கொடுக்கலாம். பெண்கள், சிறிய மெல்லிய 'பர்ஸ்'களில் வைத்து 'ஜாக்கெட்' உட்புறங்களில் வைத்துக் கொள்ளலாம்.

கைப்பையை எடுத்துச் செல்லும்போது, அதை நம் முன்புறம் சேர்த்துப் பிடித்துக் கொண்டு செல்வது நல்லது. பஸ்களில் செல்லும் போது, ஒயர், பிளாஸ்டிக் கூடைகளில் பணம் போட்டு வைத்துள்ள 'பர்ஸ்' 'கைப்பை'களை வைக்க வேண்டாம்.

- சி. பூங்கோதை

# பந்தங்கள்

மடங்கியிருந்த அம்மாவின் காலை நீட்டி, நீவி விட்டு போர்வையை இழுத்துப் போர்த்தி விட்டான் மாது.

"காலை மடக்கின்டே வச்சுக் காதம்மா எப்பவும் முடிஞ்ச மட்டும் நீட்டியே வச்சுக்கோ. ரொம்ப நீட்டி மடக்கி பண்ணினாலும் சேர்ந்த எலும்பும் விட்டுப் போயிடும் இடுப்புல. அப்புறம் ஒண்ணும் பண்ண முடியாது."

ம்! என்று பெருமூச்சை விட்டபடியே சிரித்தாள் அலமு.

"எனக்கென்னப்பா இனிமே. ஓடியாடற வயசா? எலும்பு வளர்ந்து, சேர்ந்து... இப்பவெல்லாம் காலை நீட்டி மடக்கறதே முடியலை. வலிக்கறது என்ன பண்றது? கட்டில்ல விழுந் தாச்சு. இனிமே கட்டோடதான்."

அம்மாவின் வருத்தம் புரிந்தது. ஓடியாடிக் கொண்டிருந்தாள் அலுக்காமல். ஆறு மாதத்திற்கு முன் வழக்கம் போல கையில் தூக்குக் கண்ணாடியும், நிறைந்த பேப்பருமாக ஹரே கிருஷ்ணா! என்று உட்கார்ந்தவள்தான் கீழே குனிந்து, எழ முடியவில்லை. இடுப்பு எலும்பு நழுவியிருப்பது எக்ஸ்ரேயில் டாக்டர் காண்பித்தவுடன் புரிந்தது. அம்மா இந்த ரூமே கதியாகி விட்டாள் பாவம்.

"மணி இரண்டரை. ஹரே மூணாகப் போறதே... காப்பி குடிச்சுட்டியாம்மா?"

நெற்றியை நீவி விடும் மகனை வாஞ்சையோடு பார்த்தாள் அலமு.

"இல்லப்பா. எதிர் பார்த்துண்டேயிருக்கேன். கலந்துண்டு வரட்டும். நீதான் போயி எடுத்துண்டு வாயேன். தனியாக கிடந்து அல்லாடறது அந்தப் பொண்ணு. கிரைண்டர் ஓட விட்டிருக்காப் பாரு. சத்தம் வரது."

கட்டிலில் படுத்தபடியே எந்த அறையில் என்ன நடக்கிறது என்று அறிந்து கொள்ளும் அம்மா. அதற்காகவே பாவம் பேச்சையும் வாங்கிக் கட்டிக் கொள்வாள் புவனாவிடம்.

"அப்பாடி, பகவானே! காலைத்தான் உடைச்சு போட்டிருக்கு. பெருக்குதான் கட்டில்ல கிடக்கு சரீரம். காது, பாம்பு தோத்துது. ஒண்ணு பேச முடியறதில்லை. பக்கத்து வீட்ல என்னிக்கி இருந்திகைன்னு கேட்டா இன்னைக்கிதான்னு சொன்னேன். அதுவும் மெள்ளதான். அந்த வார்த்தையைக் காதுல வாங்கின்டு கிழம் கூத்தடிக்கறது. இன்னைக்கி இருந்திகை என்னைக் குழப்பாட்டுன்னு. எங்க போய் சொல்றது! உங்கம்மா படுத்தற பாட்டை..."

புவனா இப்படி அரைமணி கத்தினாலும் வாயைத் திறக்க மாட்டாள் அம்மா.

சமையலறைக்குள் நுழைந்தான். நிஜமாகவே ஓடிக் கொண்டிருந்த கிரைண்டரை



நிறுத்திவிட்டு மாவை அள்ளிக் கொண்டிருந்தாள் புவனா.

"புவனா! மணி மூணாயிடுச்சு. அம்மாவுக்கு காப்பி கொடுக்கலையா!"

இப்படிக் கேட்டால் குட்டி பூகம்பம் கிளம்பும் எனத் தெரியும். ஆனாலும் கேட்காமல் இருக்க முடியாது. நினைவு தெரிந்த நாளாய் அம்மாவை டாணென்று இரண்டு மணிக்கெல்லாம் அடுப்பு மூட்டி புதிதாய் டிகா



ஷனை போட்டு காப்பி குடித்து பார்த்தவளாயிற்றே.

புவனா மாவை அள்ளுவதை விட்டு விட்டு கண்களால் அவனை அளந்தாள்.

"ஆஹா! அதானே பார்த்தேன். என்னடா வாலை சுருட்டிக்கிட்டு படுக்கைல சப்தம் போடாம கிடக்கேன்னு! அதுவாலயா முடியும். ரிப்போர்ட் சொல்லியாச்சா உங்கிட்ட. உம் பொண்டாட்டி சோறு போடலை. காப்பி கொடுக்கலை. உம் பொண்டாட்டி குளுப்பாட்டி விடலைன்னு. இங்கற சோறு சேர்க்கறதுக்கு ஏதாவது செய்ய வேணாமா?"

புவனா பெரிதாகக் கத்த மாதுவிற்குக் கோபம் வந்தது.

"ஏய்! சும்மா கத்தாதே. அம்மா, பாவம்! ஒன்னுமே சொல்லலை..." - அதட்டினான்.

"ஆஹா... ஒன்னுமே சொல்லலை என்றவள் கதவருகே நகர்ந்து நின்று தலையை வெளியில் நீட்டி அம்மா கிடக்கும் ரூமைப் பார்த்தபடியே கத்தினாள்.

"போயி உங்கம்மாகிட்ட சொல்லுங்க. நான் ஒன்னும் இங்க சடுகுடு விளையாடிட்டிருக்கலை. நாய் மாதிரி இடந்து உழைக்கறேன். கொஞ்ச நேரம் படுக்கக் கூட முடியறதில்லை. பத்து நிமிஷம் லேட்டானா பறந்தடிச்சுக்கிட்டு கோன் மூட்றது. என்னவோ காப்பி குடிக்கலேன்னா தொண்டைக் காய்ஞ்சு சாவே வந்துடும்னு."

புவனா கத்திக் கொண்டே போக அம்மா பெரிதாக இருமினாள்.

"ஆஹாஹா! இருமிக் காட்றதைப் பாருங்க. பாம்பு செவி. ஊசி விழுந்தாலே தெரிஞ்சு போயிடும். நான் கத்தறதா காதுல விழுவாது!"

"ஏய்! மாது வாசல்ல ஆட்டோ சப்தம் கேட்கறது பாரு. யாரோ வந்திருக்கா போய்ப் பாரு."

இத்தனை அமர்க்களத்திலும் அம்மாவின் சொற்கள் அவனுக்குச் சிரிப்பை வரவழைக்க புவனா ஓங்கி தன் தலையில் அடித்துக்

உமா குமார்

கொண்டான் ஏதேதோ முனகியபடியே.

ஆட்டோவிலிருந்து மாமனார் இறங்கி பணம் கொடுத்துக் கொண்டிருக்க—

உள்ளே ஓடிக் குரல் கொடுக்கிறான்.

"புவனா! உங்கப்பா வந்திருக்கார்" - திரும்ப அவன் வெளியில் ஓட, புவனாவின் முகம் ஆயிரம் வாட்ஸ் பல்பாய் மலர்ந்தது. கூடவே மாமியாரின் குரல்.

"புவனா! உங்கப்பாவுக்கு டிபனை பண்ணேன்னு நேத்தைக்கி மீந்து போன அடை மாவைத் தட்டி வைக்காதே. காடியாப் புளிச்சிருக்கும். வயசான காலத்துல பாவம். ரவை கரைச்சு தோசையா வார்த்துப் போடு. மாதுவைப் புதுப் பால் வாங்கிண்டு வர சொல்லு காப்பிக்கு."

'அட சனியனே! கொஞ்சம் வாயை மூடு. எங்கப்பா! அவருக்கு என்னென்ன பண்ணணும்னு எனக்கு சொல்லித் தர வேணாம்!' - என்று சொல்வதற்காக வாயைத் திறக்கப் போனவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். அப்பா உள்ளே வந்து விட்டார் இதோ.

"வாங்கப்பா! லெட்டரே போடலையே?"

"எப்படிம்மா இருக்கே? செளக்யமா ம்! இங்க நாளைக்கி ஒரு கல்யாணம். சம்பந்தியம்மாளையும் பார்க்க வரவேயில்லை பாவம். அதா அவங்களையும் பார்த்துட்டு அப்படியே கல்யாணத்துக்கும் போயிட்டு வரலாம்னு கிளம்பி வந்தேன்.

என்ன மாப்ள! அம்மா எப்படியிருக்காங்க இப்ப? இப்படி ஆயிடுச்சே, ம்!"

"எல்லாம் பகவான் விட்ட வழி. நாம என்னத்த செய்யறது!" - அம்மாவின் குரல்.

மாது வாயைத் திறப்பதற்குள் அம்மாவின் குரல் அசரீரியாய் ஒலிக்க—

மாது மனைவியைப் பார்த்தான். அவள் பல்லை சப்தமின்றி நறநறத்தாள்.

மாமனாரை அழைத்துக் கொண்டு அம்மாவின் அருகே போனான்.

"என்ன இப்படி ஆயிடுச்சு. போங்கச்சு! புவனா லெட்டர் எழுதினதுலேந்து கிளம்பிக் கிட்டிருக்கேன். முடியலை. இப்ப எப்படி இருக்கீங்க?"

வாஞ்சையோடு விசாரித்தார் சம்பந்தியம்மாளை.

"எப்படியோ போங்க. காலை ஒடிச்சு கட்டில்ல போட்டுப்புட்டான் பகவான். தேவையா இதெல்லாம்? ஒருத்தருக்கு ஒண்ணு செய்ய முடியாம, ரெண்டு பேருக்கும் பாரமா போயிட்டேன் மொத்தத்துல."

"அப்படியெல்லா சொல்லாதீங்கம்மா! ஏதோ ஆகியிருக்க வேண்டாம் இப்படி நடந்து போச்சு. சீக்கிரம் நல்லாயிடுவீங்க பாருங்க! டாக்டர் என்ன சொன்னாரு? பார்த்தாரா?"

"பார்க்கறதா? அவன் படிச்சதெல்லாம் பண்ணிப் பார்த்துட்டான் இந்த ஆறு மாசத்துல. ஏதோ, கடல் மணலை மூட்டையா கட்டி காலுல தொங்கவிட்டான். அப்புறம் பார்த்தான் காலையே ஆகாசத்துல கட்டி வச்சான். அப்பவும் முடியலை. கடைசியா மாதுவைக் கூப்பிட்டு இடுப்புல ஏதோ கப்பையப் போடு றேன் உங்கம்மாவுக்குன்னு அதையும் போட்டான். இங்க கடைசில திருதிருன்னு முழிச்

**பண்டிகைக்குச் சில டிப்ஸ் :**

பண்டிகைக் காலங்களில் கடைகளில் 'பாக்கெட்' செய்து வைத்திருக்கும் பருப்புகள், பொட்டுக்கடலை வாங்கும் போது மிகவும் கவனமாக எந்தக் கடையானாலும் பில் அல்லது கடைக்காரர் கையெழுத்துடன் விலைப்பட்டியல் வாங்கி வைத்துக் கொள்வது நல்லது. பண்டிகை நாட்கள், எப்படியும் விற்று விடலாம் என்று ஒருசில கடைக்காரர்கள் மிகவும் மோசமான பூச்சி அரித்த பொருட்களை (பருப்பு வகைகள்) 'பாக்கெட்' செய்து விற்று விடுகிறார்கள். பாக்கெட் பிரித்துப் பார்த்தால் பூச்சி அரித்து ஓட்டை ஓட்டையாக உள்ளது. சென்று காட்டினால் எங்கள் கடையில் இது போல் விற்க மாட்டோம் என்று வாங்கிக் கொள்ள மறுத்து விடுகின்றனர். பில் இருந்தால் இந்தப் பிரச்னை ஏற்படாது. சகோதரிகள் உஷாராக இருக்கவும்.



- சி. பூங்கோதை

## பண்டிகைக்குச் சில டிப்ஸ்

ஒருசிலருக்கு மைசூர் பாகு செய்வதில் சிரமம் ஏற்படும். பலமுறை செய்தபோதும் சரிவர அமையாது. கடலை மாவை வறுத்து (வெறும் வாணலியில்) பின் பாகு எடுத்துச் செய்தால் நன்றாக வரும்.

மைசூர் பாகு செய்யும்போது பாகு எடுப்பதில் சிரமமே இல்லை. பாகு காயும்போது கொதி நிலை மாறி, நுரை நுரையாக வரும்போது, மாவைக் கொட்டிக் கிளற வேண்டும். அல்லது கையில் பாகு தொட்டுப் பார்த்தால், ஆட்காட்டி விரல், கட்டை விரலில் வைத்து ஒட்டிப் பிரித்து எடுக்கும் போது இரண்டு மூன்று நூல் பிரிந்தால் பாகு ரெடியாகி விட்டது.

மைசூர் பாகிற்கு மாவு கொட்டிக் கிளறும்போது சிறிது நேரம் வரை இளந்தீயில் கிளற வேண்டும். ஊற்ற வேண்டிய நெய் அல்லது டால்டாவை மாவு கொட்டியவுடன் ஊற்றி விடாமல் சிறிது சிறிதாக இடைவெளி விட்டு ஊற்றிக் கிளற வேண்டும்.

அப்படிக் கிளறும் போது, பதம் தெரியாமல் சற்று முன்பாகவே எடுத்துத் தட்டில் கொட்டி விட்டு, வில்லைகள் போட வரவில்லை என்றால் பரவாயில்லை. மீண்டும் பாத்திரத்தில் போட்டு, இளந்தீயில் மேலும் சிறிது நேரம் கிளறினால் கெட்டிப் பாகு. நெய் வெளிவரும் சமயம் உடனே எடுத்துத் தட்டில் கொட்டி பரப்பி விட வேண்டும். சிறிது ஆறவிட்டு வில்லைகள் போடலாம்.

– சி. பூங்கோதை

"வர்றேம்மா! மதுராந்தகம் வரைக்கும் போகணுமே இன்னமும். இவங்களை இதே மாதிரி நல்லாப் பார்த்துக்க. என்ன! சந்தோஷமாயிருக்கும்மா!"

புவனா மௌனமாய் மாமியாரின் கட்டிலருகே வந்தாள் திரும்பி.

மௌனமாய் அருகே அமர்ந்தவள் அடுத்த நொடி குலுங்க ஆரம்பித்தாள்.

"நொடிக்கு நூறு தடவை உங்களைத் திட்டிகிட்டிருக்கேன். தேள் மாதிரி கொட்டிகிட்டிருக்கேன். என்னென்னவோ சொல்றேன். எல்லாத்தையும் விட்டுட்டு அப்பாகிட்ட என்னைப் பத்தி."

முடிக்க முடியாமல் குலுங்கியவள் தலையை மெலிதாய் ஒரு கரம் வருடியது.

"அப்பாகிட்ட உன்னைப் பத்தி நல்லா என்னத்த சொன்னேன். நீ செய்யாததையா! தினமும் மாய்ஞ்சு, மாய்ஞ்சு எனக்கு நீ செய்யறதைத்தானம்மா சொன்னேன். மத்ததெல்லாம் தூசி எனக்கு."

"அத்தை!"

"ஆமாம்மா! உங்கப்பா முன்னால உன்னைப் பேசிட்டு, நாளைக்கு யாரு உங்கப்பாவா சோறு போடப் போறாரு எனக்கு? நீ பேசும் போதெல்லாம் குழந்தை விவரம் பத்தலை இதைத்தான் நினைச்சுக்குவேன்."

"அத்தை! உங்க மனசு புரியாம நான். ச்.."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. சின்னப் பொண்ணு நீ தினமும் மாடு மாதிரி உழைக்கறே. கோபப்படறே. பாவமா விழுந்து கிடக்கறேன்! ஒரு காய்கறி நறுக்கி கொடுக்கக் கூட முடியாம. ஒரு வாய் தண்ணி வேணும்னா கூட புவனாவைத்தானே கூப்பிடறேன். அது தப்புதானே!"

"இல்லத்தே..!"

"அதோடம்மா! பந்தமகறது அதுதான். உரிமையோட கத்தறேன்னு நினைக்கக் கூடாதே. சொந்தபந்தமுன்னு சொல்லிகிட்டா சரியாப் போச்சா!

மத்தவங்க செய்யற நல்லதுகளை மனசு பூரா வாங்கி வச்சுகிட்டு, கைகோர்த்து, விட்டுக் கொடுக்காம அனுசரிச்சு போனா, மத்ததெல்லாம் தூசியம்மா. பூக் கண்ணாடியை வச்சுகிட்டு குறை பார்க்கறேன்னு எதுக்கு அலையணும்? சொல்லு! அது அசிங்கம்மா!"

புவனா இப்போது தெளிவாய் இருந்தாள்.

"இருங்கத்தே! புது புடவையும் போட்டு தலைவாரி எடுத்து வச்சிருக்கேன். காப்பி கலந்து கொண்டு வரேன்!" - எழுந்தாள் கண்ணைத் துடைத்துக் கொண்டு.

புவனாவின் வார்த்தைகள் காதில் விழ பின்னால வந்து நின்ற மாது ஆச்சரியத்தோடு தன்னைத்தானே ஒரு தடவை கிள்ளிப் பார்த்துக் கொண்டான் நிஜமா என்று.

**வித்தியாசமான காம்பினேஷன்**

**இட்லிக்கு தொட்டுக் கொள்ளும் மிள காய் பொடியை மோர் சாதத்திற்குத் தொட்டுக் கொள்ளுங்கள்... சூப்பராக இருக்கும்.**

**– சுலோசனா பார்த்தசாரதி**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

மீது உள்ளதோ அவ்வளவுக்கவ்வளவு கிரகங்களின் ஆதிக்கம் வெளிப்பட்டு செயல்படுகின்றது. மிகவும் அபரிமிதமான ஒரு தனிப்பட்ட நிறத்தின் தன்மையை கற்களில் செலுத்துவதின் மூலம் அல்லது இயற்கையாக செலுத்தப்படுவதின் மூலம் நவரத்தினங்கள் உருவாகி இருக்கின்றன. நிறம் ஏற்றப்பட்ட சிவப்பு நிற கண்ணாடிக்கும், உயர்ந்த பவழத்திற்கும் ஒரே மாதிரியாக வண்ணம் இருந்தாலும், கண்ணாடிக் கல்லானது எந்தவிதத்திலும் நன்மை பயக்காது. ஆனால் செவ்வாய் பகவானின் கல்லான பவழம், சிவப்பு வண்ணத்தின் மிகவும் அபரிமிதமான ஒருமுனைப்படுத்தும் நிலையாகும். இவ்வாறு ஒவ்வொரு நவரத்தினக் கல்லும் தன்னுடைய தன்மையை வண்ணங்களின் அபரிமிதமான ஒருமுனைப்படுத்தும் நிலையான Concentrated State-ல் மக்களுக்கு அதனை உபயோகப்படுத்து பவர்க்கு நன்மையை ஏற்படுத்துகின்றது.

உதாரணமாக சூரிய பகவானுக்கு மாணிக்கமும், சந்திர பகவானுக்கு முத்து மற்றும் சந்திர காந்தக் கல், புதனுக்கு பச்சைக் கல், குரு பகவானுக்கு மஞ்சள் புஷ்பராகம், சுக்கிர பகவானுக்கு வைரம், ராகுவிற்கு கோமேதகம், கேதுவிற்கு வைடூரியம் ஆகும். ஆனால் நாம் ஏற்கெனவே கூறியபடி எந்த நிறத்தையும் வெளிப்படுத்தாத உயிர்தன்மையற்ற கறுப்பு வண்ணமானது சனிபகவானுக்கு உரியதாக இருந்தாலும் கருநீலக்கல்லானது அவருக்கு மிகவும் உரியதான கல்லாக உள்ளது. எனவே நன்மைகளை அளிக்கும் நீலக்கல்லை, சனிபகவானின் தசா புக்திகளிலும், கோசாரப் படி ஏழரை சனி, அஷ்டமத்துச் சனி உள்ள காலங்களிலும் ஒருவருடைய ஜாதகத்தில் சனிபகவானின் இருப்பு சரியில்லாமல் இருந்தாலும் அணிந்து எல்லாவித நன்மைகளையும் பெறலாம்.

பொதுவாக வண்ணங்களின் இயற்கைக் குவியலான நவரத்தினங்களை மோதிரமாக அணிந்து நாம் நவக்கிரஹங்களின் நன்மைகளைப் பெறலாம். இந்த விலை உயர்ந்த கற்களை எல்லோராலும் அணிவது என்பது முடியாமல் இருக்கலாம். அதற்கு பதிலாக வண்ண தெரபி முறையிலும் மற்றும் வேறு சில முறைகளின் மூலமாகவும் நன்மைகளை அடையலாம். உதாரண முறையாக ஆரஞ்சு நிற ஆடைகளை ஞாயிற்றுக் கிழமைகளில் அணிந்து சூரிய பகவானின் அருளைப் பெறலாம். இதே போன்று ஒவ்வொரு கிரஹங்களுக்கு ஏற்ற வண்ணங்களையும் பயன்படுத்தி நாம் நற்பலன்களைப் பெறலாம். இதற்கு அடுத்தபடியாக கண்ணாடி குவளைகளில் சுத்தமான நீரை நிரப்பி வண்ணத் தாள்களை அதில் சுற்றி சூரியனின் கதிர்களை உருவேற்றி நமக்குத் தேவையான வண்ணங்களின் பலன்களை அடையலாம். இதனை இயற்கை நல மருத்துவரிடம் ஆலோசனை செய்து பயனடையலாம். இதனாலும் நவக்கிரஙகளின் தீய பலன்கள் குறைக்கப்பட்டு நல்ல பலன்கள் ஏற்படுகின்றது. மேலும் Cosmic Vibrations மூலம் நிறங்கள் செயல்படுவதால் உடல் ஆரோக்கியத்திற்கும் வண்ணங்கள் முக்கிய பங்கேற்கின்றன.

வண்ணங்கள் மேற்குறிப்பிட்ட ஏழு Cosmic கதிர்கள் மூலம் அண்டசராசரத்தின் ஆக்கல், பாதுகாத்தல், அழித்தல் ஆகிய செயல்களுக்கு முக்கியமான பொறுப்பேற்கின்றன. மக்களின் வாழ்க்கை நிலை, ஆரோக்கியம், இளமை, முதுமை, மற்றும் ஆரம்ப முடிவு நிலை வாழ்க்கைக்கும் வண்ணங்களின் Cosmic கதிர்கள் முக்கிய பங்கு கொண்டுள்ளன. சரியான விகிதத்தில் இந்தக் கதிர்கள் வண்ணங்களில் இருந்தால், மனித உடலானது ஆரோக்கியமாக இருக்கும். அதே சமயத்தில் ஏதேனும் குறைபாடுகள் இருந்தால் நோய்கள் உருவாக வாய்ப்புள்ளது. வண்ணங்களை உபயோகப்படுத்தி எந்த நோய்க்கு எப்படிப்பட்ட வண்ணம் செலுத்தினால் குணமாகும் என்று அறிந்து அதைப் பயன்படுத்திச் செயல்படலாம். அதற்கு குரோமதெரபி என்று பெயர். இதற்கு ஒரு நல்ல இயற்கை மருத்துவரை அணுகி ஆலோசனைகளைப் பெறலாம்.

உதாரணத்திற்கு நீல நிறத்தினைப் பார்ப்போம். நீலநிற வண்ணத்தின் கதிர்கள் வளர்ச்சியை அதிகம் ஏற்படுத்தும். மிகவும் மென்மைத்தன்மையும் குளிர்ச்சியான தன்மையையும் கொடுக்கும். நீல நிறமானது ஒரு சிறந்த antiseptic கூட ஆகும். நரம்பு சம்பந்தமான அதிவிரைவு அவசர உணர்வுகளை (nervous excitement) நிச்சயமாகக் குறைக்கும் தன்மை உடையது. தனிப்பட்ட முறையில் (Specifically) நீலநிறம் இரத்தத்தில் act செய்கிறது. வயிற்றுப்போக்கு, கண்நோய்கள், தலைவலி, காயங்கள், உடலின் உட்புற மற்றும் வெளிப்புற வீக்கங்கள், தோலின் அரிப்புகள், தூக்கமின்மை, காக்காய் வலிப்பு, மற்றும் மாதவிலக்கின் கடுமைத்தன்மை ஆகிய நோய்களை கட்டுப்படுத்தவும் நீலநிறம் சிறப்பாகப் பயன்படுகின்றது.

(மேலும் விவரங்கள் அறிய சென்னையில் 8570081லும், கோவையில் 579031 லும் தொடர்பு கொள்ளலாம்)

**- வி.எஸ். மயூரி**

(வண்ண மற்றும் இயற்கை நலமருத்துவர்)




# மபத்லால் வாழ்வை ஒளிமயமாக்குகிறது



நயமிக்க மபத்லால் துணிரகங்கள் மற்றும் ரெடிமேடுகள் உங்கள் தோற்றத்திற்கு கூடுதல் வசீகரம் அளிப்பதுடன் வாழ்வின் அதிமுக்கிய தருணங்களை ஒளிமயமாக்குகின்றன.





- ஷர்ட்டிங்ஸ்
- சூட்டிங்ஸ்
- சேலைகள்
- மேட்சிங் ரேஞ்ச்
- டிரஸ் மெட்டீரியல்கள்
- ட்ரெண்டஸ் ரெடிமேட் ஷர்ட்டுகள்
- ட்ரௌசர்கள்
- டி-ஷர்ட்டுகள்
- பனியன்கள்
- ஜட்டிகள்
- ஷீட் செட்டுகள்
- ஃபர்னிஷிங்குகள்
- குழந்தைகளுக்கான பயின்ஸ் ரெடிமேடுகள்.

முழு குடும்பத்திற்கும் ஏற்ற ரகம்.












தமிழ்நாடு, கேரளா மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள 40க்கும் அதிகமான மபத்லால் பேமிலி ஷாப்புகள் மற்றும் 1800க்கும் அதிகமான மபத்லால் அங்கீகாரம் பெற்ற டீலர்களிடம் கிடைக்கப் பெறுகின்றன





**மபத்லால்** எஸ் ஏ இன்டெக்ஸ் லிமிடெட்

85-டி, மேட்டுப்பாளையம் ரோடு, கோயமுத்தூர் 641 029

*Bankers : The Federal Bank Ltd.,*

# மபத்லால்

இந்தியாவின் மிகப்பெரிய ஜவுளி உற்பத்தியாளர்களிடமிருந்து



# சீனாவின் காமதேனு!

"குழந்தைகளுக்கு ஆரோக்கியமான உணவை விலைக் கொடுக்க வேண்டும் என்பதில் தாய்மார்கள் மிகவும் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள். அதனால்தான் பாருங்கள் டி.வியில் கூட எல்லா விளம்பரங்களும் குழந்தைகளை மையமாக வைத்து இருக்கும். ஆனால் ஒரு முக்கியமான விஷயத்தில் இன்னும் விழிப்புணர்வு வரவேயில்லையே..."

என்று சஸ்பென்ஸோடு ஆரம்பித்தார் சக்தி ஷுகர்ஸ் நிறுவனத்தின் வைஸ் சேர்மனும் மனேஜிங் டைரக்டருமான திரு எம். மாணிக்கம்.

"என்ன அது...?"

"உணவுச் சத்தில் மிக முக்கியமான அங்கம் வகிப்பது சோயா. இது ஏதோ நாங்கள் சோயா கொண்டு சில ப்ராடக்ட்டை தயாரிக்கிறோம் என்பதற்காக அதனைச் சொல்லவில்லை. நம்முடைய மக்களிடம் சோயா எனும் அருமருந்தின் பயன் இன்னும் சென்று சேரவில்லையே என்பதுதான் என்னுடைய ஆதங்கம்..." என்று சொல்லி விட்டு அவர் உண்மையான அக்கறையுடன் கூறிய பல புள்ளி விவரங்கள் வியக்கத் தக்கதாக இருந்தது.

சீனாவில் சோயாவை 'தானியங்களில் காமதேனு' என்றும் 'பூமியின் தங்கம்' என்றும் கூறுவார்களாம். உலகெங்கும் சோயாவின் சிறப்பு தெரிந்திருக்கிறது. மனிதனின் மனம் மற்றும் உடல் வளர்ச்சிக்கு மிகவும் தேவையானது புரோட்டீன். இது இறைச்சி, பால் போன்ற விலையுயர்ந்த பொருட்களில்தான் அதிகம் இருக்கிறது என்பார்கள். அதனால் பாமரமக்களுக்கும் புரதம் என்பது எட்டாத கனவுதான். சத்தின்மை காரணமாக ஏழை எளிய மக்கள் உடல், உள்ள வளர்ச்சி இல்லாமல் இருப்பதை நம்மைப் போன்ற வளரும் நாடுகளில் பார்க்கிறோம்.

"ஒரு மனிதனுக்குத் தேவையான புரதம் அவன் உடலில் சேரும்போதுதான் எனர்ஜி, டென்ஷன் இல்லாத சமநிலை மனநிலையைப் பெறுகிறான். இல்லையென்றால் எப்போதும் ஒருவித சலன மனப்பான்மையோடேயே வாழ்வான்" என்கிறார் மாணிக்கம்.

அப்படிப்பட்ட புரதச் சத்திற்கு விலை உயர்ந்த பொருட்களைத் தான் நாட வேண்டும் என்ற அவசியமே இல்லை. மிகவும் விலை மலிவான சோயா மாவு அல்லது சோயாவின் மற்ற பொருட்களில் நான்கு மடங்கு புரதச் சத்து அதிகமாகக் கிடைக்



• மாணிக்கம்

**சோயாவின் சிறப்பை உணரச் செய்யும் வகையில் ஒவ்வொரு மாதமும் சமையல் போட்டி வைக்கவும் சக்தி சோயா நிறுவனம் முன் வந்துள்ளது. அந்த வகையில் சோயாவை அடிப்படையாகக் கொண்ட சமையல் குறிப்புகளை மங்கையர் மலருக்கு எழுதியனுப்புங்கள். மிகச் சிறந்த சமையல் குறிப்பு தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 1000/- பரிசாக வழங்கப்படும். அந்தந்த மாதம் மங்கையர் மலரிலும் பிரசுரமாகும்.**

**அந்த வகையில் முதல் மாத சமையல் குறிப்பு அனுப்ப வேண்டிய கடைசி தேதி 15.11.97. மங்கையர் மலர் முகவரிக்கே அனுப்பிவையுங்கள். சோயாவினை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். அது 'சோயா பைட்'டில் செய்தாலும் சரி, எப்படிச் செய்தாலும் சரி.**

எடுத்துக் கொண்டிருப்பது என்று சிலர் சொன்னார்கள். எனினும் இன்றும் 'விகர்' எனும் பெயரில் அந்த சோயா மாவையும் தயாரித்து அனுப்பிக் கொண்டுதான் இருக்கிறோம். அதற்குப் பிறகுதான் 'சோயா பைட்' எனும் நக்கெட்களைத் தயாரிக்க ஆரம்பித்திருக்கிறோம். அநேகமாக நம் மக்களுக்கு சோயா எவ்வளவு இன்றியமையாத ஒன்று என்பதனை இந்தத் தயாரிப்பு மூலம் நாங்கள் பெற்று வரும் வெற்றியினாலேயே உணரச் செய்து விடுவோம்" என்கிறார்கள்.

சோயாபைட் தயாரிக்கும் தொழிற்சாலைக்கும் போயிருந்தோம். மகாராஷ்டிராவிலிருந்து அதிகமான அளவு தரமான சோயாபீன் வாங்கப்படுகிறது. அதனை மிகப்பெரும் பாய்லர்களில் அரைவேக்காட்டுப் பதத்தில் தோலை உரித்து விடுகிறார்கள். சோயா எண்ணெயும் பிரித்தெடுக்கப்படுகிறது. பிறகு பல்வேறு விதங்களில் நசுக்கி, சீவி, மாவாக்கி பொடி செய்யப்பட்டு 'ஃபைபர்' மாவாக்கப் பட்டு 'மோல்ட்' மூலமாக உருண்டை வடிவ நக் கெட்டுகளாக வெளிவருகின்றன. முற்றிலும் மனிதக் கைகள் படாமல் இயந்திரங்கள் மூலமாகவே அனைத்தும் நடைபெறுகிறது.

"சோயா இந்த முறையில் தயாரிக்கப் படுவதால் கொழுப்புச் சத்துக்கெல்லாம் இடமேயில்லை. அரை வேக்காடும் ஆகி விடுவதால் உடல் நலத் திற்குத் தீங்கு விளைவிப்பதில்லை" என்கிறார்கள் தொழிற்சாலையில். "அதே போலத்தான் சோயா ஆயில் மிகச் சிறந்த எண்ணெய். இருதய நோய் உண்டாகும் கொலஸ்ட்ராலுக்கு மிகச் சிறந்த நிவாரணியாக வேலை செய்கிறது. ஆனால் அது காய்ச்சப்படும்போது ஒரு வித வாசம் வருகிறது. நீங்கள் வெஜிடேரியனாக இருந்தால், 'என்ன இது இவங்க வீட்ல 'நான்வெஜ்' சமைக்கிறாங்க' எனப் பக்கத்து வீட்டுக்காரங்க நினைப்பாங்க' என்று சொல்லிச் சிரித்தார் ஒருவர்.

ஆனால் சோயா நக்கெட்ஸில் (சோயா பைட்) இந்தப் பிரச்னை இல்லை. எந்தவித வாசனையும் இல்லாமல் குழம்பிலிருந்து பகோடா வரை எதையும் செய்யக் கூடிய நிலையில் இருக்கிறது. இதச் சோதனின் காமதேனு.

இன்னும் நிறைய நிறைய சோயாவின் பெருமையையும், அதன் சத்துக்கள் வளரும் நம் குழந்தைகளுக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பதைப் பற்றியும் வலியுறுத்திக் கொண்டிருந்தார் மாணிக்கம். பல அமினோ அமிலங்களும், 53% புரோட்டீனும் நிறைந்த சோயாவை அன்றாட உணவில் பயன்படுத்துவதன் மூலம் நம் இந்தியக் குழந்தைகள் எவ்வளவோ உடல் மன ஆரோக்கியத்தைப் பெற முடியும். மிகக் குறைந்த விலையில் பெறக் கூடிய இந்த ஆரோக்கியத்தைத் தேடி பல்லாயிரம் ரூபாய்கள் செலவு செய்கிறார்கள். அதனால்தான் ஒரு இயக்கமாகவே இதைச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் துறையில் நாங்கள் நுழைந்து இருக்கிறோம்."

என்று மிகவும் ஆத்மார்த்தமாகப் பேசினார் சக்தி சோயா நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் மாணிக்கம். ஒரு மணி நேரத்திற்கும் மேலாகப் பேசிக் கொண்டிருந்த அவர் தன் பேச்சில் எந்த இடத்திலும் தங்கள் தயாரிப்புக்களைக் குறிப் பிடவேயில்லை. 'அது அவசியமும் இல்லை' என் றார் அவர். மக்களிடையே இந்த ஓர் அற்புதமான உணவினைப் பற்றிய ஒரு விழிப்புணர்வு வரவேண்டும். அதுதான் என் நோக்கம் என்றார்.

அஹிம்சையையும், புலால் உண்ணாமையையும் போதித்த வள்ளலாரின் பால் மாறா ஈடுபாடு கொண்ட தொழிலதிபர் திரு நா. மகாலிங்கத்தின் மகனல்லவா? அதனால்தான் அவர் புலால் உண்ணாமலேயே அதனால் கிடைக்கக்கூடிய செறிந்த பயன்களை தாவர உண விலேயே நம் மக்களுக்குத் தருவதற்கு அரும்பாடுபட்டு வருகிறார்.

# விளக்கு வைப்போம்!

மங்கலச் சின்னங்களில் தீபத்துக்கு தனிப்பெருமை உண்டு. எந்த நல்விழாவும் "குத்து விளக்கேற்றித்தானே தொடங்கப்படுகிறது!"

'தீபங்களின் அணிவகுப்பு' என்பது பலரது வீடுகளில் கார்த்திகைத் திருநாளின் போதுதான் இடம்பெறுகிறது என்றாலும், தீபாவளித் திருநாளும் இந்தச் சிறப்புக்கு மிகவும் உரியதென்று அதன் பெயரே சுட்டிக்காட்டுகிறது. ("வளி" என்றால் வரிசை என்று பொருள்).

அகல் விளக்குக்கு எளிமை கலந்த ஒரு சிறப்பிடம் என்றுமே உண்டு. என்றாலும் பரவலாக - முக்கியமாக பூஜை அறைக்கென்று - வாங்கப்படுபவை பெரும்பாலும் பித்தளை விளக்குகள்தான்.





இந்தத் தீபாவளி சீசனில், என்னென்ன விதமான விளக்குகள் விற்பனைக்கு வந்துள்ளன என்பதை அறிய முடிவு செய்தோம்.

"இரும்பு கலக்கப்பட்டுள்ள எதுவுமே பூஜைக்கு உகந்ததல்ல" என்ற நம்பிக்கை மக்களிடையே ஆழமாகப் பரவியிருப்பதால், எவர்சில்வர் விளக்குகள் என்றுமே கண்ணில் தென்படவில்லை.

"விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிட்யூட்டில் நுழைந்தவுடன் நம் கண்களைக் கவர்ந்தது அந்தப் பெரிய, தலைகீழ் 'ப' வடிவில் அமைந்த விளக்குகள். சுமார் இருபது விளக்குகள் இருக்கும். விலை சுமார் பதினைந்தாயிரம். இதை பெரும்பாலும் வாங்குவது (வேறு யார்?) என்.ஆர்.ஐ.க்கள்தான். வெளிநாடுகளில் உழைத்து சம்பாதிக்கும் பெரும் தொகையில் இதுபோன்ற கலை விளக்குகளை வாங்குகிறார்கள்.

இதே அமைப்பில் சற்றே சிறிய அளவில் காணப்பட்ட விளக்கு செட் 2400 ரூபாய்கள்.

எப்போதும் டிமாண்டில் இருப்பவை காமாட்சி விளக்குகளும், மேற்புறம் அன்னம் அமைந்த ஐந்து முகம் கொண்ட பித்தளை குத்து விளக்குகளும்தானாம். நடுத்தர அளவு கொண்ட இந்த வகை விளக்கு சுமார் எண்பது ரூபாய்.

கொஞ்சம் வித்தியாசமான விளக்கொன்று கவனத்தைக் கவர்ந்தது. அதைத் தேய்த்தால்

பூதம் தோன்றிவிடுமோ என்ற எண்ணம் புன்னகையைக் கொண்டு வந்தது. ஆம் அலாவுதீனின் கையில் இருந்ததாக நாம் படத்தில் பார்த்த மாடலில் காணப்பட்டது. 150 ரூபாய் என்று விலையிடப்பட்டிருந்த அந்த விளக்கு.

காதி கிராமோத்யோக் பவனில் ஐம்பொன் கோப்பை வடிவத்தில் கொஞ்சம் வித்தியாசமாகக் காட்சியளித்த ஒரு இஞ்ச் உயரம் கொண்ட விளக்கின் விலையை விசாரித்தோம். நாற்பத்தைந்து ரூபாய் என்று பதில் வந்தது. இவை உத்திரப்பிரதேசத்தில் தயாரிக்கப்படுபவையாம்.

ஹைதராபாத்திலிருந்து அங்கு வந்து சேர்ந்திருந்தன 'பாவை விளக்கு'கள். அலுமினியத்தால் ஆக்ஸிடைஸ்ட்



செய்யப்பட்டிருந்த அவற்றின் விலை - ஒன்று 405 ரூபாய்.

காமாட்சிக்குப் பதிலாக அஷ்டலட்சுமிகள் பொறிக்கப்பட்டுள்ள விளக்கின் மீதிருந்த விலை அட்டை "ரூபாய் 163" என்றது.

பிரம்மாண்ட அளவுள்ள விளக்குகள் கோவிலுக்காக மட்டும்தான் என்றில்லாமல், பெரிய பங்களாக்களில்; உள்ள கூடங்களின் மையப் பகுதியிலும் வைப்பதற்காக வாங்கப்படுகிறதாம். பூஜை அறை வாசலின் மூன்று புறங்களிலும் விளக்குகள் பொருத்துவது பார்வைக்கும் நிறைவாக இருக்கிறது என்பதால் அப்படி அமைந்த விளக்கு செட்களுக்கு சீரான டிமாண்ட் இருக்கிறதாம்.

இதுபோன்ற கடைகளுக்கு வருபவர்கள் மெழுகுவர்த்தி ஸ்டாண்ட் - பித்தளையில், பல்வேறு கலையம்சத்தோடு காணப்படுபவை - வாங்குவதை கவனிக்க முடிந்தது. மின்வெட்டின் போது ஏற்றுவதற்கு சௌகரியமாக இருக்கிறதாம்.

சௌகரியம் ஒருபுறமிருக்க, மக்களின் சிந்தனை ஓட்டமும் ஓரளவு மாறித்தான் வருகிறது. ஒரு வீடு இருந்த இடத்தில் ஆறெட்டு குடியிருப்புப் பகுதிகள் என்று ஆகிவரும் இந்நாளில் "மொஸைக் தரையில் எண்ணெய் சிந்தினால் தரையும் பாழாகும்; பளிச்சென்று புலப்படாததால் வழுக்கியும் வைப்போம்" என்றெல்லாம் எதை எதையோ கூறிக் கொண்டு சின்ன மெழுகுவர்த்திக் கோப்பைகளையே தீபாவளியிலும், கார்த்திகையிலும் ஏற்றும் போக்கு நகரங்களில் அதிகரித்து வருகிறது.

வீட்டுக்கு "விளக்கேற்ற வந்தவர்கள்" நல்லெண்ணெயை விளக்கில் ஊற்றி, திரியை பக்தியுடன் ஏற்றுவதால் பெறக்கூடிய தெய்வ அருளை நினைவில் கொள்வது நல்லது. "தீப மங்கள ஜோதி நமோ நம" என்று பெரியவர்கள் தெரியாமலா இறைவனை ஜோதி வடிவில் கண்டிருக்கிறார்கள்!

- ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி



எடுக்கப்பட்ட நீர் என்னும்போது அதன் விசேஷத்தைக் கேட்கவே வேண்டியதில்லை. ஒரு நல்ல காரியத்தைச் செய்கிறோம் என்ற மனநிறைவு இருக்கிறது" என்கிறார் குமாரவேலு.

"அந்தக் காலத்தில் ஒவ்வொருவர் வீட்டிலும் 'கங்கை செம்பு' என்று சிறிய சொம்பு ஒன்று இருக்கும். அதில் கங்கை நீரை வைத்திருப்பார்கள். இப்போதெல்லாம் அந்த மாதிரி பலர் வீட்டிலும் பார்க்க முடிவதில்லை. நவீன விஞ்ஞான மாறுதலுக் கேற்ப 'சாஷே'க்களில் நாங்கள் தருகிறோம். இதனை தீபாவளியன்று ஸ்நானம் செய்யும் நீரில் கலந்தோ, அல்லது குடும்பத்திலுள்ளவர்கள் அனைவரும் தங்கள் தலைகளில் தெளித்துக் கொண்டோ புனிதம் அடையலாம்" என்கிறார்.

இமயமலையின் அதிபன் சிவபிரானின் ஜடா முடியிலிருந்து பிறந்தவள் கங்கை. அப்பேர்ப்பட்ட கங்கை நீரை ரிஷிகேசத்திலேயே சேகரிப்பது என்பது சிறப்புதானே!

சரி இதை எப்படி விநியோகிக்கிறார்கள்? "ஒரு ஆர்வம் காரணமாக இதைச் செய்கிறேன். எனவே அத்தனை கடைகளிலும் விநியோகிப்பது என்பது முடியாது" என்கிறார். சில தேர்ந்தெடுக்கப்பட்ட கடைகளில் மட்டுமே கிடைக்குமாம். பத்து ராகா மகா ஹெர்பல் பவுடர் வாங்குபவர்களுக்கு ஒரு கங்கா சாஷே பாக்கெட் வழங்குவது என்று தீர்மானித்திருக்கிறார்கள். "சென்னையில் பரவலாகக் கிடைப்பதற்கு வழி செய்திருக்கிறோம். வெளியூர்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட கடைகளில் விநியோகிக்க திட்டம் இட்டுள்ளோம்" என்கிறார் பி.கே. குமாரவேலு.

— புவனா



• பரிசு பெற்றவர்கள்

**ம**ங்கையர் மலர் & பி.கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸ் இணைந்து வழங்கிய 'நவவர்ண சேலை' பற்றிய போட்டியும், தேர்ந்தெடுத்தலும் களையாக நடந்து முடிந்தன. திருமதி நாகஜோதி நவராத்திரிக்கு முன்பு வெளியூர்ப் பெண்மணிகள் அனைவருக்கும் 'கொரியர்' சர்வீஸில் புடைவைகளை, பாண்ட் சர்ட் துணிகளுடன் அனுப்பி விட்டார். சென்னையில் பரிசு பெற்றவர்களையும் அக்டோபர் ஒன்றாந் தேதியன்று பி.கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸிற்கு வரவழைத்துக் கொடுத்தார். "வெளியூர்களில் இருக்கும் வாசகிகள் இந்த நவவர்ண சேலையை வாங்க விரும்பினால் வி.பி.பி.யிலும் பெற்றுக் கொள்ளலாம்" என்று மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸின் உரிமையாளர் திருமதி நாகஜோதி கூறினார். தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி பி.கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸ், 222, ஆர்.கே. மடம் ரோடு, மைலாப்பூர், சென்னை - 4.



இக்கட்டுரை என்போன்ற (மனநிலை பாதிக்கப்பட்ட குழந்தைகளின்) அன்னையர்க்கு சமர்ப்பணம்.

# ஓர் அன்னையின் தீபாவளிக் கனவுகள்

அது ஒரு கோலாகலமான தீபாவளித் திருநாள். என் வாழ்வின் மிக இனிமையான நாள். கண்மணி ராகவன் பிறந்த நாள். நம் பாரதப் பிரதமராக இருந்த திருமதி இந்திரா காந்தியை ஒருமுறை, "உங்கள் வாழ்வின் மிக இனிமையான தருணம் எது?" என்று கேட்டபோது, அவர் கூறினாராம், "When I had my first child on my lap" என்று. (என் முதல் குழந்தையை என் மடி மீது வைத்துக் கொண்ட அந்த நேரம்தான், என் வாழ்வின் மிக இனிமையான தருணம்.)



தாய்மை உணர்வுக்கு, சமூகத்தின் மேல்மட்டத்தில் உள்ளவர், கீழ்மட்டத்தில் உள்ளவர், ஏழை, பணக்காரன் என்ற வேற்றுமைகள் இருக்கவே முடியாது. நாடு, மொழி, மதம், இனம் எத்தனை வேறாயினும், தாய்மை உணர்வு மிகவும் தூய்மையானது. எந்தத் தாயும், தன் குழந்தையின் நலனையே தன் இன்றியமையாத் தேவையாய் உணர்கிறாள்.

எனக்குள்ளும் ஏராளமான கனவுகள் இருந்தன. என் குழந்தையின் குழலினும் இனிய மழலை கேட்க, அவன் சான்றோனாகி, ஈன்ற பொழுதின் பெரிதுவக்க... இன்னும் எத்தனையோ!! ஆனால், மனத்தில் சிறு தடுமாற்றம். அவன் மற்ற குழந்தைகள் போல் இல்லையோ? ஏன்? அந்த அழகிய கண்கள் என்னைப் பார்க்காது, எனக்குள் ஊடுருவி எங்கோ பார்த்து, எதைத் தேடுகின்றன?

கடலலை போல், ஓயாது எனக்குள் எழுந்த கேள்விகளுக்கு, ஒரு மனோதத்துவ மருத்துவர் மூலம் பதில் வந்து, கனவுக் கோட்டைகளைச் சரித்தது. அவனுக்கு ஆட்டிசம் (Autism) - 10,000 குழந்தைகளில், நான்கு பேரைத் தாக்கும் ஒரு கண்டிஷன் அது. இக் குறைபாடுள்ள குழந்தைகளால் சமூகத்தில் ஒட்ட இயலாது. ஒருசில குழந்தைகளுக்கு மொழி வந்தாலும், பல குழந்தைகளுக்கு 'மொழி' வளர்வதில்லை. என் குழந்தை வளர வளர அவன் பிரச்னைகளும் வளர்ந்தன.

நம் இந்தியப் பெண்கள், திருமணத்திற்கு முன் வரை 'Life is a bed of roses' என வாழ்ந்து விடுகின்றனர். பிரச்னைகளை எதிர்நோக்க, அவர்களுக்குக் கற்றுத் தரப்படுவதில்லை. ஆனால் பிரச்னைகளே இல்லாத வாழ்க்கையும் இல்லை. படிக்கும் படிப்பு, வாழ்த்

தேவையான நம்பிக்கையை வளர்ப்பதால் அமைய வேண்டும்.

நம்மைச் சுற்றி, மற்ற குழந்தைகள் ஓடியாடும் போது, ஓயாது பேசும் போது, நம் குழந்தை, வானத்தில் நட்சத்திரங்களை எண்ணிக் கொண்டு உட்கார்ந்திருப்பது, மனதைக் கத்தி கொண்டு அறுக்கத்தான் செய்யும். ஆனால், மனத்தளர்ச்சியே நம் முதல் எதிரி. இதுபோன்ற குழந்தை உடையவர்கள், குழந்தைக்காக மனோதத்துவ நிபுணர்களைத் தேடி ஓடும் முன், உங்களை நீங்களாகவே ஒரு தேர்வுக்கு உட்படுத்திக் கொள்ளுங்கள். அன்னை தெரசா போல், வாழ்நாள் முழுதும் சேவைக்காக அர்ப்பணித்தவர்கள் வாழ்ந்த அதே மண்ணில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். நம் போன்ற பெண்கள், நம் வீட்டிலேயே உள்ள ஒரு பாதிக்கப்பட்ட குழந்தையை, மனம் முழுதும் பாசத்துடனும், இது இறைவனால் நமக்களிக்கப்பட்ட செல்வம் என்ற எண்ணத்துடனும்தான் அணுக வேண்டும். சாதாரணமான ஒரு குழந்தைக்கு எவ்வளவு அன்பும் கவனிப்பும் தரப்பட வேண்டுமோ அதைவிடப் பன்மடங்கு இக்குழந்தைகளுக்குக் கொடுக்கப்பட வேண்டும்.

முதலில், நம்மிடம் உள்ள ஒரு குழந்தைக்காக, மனத்தில் அன்பெனும் விதையை விதைப்போம். அது வளர்ந்து பெரிய விருட்சமாகட்டும்! தீபாவளியை 'Festival of lights' என்கிறோம். ஒவ்வொரு வருடமும் என் குழந்தையின் வாழ்வு, இந்தத் திருநாள் போல பிரகாசிக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை என்ற கனவுகளுடன் காத்திருக்கிறேன். கனவுகள் நனவாகும்! நம்பிக்கைதானே வாழ்க்கை!!

- ரஞ்ஜனி தியாகு

☑ அனுராதா ரமணனின் 'தொப்புள் கொடி', சாதிமத பேதம் பார்க்காத தாய்மையின், தூய்மையை கண்முன் கொண்டு வந்தது. இதயத்தில் இடம்பிடித்த எழுத்து. நவராத்திரி ஸ்பெஷலின் சிறப்பை, உயர்த்தியது. பாராட்டுக்கள், அவருக்கும், படைப்பை வெளியிட்ட ஆசிரியருக்கும்.

மாயனூர். பாரதிமகன்.

☑ 'வீட்டுக்குள் தோட்டம்' பகுதியிலும் நவராத்திரியின் பாதிப்பா! கொலுவுக்கு ஆசிரியை கொடுத்த கார்டனிங் ஐடியா உண்மையிலேயே விரும்பத்தக்கது. முட்டைத்தோல் மிகப் பெரிய சத்து என்று நினைத்திருந்த எனக்கு அதில் வெறும் கால்சியம் சத்து மட்டும்தான் உள்ளது என்பதை உணரும்போது இவ்வளவு நாட்கள் எப்படி இதுகுறித்து சிந்திக்காமல் போனோம் என்று ஆச்சரியமாக உள்ளது. இயற்கை உரம் பற்றி கூறியுள்ள கருத்துக்கள் இன்பார்மேஷனலாக உள்ளன. தென்னை மரம் பற்றிய கேள்விக்கு மட்டும் பதில் தராமல், தென்னை பற்றிய கூடுதல் விவரங்களை தந்துள்ளமைக்கும் பாராட்டுக்கள்.

பாண்டிச்சேரி - 1.

பூங்கோதை கிருஷ்ணராஜ்.




☑ இம்மாத நியூஸ் சாலட் மதர் தெரஸா, இளவரசி டயானா பற்றிய செய்திகளை முழுமையாக தாங்கி வந்திருந்ததாம் மற்ற விஷயங்களையும் கொஞ்சம் சேர்த்திருக்கலாம்.

மன்னார்குடி. த. சாந்தி.

☑ நவராத்திரி இரட்டைச் சிறப்பிதழ் வாசகர்களுக்கு ஒரு தீபாவளி போனஸ்! இதழ் முழுக்க ஒரே சக்தி மணம் கமழுகிறது.

திருக்கலக்குடி. உமா. அபிராமி.

☑ நவராத்திரி இதழ் அளவான உப்பு, காரம் போட்ட சுண்டல் போலவே இருந்தது.

திருச்சி - 6. ஆர். செல்லம்மாள்.

☑ 'மழைக்காலத்தில் வரும் மஞ்சள் காமாலை. மஞ்சள் காமாலை' நோய் குறித்து டாக்டர் ஜே.எஸ். ராஜ்குமார் வழங்கிய குறிப்புகள் மஞ்சள் காமாலை நோய் பயத்தை போக்கி, விழிப்புணர்வை ஏற்படுத்தியது.

திருவாரூர். என். தெட்சி.

☑ உமா நாகராஜன் எழுதிய குழந்தைகளைப் பண்படுத்தும் ஸ்போர்ட்ஸ் பற்றிய குறிப்புகள் எங்களுக்கு மிகுந்த பயனுள்ளவைகளாகவும், மிக அருமையாகவும் இருந்தன. விளையாட்டுத் துறை பற்றியும், குழந்தைகளை அதில் எவ்வாறு ஈடுபாடு உள்ளவர்களாக்க வேண்டும் எனவும் கூறியுள்ளார். பயனுள்ள குறிப்புகளையும் தந்து அதன் பயிற்சிகள் யாவுமே அவர்கள் மிக சிறப்பான முறையில் வாசகருக்கும் பயன்படும் முறையில் கட்டுரையை மிகச் சிறப்பாக எழுதி எங்களை கவர்ந்துள்ளார்கள்.

மதுரை - 1. ராஜம் முத்து ஒளிவு.

☑ பெ. நாயகியின் 'வயிற்றுக்குள் கத்திய ஆடு' கதை படித்து மகிழ்ந்தேன். பூர்ணிமாவின் புகார் கருதும் கண்ட முதல்வர், சமையல் முன் வைக்க விரும்பிய சட்டதிட்டங்களை பூரணமாக நிறைவேற்றப்பட்டான், மிக மிக சந்தோஷப்படுகிறேன். ஆண் என்ற அகந்தையும், தான் செய்யும் எக்காரியத்திற்கும் பெண் பணிந்தே போக வேண்டும் என மிருகத்தனமாக நடந்து கொள்ளும் கணவர்களையும் கடிவாளம் வைக்கும்.

கடலூர். மேனகா வெங்கடேசன்.

அட்டையில்: **குமாரி இரண்**

வண்ணப்படம் : **சுதிர**

**பாரிஸிலிருந்து ஒரு கட்டுரை**

# மறக்க முடியாத டயானா

திருமணம் இந்தியாவில் பந்தம் ஆனால் இங்கிலாந்திலோ ஒரு ஒப்பந்தம். ஒப்பந்தங்கள் ரத்து செய்யப்படலாம். இளவரசர் சார்லஸுடன் திருமணம் நடந்த போது டயானா ஸ்பென்சருக்கு வயது 19. உலகமே வியந்து ரசித்த திருமணம் மணமுறிவில் முடியும் என்று யாரும் நினைத்துக் கூடப் பார்த்திருக்க முடியாது.

• விபத்தில் பிழைத்த ஒரே நபர்



மணமுறிவுக்குக் காரணம் தான் ஒதுக்கப்பட்டதாக டயானா நினைத்ததுதான். 50 ஆண்டுகளுக்கு முன்பு அரச குடும்பத்தில் நடந்திருக்க முடியாத ஒன்று 1996-ல் நடந்தது. டயானா சார்லஸ் மணமுறிவு. 1970களில் ஆரம்பித்த பெண்கள் சுதந்திர இயக்கமும் ஒரு காரணமாகும்.

பெண் ஒரு அலங்காரப் பொருளோ அல்லது அழகுப் பதுமையோ அல்ல. மனதும், மூளையும் உடைய, தனியாக சிந்தித்து முடிவெடுக்கும் திறன் உடையவள் என்பதை நிலை நிறுத்திய இயக்கம் பெண் விடுதலை இயக்கம்.

டயானா அரண்மனையில் அடைந்து கிடக்காமல் கிட்டத்தட்ட 100 அரசு சாரா இயக்கங்களுக்கு கௌரவத் தலைவராக இருந்தார்.

உலகெங்கிலும் உள்ள எய்ட்ஸ் நோயாளிகளுக்கும், கைவிடப்பட்ட குழந்தைகள் தொழுநோயாளிகள் மறுவாழ்வு போன்றவற்றிற்கு நிதி திரட்டிக் கொடுத்தார். மனிதனை நாசமாக்கும் கண்ணி வெடிகுண்டுகளை பூமியிலிருந்து எடுத்து விட பெருமுயற்சி செய்தார்.

இவ்வகை செயல்களினால் மக்களிடையே பரபரப்பாக பேசப்பட்டார். அவர் சென்ற இடங்களில் எல்லாம் அவரைப் பார்க்க பெருங் கூட்டம் சேர்ந்தது என்னவோ உண்மை.

மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்ற டயானாவைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆசைப்பட்டவர்களின் தாகத்தைத் தணிக்க பத்திரிகைக்காரர்களும், புகைப்படக் காரர்களும் அவரைப் பின்தொடர்ந்தனர்.

டயானாவும் தன்னைப் பற்றிய செய்திகள் வெளியாவதை விரும்பினார் என்றே கருத வேண்டும். டயானா நினைத்திருந்தால் தன்னைப் பற்றிய விஷயங்களை ரகசியமாக வைத்திருக்க முடியும். ஆனால் அவ்வாறு செய்யவில்லை. இங்கிலாந்தின் அரசு சாரா தூதுவராக அவர் செயல்பட்டார்.

தனது புகழ் வீசிய வாழ்க்கையிலிருந்து அமைதியைத் தேடி அடைய வேண்டிய நேரத்தில் விதி விளையாடியது.

தனது நண்பரான டோடி, எகிப்து நாட்டைச் சேர்ந்த பெரும் பணக்காரரின் மகனுடன் விருந்து உண்டு விட்டு திரும்பும் போது விபத்தில் சிக்கினார்.



• டயானா

பாரீஸில் கார்கள் வெகு வேகமாக மணிக்கு சுமார் 100 கி.மீ. வேகத்தில் செல்லுகின்றன. இந்தியாவில் சென்னையிலிருந்து திருச்சி செல்ல சுமார் 6 மணி நேரம் ஆகும். பிரான்ஸில் இதே தூரத்தை 3 மணிக்கும் குறைவான நேரத்தில் கடக்கின்றனர்.

பாரீஸ் நகர சாலைகளில் ஒரே நேரத்தில் எட்டு கார்கள் ஒன்றின் பக்கம் ஒன்றாக செல்ல முடியும். இங்கு மெதுவாக சென்றால் பின்னால் வரும் கார்களும் போலீஸ் கார்களும் எச்சரிக்கும். ஆனால் எல்லோரும் சட்டத்தை மதித்து நடக்கின்றனர். மீறினால் கடுமையான அபராதம்தான்.

டயானா தன்னுடைய நண்பருடன் இரவு (அதிகாலை) 2 மணிக்கு ரிட்ஸ் ஹோட்டலிலிருந்து

தான் தங்கி இருந்த இடத்திற்குச் செல்லும் போது விபத்து நடந்திருக்கிறது. டயானாவை பின்தொடர்ந்த புகைப்படக்காரர்களிடம் தான் திரும்பி வரும்போது போன் கொடுப்பதாகக் கூறி இருக்கிறார். அவர்களும் பொறுமையாகக் காத்து இருந்தனர்.

தனது முடிவை மாற்றிக் கொண்ட டயானா தான் வந்த காரை அனுப்பி விட்டார். ஹோட்டலுக்குச் சொந்தமான மற்றொரு காரில் தனது நண்பருடன் புறப்பட்டார்.

பென்ஸ் கார் மிகப் பாதுகாப்பான கார். பெரிய விபத்துக்களை தாங்கக்கூடியது. கருப்பு நிற பென்ஸ் காரில் ஹோட்டலின் பாதுகாப்பு அதிகாரி காரை ஓட்ட போடி முன் இருக்கையில் அமர்ந்து இருந்தார். டயானாவின் பாதுகாப்பு அதிகாரி ஜோன்ஸ் மற்றும் டயானா பின் இருக்கையில் அமர்ந்து இருந்தனர். டயானா பாதுகாப்பு பெல்ட் அணியவில்லை. அந்தக் காரில் பயணம் செய்த நால்வரில் ஒருவர் ஜோன்ஸ் மட்டுமே உயிர் தப்பினார். அவர் மட்டும் பாதுகாப்பு பெல்ட் அணிந்தத னால்.

பாரீஸ் நகரத்தில் சுரங்க வழிப் பாதைகள் அதிகம். ரீட்ஸ் ஹோட்டலிலிருந்து சுமார் 5 கி.மீ. தூரத்தில் உள்ள சயின் டவரைக் கடந்து சுரங்கப் பாதையில் செல்லும்போது அவரது காரின் வேகம் சுமார் 220 கி.மீக்கும் மேல்.

டயானா வேறு வண்டியில் செல்வதை அறிந்த புகைப்படக்காரர்கள் சுமார் ஆறு பேர் மோட்டார் சைக்கிள்களிலும் காரிலும் பின் தொடர்ந்தனர்.

அவர்களிடமிருந்து தப்பிக்க அசுர வேகத்தில் செலுத்தி இருக்கிறார் டயானாவின் டிரைவர். சாலையின் நடுவில் உள்ள தூணில் மோதி பலமுறை கார் புரண்டு நின்றபோது டயானா உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தார். அடுத்த இரண்டு நிமிடங்களில் பாரீஸ் நகர போலீஸ் அங்கு வந்தது. டயானா மற்றும் உயிருடன் இருந்த பாதுகாப்பு அதிகாரியை மீட்டு அருகில் உள்ள பிட்டி சால்பிட்ரே அரசாங்க மருத்துவமனைக்கு விரைந்தனர்.

உயிர்காக்கும் சிகிச்சைகள் அளிக்கப்பட்டன. வெகு விரைவில் இரத்தத்தை இழந்த டயானாவிற்கு சிகிச்சை அளிக்க மருத்துவர் குழு போராடியது. விபத்து சிகிச்சை பிரிவிலேயே ஒரு அறுவை சிகிச்சை நடத்திய போது நுரையீரலுக்குச் செல்லும் ரத்தக்குழாய் கிழிந்து அதன் வழியே ரத்தக் கசிவு (Massive Bleeding) ஏற்பட்டு டயானா உணர்விழந்து, உயிர் இழந்தார். பிரான்ஸ் நாட்டு அமைச்சர்கள் செய்தி கேட்டு வந்தபோது மக்களின் இளவரசி இவ்வுலகை விட்டுச் சென்று விட்டார்.

36 வயதில் உலகத்தின் அன்பைப் பெற்ற டயானா பாதுகாப்பு பெல்ட் அணிந்திருந்தால் அல்லது அவரின் காரோட்டி மது அருந்தாமல் இருந்திருந்தால், அதிவேகமாக செல்லாமல் இருந்திருந்தால் டயானா கண்டிப்பாக நம்முடன் இருந்திருப்பார். ஆனால் மேற் சொன்ன எதுவும் நடக்கவில்லை.

- சிவகுமார்

குலோப்ஜாமூன் செய்யும்போது எப்பொழுதும் போல் உருண்டையாகவோ, நீளமாகவோ உருட்டாமல், பாதுஷா போல் தட்டையாக செய்து நடுவில் குழி செய்து, அதில் தோல் நீக்கிய பாதாம் துண்டுகள், முந்திரி, பிஸ்தா துண்டுகள், முந்திரி, வேர்க்கடலை துண்டுகள் இவற்றைக் கலந்து வைத்து மாவால் மூடி எண்ணெய் (அ) நெய்யில் பொரித்தெடுத்து பாகில் ஊறவிடவும். அல்லது பாலை சுண்ட வைத்து அதில் ஏலக்காய், ஜாதிக்காய் தூள், குங்குமப்பூ கலந்து அதில் பேடாக்களை ஊறவைத்து 'தூத் பேடா' செய்யலாம்.

— விஜயராணி



# நீங்கள் கொடுக்கும் பணத்திற்கு அதிக மதிப்பு

## இப்போது பெரிய அளவில் கிடைக்கிறது

18 HERBS

MEDIMIX®

AYURVEDIC BATH SOAP

NEW 125g PACK



புதிய 125 கி. பாக் விலை ரூ. 12.00 மட்டுமே.

# பழைய வியாபாரம்



தீபாவளி சமயத்தில் போட்டா போட்டியோடு ஜரூராக நடக்கும் வியாபாரங்கள் துணி, பட்டாசு, பலகார வகைகள். 'எப்போதும் நடக்கும் வியாபாரம் தான் என்றாலும் இவ்வகை தொழில்களில் போட்ட முதல் எடுத்து இலாபம் அடைய வேண்டுமென்றால் அந்தந்த வியாபாரிகள் தங்கள் நிலைக்கேற்ப சலுகைகள், தள்ளுபடிகள், சிறப்புப் பரிசுகள், குலுக்கல் முறைகள் என்று கவர்ச்சியான விளம்பரங்களின் மூலம் நுகர்வோர்களை திக்குமுக்காட வைத்தால்தான் சந்தையில் ஓரளவு நின்று தாக்குப்பிடிக்க முடியும் என்கிற நிலை தீவிரமாகி விடுகிறது' என்கின்றனர் இன்றைய வியாபாரிகள்.

இந்தத் தீபாவளி சமயத்தில் அதிக மூலதனத்தோடு நடப்பது துணி வியாபாரம்தான். நகரில் பிரபலமாகியிருக்கும் வியாபாரிகளை மட்டுமல்லாது தனிப்பட்ட முறையிலும் துணி வியாபாரம் நடத்தும் வியாபாரிகளை இந்த 'விளம்பர டிரண்ட்' பற்றி விவரம் கேட்க முனைந்தபோது நமது துணி வலையில்: - சாரி போட்டி வலையில் சிக்கினார்கள் சிலர் -



• சீநு

மைலாப்பூரில் இருக்கும் நடுத்தரவர்க்க பிரிவினரை பிரதான இலக்காகக் கொண்டு ஆரம்பித்து இன்று சென்னை முழுவதும் அறியப்பட்டவர்கள் ரங்காச்சாரி கிளாத் சென்டர். கடந்த முப்பது வருடங்களாக பருத்திப் புடவையில் ஒரு புதிய சகாப்தம் படைத்து வருகிறார்கள் என்றால் அது மிகையில்லை. பாரதம் சுதந்திரம் அடைவதற்கு முன்பே புடவை மூட்டையை வீடு வீடாகச் சுமந்து வியாபாரம் செய்து வந்த திரு ரங்காச்சாரி (கடையின் பெயரும் அதுதான்) 1951-ல்தான் தற்போதுள்ள இடத்தில் நிரந்தரமாகக் கடை வைத்தார். வியாபார நுணுக்கங்களில் தனது அனுபவங்களைப் பற்றிக் கூறுகையில் அந்த காலத்திற்கே சென்று விடுகிறார் இந்த 75 வயது முதியவர்.

• ரங்காச்சாரி



"நான் என் வியாபாரத்தை சின்னாளப்பட்டி புடவையில்தான்



• பி. எம். சில்க்ஸில்...



ஆரம்பித்தேன். எனக்கு முதலில் விளம்பரம் செய்தவர் யார் தெரியுமா? சொன்னால் நம்ப மாட்டார்கள். ஜகத்குரு காஞ்சிப் பெரியவர் நம் பரமாச்சார்யார்தான். சென்னை சமஸ்கிருத கல்லூரிக்கு வந்து ஒருமுறை தங்கியிருந்தபோது 'பட்டு' மடியில்லை. மேலும் அது புழுக்களைக் கொன்று அதன் நூலில் நெய்வது. மடியாய் இருக்க சின்னாளம் 'பட்டு' உபயோகிக்கலாமே' என்று கூற உடனே கடையில் அதற்கு ஏக டிமாண்ட். அந்தக் காலத்தில் கிடைக்கும் இத்தாலிய 'யார்ன்' கொண்டு முதல்தர நெசவில் செய்த புடவைகள் வந்த சுருக்கில் பறந்து விடும். புட-

"தெரிந்தவர்களுக்குக் குறைந்த விலை, தள்ளுபடி. இதெல்லாம் இல்லாமல் வியாபாரத்தில் வெல்லுவது ஆரம்ப நிலையில் சிறிது கடினம்தான். ஆனால் தரத்தில் அக்கறை செலுத்தி கறாராக இருந்தால் அந்த அணுகுமுறையே வாடிக்கையாளர்களுக்கு உங்கள் சரக்கின் தரத்தைக் கூறிவிடும். தானாகவே ஒருத்தருக்கு ஒருத்தர் கூற அந்த விளம்பரமே வியாபாரம் வளர போதுமானது. விளம்பரத்திற்கும் தள்ளுபடிக்கும் கொடுக்கிற விலையைப் புடவையில்தானே போட வேண்டும். மார்ஜின் அளவிற்கேற்ப வருடத்திற்கொரு முறை தள்ளுபடி விலையில் புடவைகள் விற்பதுண்டு. 'டிசைன்'என்று பார்க்கப் போனா பிரிண்டட் பிளாக்கில் 2000 வகைகளை வைத்திருக்கிறேன். இருந்தும் நான் கொடுத்த அமைப்பை மற்றவர்களுக்கும் 'வேலை செய்பவர்கள்' செய்து கொடுத்து விடுவார்கள். இந்தத் தீபாவளிக்கு பட்டுப் புடவையில் கண்ணாடி வேலை செய்த புதிய டிசைன்தான் என்னுடைய ஸ்பெஷல்" என்கிறார் உமா சரவணன்.

பட்டு வியாபாரம் செய்து வந்த முதலாளியிடம் வேலை செய்தவர், சிறிது முன்னேறி, அவருடனே பங்குதாரராகியிருக்கும் பி.எம். சில்க்ஸ் (பங்குதாரர்) திரு சந்திரசேகர் :

"சலுகை, பரிசு" என்று அனாயாசமாக அள்ளிவிட்டு, "சிறப்புப் பரிசுகளை சேர்த்துத் தருகிறோம் எங்கள் கடையில் துணி வாங்கினால்" என்று விளம்பரம் செய்பவர்கள் அந்த அதிகப்படியான செலவுகளை யார் தலையில் கட்டுவார்கள் என்று ஜனங்கள் ஏன் யோசிப்பதே இல்லை" என்று காரமாக சொன்னவர் தொடர்ந்து,

'நாளைக்குத் தள்ளுபடி விலையில் விற்கப்படும்' என்று விளம்பரம் செய்யும் கடைகளில் விற்பனைக்கு முதல் நாளும், விற்பனை முடிந்த மறுநாளும் கடையை மூடி விடுகிறார்கள். 'இது ஏன்' என்று வாடிக்கையாளர்கள் நினைத்துப் பார்ப்பதேயில்லை. 'மார்ஜின்' இல்லாம ஒருவன் வியாபாரம் செய்தா அவன் மார்க்கெட் நிலைக்க முடியுமா? 40 ரூ புடவையை விலையை உயர்த்தி அதில் 10% தள்ளுபடின்னு கணக்குப் போட்டு இலாபம் அடைந்தால்தான் பரிசுகளைத் தர முடியும். இப்படி விளம்பரத்திற்கும், பரிசுகளுக்கும் செலவழிக்கும் பணத்தை புடவை விலையில் குறைத்துத் தந்தால் வாடிக்கையாளர்கள் நேரிடையாக லாபம் அடைவதோடு வியாபாரமும் நேர் வழியில் பெருக வாய்ப்பு கிடைக்குமே. இந்தக் கொள்கையைத்தான் நான் வியாபாரம் ஆரம்பித்ததிலிருந்து கடைபிடித்து வருகிறேன். என்னுடைய வாடிக்கையாளர்கள் ஒவ்வொருவரிடமும் எனக்கு நேரிடை பரிச்சயமுண்டு. 'தீதானம் நிரந்தரம்' இதுதான் என்னுடைய பாலிஸி. என்னுடைய வாடிக்கையாளர்களுக்கு மட்டும் (5000 பேர்) தீபாவளி நல்வாழ்த்துகளுடன் விலை (தள்ளுபடி) குறைந்துப் புடவைகளை விற்க இருக்கிறேன்."

**தள்ளுபடியா? தள்ளிவிடுகிற படியா?**

**உள்ளபடி சொல்கிறார்கள் இவர்கள் –**

**திருமதி சீதா பார்த்தசாரதி : (69 வயதான இல்லத்தரசி)**

"நானே புடவை வியாபாரம் செய்திருக்கிறேன். சின்னாளப்பட்டி புடவைகளை தலையில் சுமந்து வந்து வியாபாரம் செய்யும் பெண்களுக்கு உதவியாக மூட்டைகளை வைக்க இடம் தருவேன். அவ்வளவுதான். 'தள்ளுபடி'ன்னா என்னவென்றே எனக்குத் தெரியாது. அதெல்லாம் என் மாட்டுப் பெண்தான் இரண்டு மூணு தடவை போயிருக்கா. நானா புடவை, கொஞ்சம் பொட்டு விட்டது இப்படி ஏதாவது ஒன்று கண்டிப்பாக இருக்கும் குறைந்து விலை சொல்லும் புடவையில். எதுக்கு இதெல்லாம். ஒண்ணு வாங்கினாலும் திருப்தியா நல்லதா பாத்து வாங்கிக்கலாமே!"

**திருமதி ரமா ராஜகோபாலன் :**

ரோட்டரி சங்கத்தில் தீவிரமாக ஈடுபட்டு வரும் இல்லத்தரசி :

"நானே ஒரு பத்து வருஷம் முன்னே தள்ளுபடி விலையில் பொருளை வாங்க மணிக்கணக்காக க்யூவில் நின்றிருக்கிறேன். அப்போதெல்லாம் படித்தவளான எனக்கே கூட இது எப்படி, ஏன்? எதற்கு' என்கிற கேள்விகள் மனத்தில் எழுந்ததில்லை. நகரில் பிரபலமான கடையில் தள்ளுபடி என்று போய்விட்டு பிரித்துப் பார்க்கக் கூடாது. அளக்கக் கூடாது. ஆயிரம் நிபந்தனைகளுடன் ஒரு புடவை எடுக்க, பத்து புடவைகளை கையில் வைத்துக் கொண்டு இது நல்லா உழைக்குமா? உழைக்காதா? பல கவலைகளுடன் எதற்கு' நேரமும் வீணாகிக் கொண்டு. இப்போதெல்லாம் பர்சேஸ் செய்வது நேரடி விற்பனையின் போதுதான்."

**இலக்கமி : (வீட்டு வேலை செய்பவர்) :**

"தள்ளுபடி விலையிலே புடவைகளை வாங்குவதுண்டுங்க. வண்ணாரப்பேட்டை, சைதாப்பேட்டைக்கு போவேன். ஜிலு ஜிலுன்னு இருக்கும். எப்படி இந்த விலையே தாரீங்கன்னு கேட்டா நிறைய செஞ்சிட்டோம். அதான் கொடுக்கிறோம்னு சொல்லுவாங்க. புடவையை நனைச்சா போதும். ஆறு முழம் 5 முழமாகி, பிசுபிசுத்து விடும். இம்மாதிரி 2,3 வாட்டி பட்டுட்டு இப்போ விட்டுட்டேன்."

தொகுப்பு : **கீதா மோகன்**




குமரன் சில்க்ஸ்

® Only at No. 12, நாகேஸ்வரன் சாலை,
(பனகல் பார்க் எதிரில்)
தியாகராயநகர், சென்னை-600 017.
தொலைபேசி : 4343727, 4343544, 43437
ஃபேக்ஸ் : 91-44-434 3797.
டெலக்ஸ் : 23190 KUMS IN.

களுக்கு வேறு எங்கும் கிளைகள் இல்லை. எமது ஸ்தாபனத்தின் பெயரில் இருக்கும் கடைகளுக்கும் எமக்கும் எந்த விதமான சம்பந்தமும் கிடையாது.

# வாஸ்து எனும் புதையல்

**பி.ஜே. ரவிராஜ்**

ஜோதிட சாஸ்திரத்திற்கும் வாஸ்து சாஸ்திரத்திற்கும் மிகுந்த ஒற்றுமை இருக்கின்றது. ஒன்றில்லாமல் ஒன்றில்லை என்று கூட கூறலாம். மனிதன் பிறக்கின்ற பொழுது அவனின் கிரஹ நிலையை வைத்து அவனுடைய வாழ்வு இப்படித்தான் அமையும் என்று ஜோதிட சாஸ்திரம் கூறுகின்றது. நன்மையில் மகிழ்வதும், துன்பத்தில் அழுவதும் மனிதசுபாவமாக ஆகி விட்டது. மனிதனுக்கு ஏற்படும் கஷ்டம், நஷ்டம், வியாதி, துன்பம் அனைத்திற்கும் கிரஹ அமைப்பே காரணமாகின்றது என்று ஜோதிட சாஸ்திரம் கூறுகின்றது. இந்தத் துன்பங்களிலிருந்து விடுபட இதே கிரஹ (வீடு)ங்களை பற்றிக் கூறுவதே வாஸ்து சாஸ்திரமாகும். இந்த சாஸ்திரத்தை அறிந்த ஞானிகள் நாம் அறியாமை என்ற இருட்டிலிருந்து வெளிவர இதை நமக்குக் கொடுத்தார்கள். இதையே நான் திரும்பத் திரும்பக் கூற விரும்புகின்றேன்.





இது முற்றிலும் விஞ்ஞானம் என்பதனை நாம் மறுக்கக் கூடாது. இதை ஞானிகளிடம் நாம் தெளிவு பெறலாம். நாம் புதிய வீடு கட்டுவதானாலும், தொழிற்சாலைகள் அமைப்பதானாலும், இந்த மண்ணில் எந்தவிதமான கட்டுமானங்களை செய்வதானாலும் தேர்ந்த வாஸ்து விஞ்ஞானிகளை அணுகி ஆலோசனை பெற்றுக் கொள்வதன் மூலம் உங்களை நீங்கள் சொர்க்கபுரியில் இருக்கச் செய்கின்றீர்கள் என்றே கூறலாம்.

நான் எழுதிய கட்டுரையில் வீட்டின் கூரை மற்றும் தொழிற்சாலைகளின் கூரையைப் பற்றி குறிப்பிடவில்லை என்று அநேகர் கேட்டுக் கொண்டபடி இந்தப் பகுதியில் குறிப்பிடுகின்றேன்.

இன்றைய நாகரீகமாகக் கட்டப்படுகின்ற வீடுகள் அனைத்திலும் தாழ்வான கூரை அமைப்பது என்பது கட்டிடக் கலை வல்லுனர்களின் கைவண்ணமாகி விட்டது. இதைப் போன்ற வீடுகள் கேரளாவிலும் மற்றும் மலைப் பிரதேசங்களில் மட்டுமே கட்டுவார்கள். காரணம், மழை அதிகமாக பொழிவதும், பனி கொட்டுவதுவுமே ஆகும். மழை நீரோ, பனியோ சமதளமான தரையில் தேங்கினால் கட்டிடங்களுக்கு நல்லதல்ல என்பதால் இப்படிச் செய்தார்கள். இந்த கூரைகளை எப்படி அமைப்பது என்பதற்கான கட்டுமான வசதிகள் சாஸ்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

சாஸ்திரத்தில் கூறப்பட்ட வீடுகளில் கூரைகள் சம அளவில் வடக்கிலும், தெற்கிலும் இருக்க வேண்டும். கிழக்கிலும், மேற்கிலும் தாழ்ந்திருக்கலாம். இப்படி அமைக்கின்ற பொழுது அந்த வீட்டின் சுவரின் உயரம் நான்கு திசைகளிலும் ஒரே அளவில்தான் இருக்க வேண்டும் என்று கூறுகின்றது. இந்த விதிமுறைகளை நாம் தொட்டிக் கட்டு வீடுகளில் காணலாம். இம்மாதிரி கட்டப்பட்ட வீடுகளில் இன்றைய நாகரீகமான வீட்டில் இணைக்கப்பட்ட குளியல் மற்றும் கழிவு அறை அடிநிலை தண்ணீர் தொட்டி, கழிவுநீர் தொட்டி போன்றவைகளின் பாதிப்புகளே இல்லாமல் இருந்தது. இன்றைய மனிதனின் சௌகர்யங்கள் பழைய வீட்டின் கூரைக்கு நிச்சயமாக ஏற்புடையதாக இருக்காது. இன்றைய நாகரீக வீடுகளை கட்டும்பொழுது மிக அவசியமாக தாழ்ந்த கூரைகளை அமைக்கின்ற நிலை ஏற்

**கார்த்திகைக்கு உருண்டை பிடிக்கும் வெல்லப்பாகில் 2 டீஸ்பூன் நெய் விட்டு பின் பொரித்த அவலைப் போட்டு உருண்டை செய்ய வாசனை ஆள ஷைனிங் உருண்டை ரெடி.**

**– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.**

XXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXXX

பட்டால் அதை கிழக்கிலும், வடக்கிலும் மட்டுமே சாய்ந்திருக்கும்படி அமைக்க வேண்டும். வடக்கிலும், கிழக்கிலும் கூரை அதிகப்படியாக தாழ்ந்து சூரிய ஒளி உள்ளே பிரவேசிக்கத் தடையில்லாமல் இருக்கச் செய்ய வேண்டும்.

தொழிற்சாலைகளை பொறுத்தவரையில் இன்று அமைக்கப்படும் கூரைகள் அனைத்தும் தெற்கைப் பார்த்தே தாழ்ந்திருக்கின்றது. இது மிகவும் பாதிப்புகளை கொடுத்துக் கொண்டு தான் இருக்கின்றது. இதையே தெற்கில் உயர்த்தியும் வடக்கில் தாழ்த்தியும், மேற்கில் உயர்த்தியும், கிழக்கில் தாழ்த்தியும் அமைக்கலாம். மழைக் காலங்களில் இதில் வழிந்தோடும் நீர் அனைத்தும் வடகிழக்கில் வழிந்தோடும்படிச் செய்து வடகிழக்கில் அடிநிலை தொட்டி அமைத்து சேமித்து உபயோகிக்கலாம்.

எக்காரணம் கொண்டும் வட்ட வடிவமாக அமைத்து அதன் கூரை எல்லா திசைகளிலும் சாய்ந்திருக்கும்படி செய்யக் கூடாது. இதில் நீண்ட நாள் வசிப்பவர்களுக்கு மனநிலை பாதிப்பு ஏற்படுகின்றது. இதே போல் இரண்டு பக்கம் நேர் எதிர் திசைகளில் சாய்ந்திருக்கும் கூரைகளின் மைய விட்டத்தின் அடியிலும் படுத்து உறங்கக் கூடாது. முடிந்த வரை கூரைகளை தெற்கிலும், மேற்கிலும் சாய்ந்திராதபடி அமைத்தால் கொடுமையான நோய்கள் வராமல் தவிர்க்கலாம்.

வீட்டினுள் உள்ளே இன்று அநேகர் Mezzanine Floor என்று சொல்லக்கூடிய சற்று உயரமான அறைகளை அழகிற்காக வீட்டின் உள்ளே அமைக்கின்றனர். இவ்வாறிருப்பின் அறைகளை மேற்கு, தென்மேற்கு மற்றும் தெற்கில் மட்டுமே அமைக்க வேண்டும். மற்ற இடங்களில் மாற்றி அமைக்கின்றபொழுது திசைகளுக்கு ஏற்ப பெண்களையோ, ஆண்களையோ, அல்லது தொழிலையோ நிச்சயமாகப் பாதிக்கும். இது அநேகரின் அனுபவ பூர்வமான உண்மை.

இன்று Cellar என்று சொல்லக்கூடியதை சாலைக்குக் கீழே, கட்டிடத்தின் அடியில் கட்டுகின்றனர். இது சாஸ்திரத்திற்கு முற்றிலும் புறம்பானதாகும். கோவில்கள், மடங்கள் மற்றும் கோட்டைகளில் கட்டுவது மட்டும் புறம்படாததாக இருக்கின்றது. இன்று இடநெருக்கடியின் காரணமாக பேஸ்மெண்ட் என்ற அமைப்பை உருவாக்கி விடுகின்றனர். இப்படி அமைக்கப்படுகின்ற இடங்களை நன்கு விஷயம் அறிந்த வாஸ்து விஞ்ஞானிகளை அணுகி ஆலோசனை பெற்றே செய்ய வேண்டும். தெற்கிலும், மேற்கிலும் மட்டும் வரும்படியாக அமைந்தால் மிகுந்த கெடுபலன்களைக் கொடுத்துவிடும். வடக்கிலும், கிழக்கிலும் மட்டும் வரும்படியாக அமைக்கலாம். கட்டிடத்தின் அடியில் முழுவதுமாக வரும்படியாக இருக்குமானால் நன்கு அறிந்த வல்லுனர்களின் ஆலோசனைப்படியே அமைக்க வேண்டும். முடிந்தவரை இந்த இடங்களுக்கு உள்ளே செல்லும் வழியை வட கிழக்கிலேயே

*தீபாவளிக்கு அல்வா செய்யும் பொழுது, கோதுமை அரைத்துப் பால் பிழிந்து எடுத்தாலோ அல்லது ரெடி மிக்ஸ் வாங்கி செய்தாலோ அத்துடன் ஒரு கரண்டி குலோப்ஜாமூன் மிக்ஸை கலந்து செய்தால் அல்வா மிகவும் ருசியாக இருக்கும்.*

*- வசந்தி ரவிச்சந்திரன்*

# பொய்யல்ல நிஜம்

வேலை கிடைக்காதவர்களுக்கு

**மாதம் ரூ. 3000/- சம்பளம்**

(ஆண்/பெண்களுக்கு)

## நிச்சயமாக வேலை தருகிறோம்

✦ உங்கள் ஊரில் உள்ள பணக்காரர்களைப் பாருங்கள். நிச்சயம் சொந்த தொழில் செய்பவர்களாகவே இருப்பார்கள்! மற்றவர்களிடம் வேலை செய்பவராக இருக்கமாட்டார்கள்.

✦ நீங்களும் ஏன் சொந்த தொழில் செய்யக் கூடாது?

✦ எந்த தொழிலை செய்வது? எப்படி ஆரம்பிப்பது? நடத்துவது? என்று பலப்பல சந்தேகங்கள் இல்லையா?

✦ தையல் தொழிலை செய்யலாமே!

✦ தையல் தொழிலில்தான் அதிக வருமான வாய்ப்புள்ளது. தினம் ஒரு பேண்ட், ஒரு சட்டை தைத்தால் ரூ. 100/- வருமானம் உண்டு.

✦ தையற் தொழில் ஒன்றும் மிகப் பெரிய ரகசியம் உள்ள தொழில் அல்ல. சாதாரண படிப்பு உள்ள யாரும் எளிதில் புரிந்து கொண்டு செய்யலாம்.

✦ தபால் மூலமாக: ஆண்/பெண்/குழந்தைகள் ஆடைகளுக்கு அளவெடுப்பது? வெட்டுவது? தைப்பது எப்படி? போன்ற பயிற்சி தருகிறோம். பயிற்சி மட்டும் இன்றி, தையல்கடை ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்துவது எப்படி? என்ற பயிற்சியும் • டிப்ளமோவும் தருகிறோம்.

✦ பயிற்சியின் போது வீட்டில் தையல் இயந்திரம் தேவை இல்லை. தபால் பயிற்சியில் தைக்கும் முறை வித்தியாசமாக அமைக்கப்பட்டுள்ளது.

✦ முழுமையான தையர்கலைஞராக ஆண்/பெண்களை உருவாக்குவோம்.

✦ வீட்டை விட்டு வெளியே சென்று பயிற்சி பெற முடியாதவர்களுக்கு இது ஒரு அருமையான திட்டமாதலால், உங்கள் முகவரியை தெளிவாக ஒரு போஸ்ட் கார்டில் எழுதி

**வனஜ் தையற் பள்ளி,**
**3, ஹால்ஸ் சாலை, எழும்பூர், சென்னை - 600 008.**

என்ற முகவரிக்கு எழுதுங்கள்.
தாங்கள் இலவச விவரப் புத்தகம் அனுப்புகிறோம். போன் : 8258265

**நேர்முக பயிற்சி உண்டு** | **ஹாஸ்டல் வசதி ஆண்களுக்கு உண்டு**

● நேர்முகப் பயிற்சி மையங்கள், 33, காந்தி இர்வின் சாலை, எழும்பூர், சென்னை - 8; ● 4, ராஜாஜி சாலை, மேற்கு தாம்பரம் (நேஷனல் தியேட்டர் எதிரில்) சென்னை - 45; ● 97, L.B. ரோடு, அடையார், சென்னை - 20. (கணபதிராம் தியேட்டர் அருகில்); ● 339, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 24.

அமைக்க வேண்டும். முடியாதபட்சத்தில் வாஸ்து பலம் நிறைந்த இடத்திலேயே அமைக்க வேண்டும். வாஸ்து பல மாறு பாட்டை வல்லுனர்கள் உதவியுடனே செய்ய வேண்டும். இந்த Cellar பகுதியை கார் பார்க்கிங் அல்லது பழைய சாமான்கள் கொட்டி வைக்கும் அறையாக மாற்ற வேண்டும். இந்தப் பகுதியில் நிச்சயமாக குடியிருக்கக் கூடாது.

இன்று பெரிய வீட்டிற்குக் காவல்காரர் களை அமர்த்தி அவர்களுக்கு என்று தனி அறைகளை அமைக்கின்றனர். தெற்கு மற்றும் மேற்கு பார்த்த வீட்டிற்கு இம்மாதிரி கட்டி டங்களை தெற்கு அல்லது மேற்குக் காம்ப வுண்டு சுவரை தொட்டுக் கொண்டிருக்கும்படி அமைக்கலாம். வடக்கை பார்த்த வீட்டிற்கும் கிழக்கை பார்த்த வீட்டிற்கும் காம்பவுண்டு சுவரை தொடாமல் முடிந்தவரை ஈசான்ய திசையில் இல்லாதபடி இருக்கச் செய்ய வேண்டும்.

இன்று பெரிய வீடுகளில் வீட்டின் பின் புறம் நீச்சல் குளங்களை அமைத்துக் கொள் கின்றனர். இம்மாதிரி குளங்கள் ஈசான்யம் என்று கூறக்கூடிய வடகிழக்கிலேயே அமைக்க வேண்டும். அப்படி அமைக்கின்றபொழுது கிழக்கும் வடக்கும் சந்திக்கும் மூலையில் அமைக்கக் கூடாது. இன்று அநேக பெரிய ஓட்டல்களில் மாடிகளிலேயே நீச்சல் குளங் களைக் கட்டுகின்றனர். அப்படி கட்டினாலும் அவை வடகிழக்கு மூலையிலேயே வரும்படி அமைக்க வேண்டும்.

இன்று அநேகர் பல புத்தகங்களையும் கட்டுரைகளையும் படிக்கின்றபொழுது அதன் படியே நம் வீடு தவறாக அமைந்திருக்கின்றதே என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். முதலில் கவலைப்படுவதை விடுத்து அது எங் கிருந்து எழுதப்பட்டது என்பதனை அறிய வேண்டும். நான் முன்பே கூறியது போல் நிலங்கள் 5 வகைகளாக பிரிக்கப்பட்டுள்ளன. அவை நெய்தல், குறிஞ்சி, முல்லை, மருதம் மற்றும் பாலையாகும். இந்த ஐந்து வகையான நிலங்களுக்கும் ஐந்து வகையான சாஸ்திரங்கள் உண்டு இது ஒன்றோடு ஒன்று கலந்த இருபத்து ஐந்து வகையான சாஸ்திரங்கள் உண்டு. இதில் எவர் எதிலிருந்து எழுதினார் என்பதனை அறிந்து கொள்ளாமல் வீண் குழப்பங்களை விடுத்து சரியான வல்லுனர்களின் உதவியுடன் நம் குறைகளை நீக்கிக் கொள்வோம்.

இன்று நமக்குக் குறைகளை நிவர்த்தி செய்து கொள்ள எந்திரங்களும், சீனர்களின் கிரிஸ்டல் பந்து, நமக்குப் பெரிதும் உதவியாக இருக்கின்றது.

என்னிடம் ஆலோசனை பெற விரும்பு வோர் மாதத்தின் முதல் தேதி முதல் 7-ந் தேதி வரை சென்னையில் 8570084லும் கோவையில் மற்ற நாட்களில் 579031 மற்றும் 577907லும் தொடர்பு கொள்ளலாம்.

### நார்ச்சத்து

நார்ச்சத்து குடலில் ஜீரணிக் கப்படுவதில்லை. எனவே அந்த நார்ச்சத்து வெளியேறும்போது, குடலிலிருந்து பல வேதியங் களை தன்னிடம் ஈர்த்துக் கொண்டு வெளியேறுகிறது. அப்படி ஈர்க்கப்பட்ட வேதியங்களில் கேன்சர் உண்டாக்கும் வேதியங்களையும் ஈர்க்கும் என்பது தெரியவந்துள்ளது. இவ்வாறு வேதியங்கள் கலந்த நார்ச்சத்து, குடலில் அதிக நேரம் தங்காமல் வெளி யேறி விடுவதால், கெடுதல் உண்டாக்கக்கூடிய வேதியங்கள், இரத்தத் தில் புகுவது தடைசெய்யப்படுகின்றது. நார்ச்சத்து கொலஸ்ட்ரால் அள வைக் குறைப்பதோடு, பித்தநீர் சுரப்பியில் கல் உண்டாவதையும், அப்பெண்டிசைட்டிஸ் என்னும் குடல்வால் நோய் ஏற்படுவதையும், மலச்சிக்கலையும் தடுக்கிறது. கேழ்வரகு, மக்காச்சோளம், சோயா பீன்ஸ், காராமணி, அகத்திக்கீரை, கருவேப்பிலை, புதினா, வாழைத்தண்டு, கீரைத்தண்டு போன்ற பண்டங்களில் நார்ச்சத்து அதிகம்.

— ஆர். கீதாஞ்சலி

# காட்டன்



காலந்தோறும் ரசனைகள் மாறிவருவது தெரிந்த விஷயம்தான். அது புடவை சம்பந்தமாக மாறுவது ரொம்பவே தெரிந்ததுதான். எப்பப்பாரு 'புதுசா என்ன புடவை வந்திருக்கு' என்று தான் கண்ணும் மனசும் அலையும்.

அதனால்தான் நர்சரி பள்ளிகள் மாதிரி எக்கச்சக்கமான புடவைக் கடைகள். ஒவ்வொரு கடையும் ஒவ்வொருவிதமாக 'எக்ஸ்க்ளூசிவ்' ஆகக் காட்சி அளிக்கின்றன. அந்த வகையில் வித்தியாசமாக வாங்க நினைப்பவர்கள் அப்படிப்பட்ட கடைகளை நாடுவதில் மிகவும் விருப்பமுள்ளவர்களாக மாறி வருகிறார்கள். மிகப் பெரிய கடைகளில் 'புடவை சமுத்திர'த்திற்கு நடுவில் நின்று தேர்ந்தெடுப்பது ஒரு கஷ்டம் என்றால்,

# கம்பீரத்தைத் தருகிறது!

இப்படிப்பட்ட 'எக்ஸ்க்ளூசிவ்' கடைகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட ரகங்களில் தேர்ந்தெடுப்பது - அதுவும் ஒரு சுகம்தான். அவ்வகையில் 'பொடிக்' எனப்படும் கடைகளும் மற்றவைகளும் சென்னையில் நிறைய வளர்ந்து விட்டன.

அவற்றுள் நிறைய விளம்பரங்களில் கண்களில் படும், மயிலாப்பூரில் புதிய பறக்கும் மின்சார ஸ்டேஷனுக்கு எதிர்த்துள்ள ஆதூரிக்குள் தலையை நீட்டினோம். அதற்கும் முன்பே மண்டையில் குடைச்சல், 'ஆமாம் ஆதூரி என்றால் என்ன? இது பேரா, ஊரா?' ஏனென்றால் 'பொடிக்'குகளில் வித்தியாசமான பெயர்களாகத்தானே வைப்பார்கள்.

"இதில் பெரிய மர்மம் ஒன்றுமில்லீங்க" என்கிறார் ஆதூரி ஷாப்பின் உரிமையாளர் புருஷோத்தமன்.

"நாங்கள் ஆந்திராவைச் சேர்ந்தவர்கள். எங்கள் பரம்பரைத் தொழிலே புடவை வியாபாரம்தான். என்னுடைய தந்தையார் சென்னைக்கு வந்து செட்டிலாகி புடவை வியாபாரம் ஆரம்பித்தபோது தங்கள் ஊர்ப் பெயரை மறக்காமல் ஆதூரி என வைத்து விட்டார், அவ்வளவுதான்!" என்கிறார்.

'ஆர்னமெண்ட்டல் காட்டன் சாரீஸ்' இவருடைய கடையின் விசேஷ ஐட்டமாம். காட்டன் புடவைகளில் ஃபேன்ஸி புடவைகளாக நிறைய வைத்திருக்கிறார். அவற்றை மேலும் அழகு



பகுத்தி பல டிசைன்கள், பல ரகங்கள் எனத் தேர்ந்தெடுத்து நிறைய வைத்திருக்கிறார்.

"இன்றைய பெண்கள் நிறைய காட்டன் புடவைகளைத்தான் விரும்புகிறார்கள். அது மிகவும் கம்பீரமான தோற்றத்தைப் பெண்மைக்குக் கொடுக்கிறது. அதிலும் சிம்பிளாக இருக்கவேண்டும். அதே சமயம் மிகவும் வித்தியாசமானதாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். அவர்களுடைய இந்த ரசனையை மனதில் வைத்துத் தான் இந்தப் புடவைகளைத் தேர்ந்தெடுத்து வைத்திருக்கிறேன்" என்கிறார் புருஷோத்தமன்.

"இப்போதெல்லாம் புடவைகளை எந்தக் கண்ணோட்டத்தில் பார்க்கிறோமோ அதே எண்ணத்தில் சுடிதார்களையும் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. ஏனென்றால் இளம்பெண்கள் என்றால் சுடிதார் என்ற நிலைமை வந்து விட்டது. அவர்களும் எளிமையாக அதே சமயம் பார்க்கும் போதே வியப்பாக 'அடேடே என்ன டிசைன்' என்று வியக்கும்படியாக இருக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். அதனால்தான் சுடிதார் செலக்ஷனும் புடவை செலக்ஷனைப் போலவே ரொம்பவும் சிரமப்பட்டு செய்ய வேண்டியதாக இருக்கிறது. ஆனால் வரும் கஸ்டமர்கள், 'ரொம்ப நல்லாருக்கு சார் உங்க கலெக்ஷன்' என்று சொன்னால் ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கிறது" என்கிறார் இவர்.

"இதெல்லாம் சரி, தீபாவளிக்கு என்ன புதுசா..." நம் பல்லவியை விடலாமா?

"ரங்கோலி புடவை எனும் அழகிய பட்டுப் புடவைகளை அறிமுகப்படுத்துகிறோம்" என்றார். ரங்கோலி என்றால் கலர் கலராக இருக்குமோ என்று பயந்து கொண்டு பார்த்ததில் அப்படியில்லை. 'பளிச்'சென்று அழகிய வண்ணங்களில் சிறிய ஜரிகை பார்டர்களோடு பாந்தமாக இருக்கின்றன புடவைகள்.

பின்னே ரங்கோலி என்று ஏன் பெயர் வைத்தார்களாம்?

"ரங்கோலி என்றால் வண்ணம்தானே? ரங்கோலிக் கோலம் பட்டால் 'பளிச்'சென்று அனைத்தையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு தான் புலப்படும் இல்லையா? அது போல 'காடி'யாக இல்லாமல் அதே சமயம் 'பளிச்' சென்று இருக்கின்ற வண்ணங்களில் இவை தயாரிக்கப்பட்டிருப்பதால் இந்தப் பெயரை வைத்திருக்கிறோம்" என்கிறார்.

இது தவிரவும் ரெடிமேட் பிளவுஸ்கள், மற்ற சின்தடிக் புடவைகள் என வித்தியாசமாக 'எக்ஸ்க்ளுசிவ்' 'ஷாப்'பாக அமைந்திருக்கிறது ஆதூரி ஷாப்.

"இவ்வளவு தூரம் நீங்கள் எங்களைப் போன்ற விற்பனையாளர்களையும் அணுகிக் கேட்பதால் இன்னொரு விஷயத்தையும் சொல்கிறேன். நமக்கென்று தனி ரசனை உடையவர்கள் எங்களுடையது போன்ற கடைகளுக்கு வந்து அருமையான புடவைகளையோ, சுடிதார்களையோ வாங்கிச் செல்கிறார்கள். மற்றவர்கள் 'நாங்களும் தான் கடை கடையா ஏறி இறங்குகிறோம். இந்த மாதிரி யெல்லாம் கிடைக்கறதேயில்லை...' அப்படின்னு வருத்தப்படுவாங்க.

அதுக்குக் காரணம் இருக்கு. எங்களுடையது போன்ற 'தேர்ந்தெடுக்கப்பட்ட ரகங்கள்' வைத்திருக்கும் கடைகளில் விலை அதிகமாக இருக்குமோ என பயந்து உள்ளேயே வராமல் போய் விடுவதுதான் அதற்குக் காரணம். எல்லோருமே அப்படியில்லை. உதாரணத்திற்கு நாங்கள் பக்கத்திலேயே 'கோடவுன்' வைத்திருக்கிறோம். மொத்தமாகவும் வியாபாரம் செய்கிறோம். அதே மொத்த வியாபார விலையில்தான் இங்கும் விலை நிர்ணயிக்கிறோம். அதனால் கணிசமாக விலை குறையும். 'ஹோல்சேல்' ரேட்டில் எங்களால் கொடுக்க முடிகிறது. இப்படி பல பேர் இருக்கலாம். எதற்காகச் சொல்ல வருகிறேன் என்றால் நாங்கள் வித்தியாசமான உடைகளை உடுத்த வேண்டும் என நினைப்பவர்கள் இப்படிப்பட்ட கடைகளை அணுகலாம். விலையைப் பார்த்துக் கொள்ளலாமே! நாங்கள் ஃபேன்ஸி காட்டன் புடவைகளில்தான் அதிகம் கவனம் செலுத்துகிறோம். அந்த மாதிரி ஒவ்வொருத்தர் ஒவ்வொரு மாதிரி 'ஸ்பெஷலைஸ்' செய்திருப்பார்கள். அவற்றை என்ன எனத் தெரிந்து கொண்டு பலன் பெறலாமே!"

என்கிறார் புருஷோத்தமன். இவரே வண்ணச் சேர்க்கை, டிசைன்களில் அதிகம் பரிச்சயமும், ஆர்வமும் உள்ளவராம். சிறு வயதிலிருந்தே இத் தொழிலோடு வளர்ந்து விட்டதால் என்னால் எளிதில் வித்தியாசமான உடைகளைத் தேர்ந்தெடுத்து வைத்துக் கொள்ள முடிகிறது என்கிறார்.

சரி, இந்தத் தீபாவளிக்கு இன்னக் கடைகளிலும் உள்ளே நுழைந்து பார்த்துவிடலாம் இல்லையா?

- புவனா

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



**குஞ்சாலாடு மற்றும் ரவா லாடு செய்யும் பொழுது கையில் நெய்யை தடவிக் கொண்டு உருண்டை பிடித்தால் சரியாக பிடிக்க வரும். உருண்டையும் வாசனையாக இருக்கும்.**

**– வசந்தி ரவிச்சந்திரன்**

எங்கள் பொன்விழா ஆண்டில்

உங்கள் கனவை நனவாக்கும்

நவீன பிரஷர் குக்கர்







ஏறத்தாழ அலுமினியம் பிரஷர் குக்கரின்
விலையில் காளி காப்பர் பாட்டம்
ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பிரஷர் குக்கர்

# காளி

காப்பர் பாட்டம்
ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பிரஷர் குக்கர்

- குறைவான விலை
- அதிக சிக்கனம்
- நிறைவான அமைப்பு
- உயர்வான மதிப்பு
- விரைவான செயல்திறன்
- எளிதான பராமரிப்பு

# kali

COPPER-BOTTOM
STAINLESS STEEL
PRESSURE COOKER

kali 50
GOLDEN YEARS

காளி : விலையில் குறைவு - மதிப்பில் உயர்வு - மனதில் நிறைவு.




# தீபாவளிப் பரிசு
# ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும்



# மகத்தான முதலீட்டுத் திட்டம்!

**ரூ.10,000 முதலீடு செய்யுங்கள்.**
**5 ஆண்டுகளில் ரூ.20,000 (இரு மடங்கு)**
**பெற்றுக் கொள்ளுங்கள்.**

**அத்துடன் 4 இலக்கியப் பொக்கிஷங்களையும் அன்பளிப்பாகப் பெறுங்கள்**

21.10.97க்குள் டெபாசிட் தொகை அனுப்புபவர்களுக்கு மட்டுமே 'அமுதசுரபி' 'கல்கி' – 1997 ஆம் ஆண்டின் தீபாவளி மலர்கள் அனுப்பப்படும். பிறகு வரும் டெபாசிட்களுக்கு 5 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இதழ்களும் 1998லிருந்து 5 ஆண்டுகளுக்குத் தீபாவளி மலர்களும் கிடைக்கும்.

1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 10,000 (ரூ. பத்தாயிரம்) 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக் / டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:

---

**'ஸ்ரீராம் டிரஸ்ட்'**, ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு, சென்னை – 600 102. தொலைபேசி எண்: 628 68 96 628 78 79

1. முழுப்பெயர்: திரு / திருமதி / செல்வி..............................
   முகவரி..............................
   ..............................
   ..............................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர்:
   முழுப்பெயர்..............................
3. வாரிசுதாரர்..............................
4. கல்கி , அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி..............................
   ..............................
   ..............................

CHEQUE / D.D.No. DT. ON

இடம் .............................. அன்புள்ள

தேதி .............................. முதலீட்டாளர் கையொப்பம்



# தோட்டம் போடலாமே!

## பதில்கள் : தண்மதி

(தோட்டக்கலை வல்லுனர்)

**பிச்சி செடியை கயிறு கட்டி படர விட்டிருக்கிறேன். மண்ணில் விழுந்து முளைப்பது நல்லது என்கிறார்கள். சரியா?**

திருமதி. ஜானகி குமார், இரணியல்.

பிச்சி செடியை கயிறு கட்டி ஏற்றி விடுவதை விட செடியாக வளர்ப்பது நல்லது. வளரும் நுனியில் கயிறு கட்டுவதற்கு பதில் வெட்டி விடுங்கள். பக்கக் கிளைகள் நிறைய புதிதாகக் கிளம்பும். கிளைகள் எல்லாம் பூக்கள் தாங்கும். ஆக கொடியாக வளர்க்கும் செடியை விட புதர்ச்செடி (bush) ஆக வளர்க்கும் செடியில் அதிக பூக்கள் பூக்கும்.

**என் வீட்டில் இரண்டு ரோஜா செடிகள் வைத்திருக்கிறேன். மூன்று அடி உயரத்திற்கு ஒரே கிளை வளர்ந்து கொண்டே போகிறது. ஆனால் கீழே இருந்து இலைகள் கருகிக் கொண்டே வருகிறது. இதற்கு என்ன செய்ய வேண்டும்?**

திருமதி. சரளாதேவி, மதுரை.

நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்கள் ரோஜாவில் தழைச்சத்து (நைட்ரஜன்) பற்றாக்குறை இருப்பதாகத் தெரிகிறது. ஆகவே தழைச்சத்து உரங்களை இடுங்கள். உங்கள் ரோஜாவை தொட்டியில் வளர்க்கிறீர்களா அல்லது மண்ணில் வளர்க்கிறீர்களா என்று சொல்லவில்லை. மேலும் எத்தனை வருடத்துச் செடி என்றும் குறிப்பிடவில்லை. ஆகவே எவ்வளவு உரம் இடவேண்டும் என்று சொல்ல முடியவில்லை. ரசாயன உரங்களை சற்று அதிகமாக போட்டு விட்டாலும் செடிக்கு ஆபத்து. ஆபத்து ஏதும் இல்லாத இயற்கை உரம் அல்லது வேப்பம் புண்ணாக்கு இடுங்கள். இயற்கை உரம் என்றால் தரமானதுதானா என்று விசாரித்து இடுங்கள். செடியின் வேர்ப்பகுதியில் இருந்து சற்று தள்ளி, மாதம் ஒருமுறை இடுங்கள். முன்னேற்றம் தெரியும்.

**கருவேப்பிலைச் செடியின் இலைகள் சற்றே சுருங்கியபடி வளர்ந்து வருகிறது. என்ன செய்ய வேண்டும்?**

திருமதி. பூங்கொடி, புதுவை.

உங்கள் செடி நோயினால் பாதிக்கப்பட்டிருக்கக்கூடும். நோய்த் தாக்குதலாயிருந்தால் பாவிஸ்டின் 2 கிராம்/ஒரு லிட்டர் தண்ணீரில் கலந்து இலைகள் நன்கு நனையுமாறு அடியுங்கள். தெளிந்து விடும்.

**என்னுடைய இட்லிப் பூ செடி, லில்லிப் பூச்செடிகள் நன்றாக மொட்டு விட்டன. ஆனால் மொட்டுக்கள் விரிவதே இல்லை.**

என்னவாக இருக்கும்?

திருமதி சரோஜா, அகமதாபாத்.

சில வீடுகளில் பூக்கள் தரவேண்டிய பூச்செடிகள் நன்றாக செழித்து வளர்ந்து கொப்பும் கிளையுமாக கண்ணைப் பறிக்கும்விதமாக வளர்ந்து நிற்கும். ஆனால் பூக்கள் மட்டும் வராது. இவ்வாறு செடி வளர்ச்சி (vegetative growth) நன்றாக இருந்து, பூ காய் வருவதில் (reproductive growth) குறை இருந்தால் அதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். ஒன்று, செடிகளுக்கு சரியான வெய்யில் கிடைக்காமல் தவிப்பதாக இருக்கலாம். இரண்டு, தண்ணீர் அதிகம் கிடைப்பதாக இருக்கலாம். மூன்று, தழைச்சத்து அதிகம் கிடைப்பதாக இருக்கலாம். இந்த மூன்றில் ஏதேனும் ஒன்றோ அல்லது மூன்றுமே காரணமாக இருந்தாலோ மேற்சொன்னபடி பூக்கள் வராது. இலைகளே அடர்ந்து காணப்படும்.

ஆகவே, தொட்டிச் செடியாக இருப்பின் வெய்யில் நன்கு படும்படியாக மாற்றி வையுங்கள். தண்ணீர் அளவை சற்றுக் குறையுங்கள். மணிச்சத்து, சாம்பல் சத்து உள்ள சூப்பர் பாஸ்பேட், பொட்டாஷ் இடுங்கள். தழை, மணி, சாம்பல் சத்துக்கள் சரிசமமாக செடிகளுக்குக் கிடைத்தால் பிரச்சினை இல்லை. ஒன்றை விட ஒன்று அதிகரித்தாலோ தொல்லைதான்.

மணி பிளான்ட் பெரிய இலைகளுடன் அழகாக வளர வழி சொல்லுங்களேன்?

செல்வி. காந்தி, திருச்சி.

மணி பிளான்ட் எளிதில் வளரக்கூடிய ஒரு கொடி. இது இருந்தால் வீட்டில் செல்வம் கொழிக்கும் என்று அந்தக் காலத்தில் நம்பினார்கள். அதனால்தான் அதற்கு Money plant என்று பெயர். மணி பிளான்ட்டை மண்ணிலும் வளர்க்கலாம், தண்ணீரிலும் வளர்க்கலாம். ஆனால் மண்ணில் வளர்த்தால்தான் பெரிய இலைகளுடன் வேகமாக வளரும். உங்கள் வீட்டில் தடித்த டிரங்க் உள்ள மரங்கள் (தென்னை, மா இப்படி) இருந்தால் அதில் ஏற்றி விடுங்கள். பற்றிப் படர ஒரு கொழுக் கொம்பு கிடைத்தால் போதும். பெரிய, பெரிய இலைகள் விட்டு விறுவிறுவென வளர்ந்து விடும் இந்தக் கொடி. சற்று நிழலான பகுதியில் வளருங்கள். கோடைக்காலத்தில் நன்கு தண்ணீர் பாய்ச்சுங்கள். ஹோஸ் பைப் மூலம் அவ்வப்போது இலைகள் மேலும் தண்ணீர் அடியுங்கள். இதனால் இலைகளின் மேல் படிந்துள்ள தூசு கழுவப்பட்டு இலைகள் பளபளவென அழகாகக் காட்சி அளிக்கும்.

Hard Pruning என்றால் என்ன? நிறைய கவாத்து செய்வதா அல்லது hard wood (தடித்த கிளைகளை) கவாத்து செய்வதா?

திருமதி. தனலக்ஷ்மி, கோயம்புத்தூர்.

முதலில் கவாத்து (Pruning) என்றால் என்ன என்று பார்ப்போம். மரங்கள், செடிகளில் நன்கு வளர்ந்து விட்ட, சற்றே காய்ந்த மரப் பட்டைகளுடன் காணப்படும் கிளைகளை வெட்டி விடுவதற்குப் பெயர் கவாத்து செய்வது. மா, எலுமிச்சை போன்ற மரங்களில் கிளைகள் அதிகமாக வளர்ந்து ஒன்றோடொன்று சிக்கி பின்னி உள்ள கிளைகள், காய்கள், பழங்களுக்கு வெய்யிலும், காற்றோட்டமும் கிடைக்காமல் போய்விடும். அதனால் நல்ல காற்றோட்டமும் வெளிச்சமும் கிடைக்கவும் நல்ல வடிவில் மரங்கள் வளரவும் கவாத்து செய்யப்படுகின்றது. இது மட்டுமல்லாமல், கவாத்து செய்வதால், புதிய கிளைகள் தோன்றி மேலும் அதிக பூக்கள், காய்கள் உண்டாகி மரத்தின் உற்பத்தியும் அதிகரிக்கிறது.

ரோஜா, மல்லி போன்ற பூச்செடிகளிலும் திராட்சை, எலுமிச்சை, மா போன்ற பழ மரங்களிலும் ஆண்டுக்கொருமுறை அல்லது இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை செய்வது வழக்கம்.




இனி, hard pruning என்றால் என்ன என்று பார்ப்போம். மரத்தின் தடிமனான அடிப்பகுதியை டிரங்க் என்பர். அதற்கடுத்தாற்போல வரும் காய்ந்த பெரிய கிளைகளை hard wood என்பர். பின் அதிலிருந்து சின்னச் சின்னதாக பிரியும் கிளைகளையும் இலைக் கொத்துக்களையும் soft wood என்றும் அழைப்பர். சாதாரணமாக கவாத்து என்றால் soft wood ஐ வெட்டி விடுவது. Hard pruning என்றால் Hard wood ஐயும் வெட்டி விடுவது. மரம், இலைகள், கிளைகள் ஒன்றும் இல்லாமல் மொட்டையாக இருக்கும். பின்னர் அதிலிருந்து புதிதாகக் கிளைகள் முளைத்து வரும்.



# அதர்வண பத்ரகாளி

**நவராத்திரி முடிந்தது. ஸ்ரீசக்ரநாயகியாக, பிந்து மண்டல வாஸினியாக இருக்கும் தேவிக்கு அவளைச் சுற்றி பல தேவதைகள் - படைவீராங்கனைகளாக சக்திகளாக விளங்குகிறார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் பராக்கிரமம் மிக்கவர்களே. அவர்களில் ஒருவர் பிரத்யங்கிரா தேவி எனப்படும் அதர்வண பத்ர காளி. அந்தத் தேவியைப் பற்றி விளக்கம் இங்கு தரப்படுகிறது -**

நரஸிம்ஹரை அடக்க எழுந்த சரப மூர்த்திக்கு உதவ வந்தவள் இந்த பத்ரகாளி. இவளையே ப்ரத்யங்கிரா என்றும் உக்ர பிரத்யங் கிரா என்றும் மந்திர சாஸ்திரம் குறிப்பிடும். பயங்கரமான தோற்றம் கொண்டதால் ''உக்ரா'' என்று அழைக்கப்படுகிறாள். இவளுடைய மந்திரத்தைக் கண்டுபிடித்தவர்கள் 'அங்கிரஸ்,' 'பிரத்யங்கிரஸ்' என்ற இரண்டு மஹரிஷிகள். ஆகவே அவர்கள் பெயரைத் தாங்கியதாய் இவள் பெயர் அமைந்திருக்கின்றது. பிரத்யங்கிரா என்ற சொல்லில் அங்கிரஸ், பிரத்யங்கிரஸ் என்ற இரண்டு பெயர்களும் அடங்கியிருக்கின்றன. இவளை சரபசக்தி என்றே கூறுவர். இவள் மந்திரத்தை ஜபிப்பவரிடம் த்வேஷம் கொள்ளக்கூடாது என்பது :

"ப்ரத்யங்கிரா ஜ்ஞானிலே ந குர்யாத் த்வேஷ மாத்மனி" என்ற பழமொழியால் தெரிகின்றது. இவள் பெருமை பற்றிப் பேசும் ருக் மந்திரங்கள் ஒன்பது வர்கங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. இருபது அக்ஷரங்கள் கொண்ட மூலமந்திரமும், மாலா மந்த்ரமும் பிரபஞ்சஸார ஸங்ரஹத்திலிருந்தும் கிடைக்கின்றது.

முன்னொரு ஸமயம் ஹிரண்யனைக் கொன்று உலகைக் காக்க பகவான் நரஸிம்ம மூர்த்தி ஸ்தம்பத்திலிருந்து உதித்தார். அவர் ஹிரண்யனைக் கொன்றதும் ப்ரஹ்லாதனும் தேவர்களும், ரிஷிகளும் அவரைத் துதித்தனர். ஹிரண்யனின் ரத்தத்தைத் தீண்டியதால் நரஸிம்மர் மிகவும் பெரிய கருவம் கொண்டு, பூமி நடுங்க, கடல் கொந்தளிக்க, ஜீவராசிகள் மூர்ச்சை கொள்ள பயங்கரமாய் கர்ஜித்துக் கொண்டு ஆர்ப்பரித்தார்.



இதனால் மருண்ட தேவர் சிவனைச் சரணடைந்தனர். கால காலன் சரபம் என்ற பக்ஷியாய் ஆவிர்பவித்தார். சந்திரன், சூரியன், அக்னி அவருடைய கண்களாய் இருந்தனர். மிகக் கூரிய நகங்கள். காளி துர்கை இருவரும் இரண்டு இறக்கைகள். கூர்மையான நீண்ட அலகு, மேல் நோக்கிய முகம், நான்கு கரங்கள்,




# SEA SIDE PLOTS NEAR MAHABALIPURAM

EXCLUSIVE 2 & 4.5 GROUNDS FARM PLOTS AESTHETICALLY LANDSCAPED, ABUTTING EAST COAST ROAD AND A PICTURESQUE WATERWAY WITH COUNTRY CLUB FACILITIES.

- **CLEAR TITLE** • **EASY INSTALMENTS**
- **ASSURED APPRECIATION**
- **LIFE MAINTENANCE**

**FREE SITE VISIT**

Contact:

**COASTLINE PROPERTIES (INDIA) PVT. LTD.**




#1, 3rd Cross Street, Karpagam Gardens,
Adyar, Chennai - 600 020.
Phone: 4911819, 4914161. Fax; 4914161.
E-mail : coastline md 2. vsnl.net.in

**Open All 7 Days From 8 A.M to 9 P.M**

**UNIQUE OPPORTUNITY FOR HOUSEWIVES/ RETIRED PERSONS TO EARN MONEY FROM HOME WITHOUT INVESTMENT.**

# அபிராமி ஒரிஜினல் சிதம்பரம் கவரிங் நகைகள்




No. 130. | G. Rs. 280 -



No. 136. | G. Rs. 280



No. 122 | G. Rs. 260 -



No. 121. | G. Rs. 260/-






No. 143. Rs. 75 -



No. 138. Rs. 180 -



No. 164. Rs. 75 -



Rs. 100/- Rs. 100/-



No. 153. Rs. 75/-



½ கிராம், 1 கிராம், 2 கிராம் செயின், வளையல், நெக்லஸ் நகைகள் உபயோகித்த பின்பும், "திரும்ப பணம் பெறும்" நிபந்தனையுடன், இரண்டே ஷோரூம்களில் மட்டுமே கிடைக்கும்.

* இலவச கேட்லாக்கிற்கு விண்ணப்பிக்கவும் * நகையை V.P.P.ல் பெறலாம்.

## அபிராமி

8 & 34, ரெங்கநாதன் தெரு
தி.நகர், போன் : 4347806
மாம்பலம் ரயில்நிலையம் அருகில்

* "அபிராமி சிதம்பரம் கவரிங்" என்பதை கவனித்து வாங்குங்கள்! * கிளைகள் கிடையாது!

ஒருநாள் உப்புமாவிற்கென்று உடைத்த ரவையில் பாசிப் பருப்பு கலந்து பொங்கல் செய்தேன். சூப்பராக இருந்தது. குக்கர் கூடத் தேவையில்லை. வாணலியிலேயே செய்து விடலாம். விரைவில் வெந்து விடும். சுவையும், மணமும் பிரமாதம். அரிசியில் சலித்த குருணையைக் கூட உபயோகித்து வெண் பொங்கல், சக்கரைப் பொங்கல் செய்யலாம். குழைவாக வேண்டுமென்றால் தண்ணீர் அதிகமாக வைத்தும், பொலபொலவென்று விரும்புபவர்கள் தண்ணீர் குறைவாக வைத்தும் நம் இஷ்டத்திற்குச் செய்யலாம்.

— விஜயராணி

பாதி உடல் பக்ஷி; பாதி உடல் ஸிம்மம். உக்ரமான நீண்ட நாக்கு. விண் தொடும் வால். எட்டுக் கால்கள். இவ்வாறான உருவம் கொண்டு சரபருத்ரன் நரஸிம்மரின் சக்தியை அடக்கினார்.

ஆயினும் நரஸிம்மர் தம் உடலிலிருந்து கண்ட பேருண்டம் என்ற பெயர் கொண்ட ஒருவிதமான பக்ஷியின் உருவில் மீண்டும் வெளிவந்தார். கண்ட பேருண்டம் என்ற பக்ஷி சரபபக்ஷிக்கு விரோதமெனத் தெரிகின்றது. சரபருடன் சண்டைக்கு ஆயத்தமானார். அப்போது சரபருக்குக் கோபம் அதிகமாயிற்று. அவர் நெற்றியிலுள்ள நெருப்புகளிலின்றும் 'உக்ரப் பிரத்யங்கிரா' என்ற பத்ரகாளி உதித்தாள். இவளையே அதர்வண பத்ரகாளி என்பர். ஒன்பது வர்க்கங்களாகப் பிரிக்கப்பட்டு 49 மந்த்திரங்கள் இவள் பெருமையை உணர்த்துவதால் இவளை அதர்வண பத்ரகாளி என்பர். பெரும்பாலும் இம்மந்திரங்கள் சத்ருக்களைப் போக்கவே பயன்படுவனவாக உள்ளன.

இவள் வெளிவந்து உக்ரமாகச் சண்டை செய்யும் கண்ட பேருண்ட ரூபம் கொண்ட நரஸிம்மத்தை விழுங்கி விட்டாள். நரஸிம்மரின் சக்தி அடங்கிவிட்டது. சரபருத்ரனும் தேவர்களும் மகிழ்ந்தனர். பிரத்யங்கிரா தேவியை அனைவரும் துதித்தனர்.

இவ்வரலாற்றை பதிமூன்றாம் நூற்றாண்டில் தில்லையிலே வாழ்ந்தருளிய சிவபக்த சிகாமணியும் மஹா கவியுமான "உமாபதி சிவம்" அவர்கள் தம்முடைய குஞ்சி தாங்கரி ஸ்தவத்தில் மிகவும் அழகாகவும் சுருக்கமாகவும் வெளியிட்டிருக்கின்றார்கள்.

*சுத்தே பக்ஷோருகாயம் நரஹரிவபுஷம் கண்ட பேருண்டரூபீ*
*பூக்ஷ்மா கர்ஜந்தமக்ரே சரபகதபதி: வ்ய*
*லிடமாளாக்ஷி குண்டாத்*
*உக்ரப்ரத்யங்கிராக்யாம் தச சதவதனாம் காளிகாம் ஆசு ஸ்ருஷ்ட்வா*
*தஸ்யா ஜிஹ்வாக்ர வஹ்நௌ*
*ஸாசருவதனைத் குஞ்சிதாங்க்ரீம் ப்ரஜேஹம்*
*(குஞ்சிதாங்க்ரி ஸ்தவம்)*

சரபத்துடன் நடந்த யுத்தத்தில் பேருடல் படைத்த கண்ட பேருண்ட ரூபத்தை எடுத்துக்கொண்டு எதிரில் கர்ஜிக்கும் நரஸிம்மரை, எந்த சரபேச்வரர், தம் அக்னிமயமான நெற்றிக் கண்ணிலிருந்து ஆயிரம் முகங்கள் கொண்ட உக்ரபிரத்யங்கிரா என்ற காளியை ஸ்ருஷ்டி செய்து, உக்ரபிரத்யங்கிரா தேவியின் நாக்கிற்கு ஹோமத்ரவ்யமாக (நெய் அன்னம் போன்றதாக) செய்தாரோ அந்த நடராஜ மூர்த்தியை பூஜிக்கிறேன்.

ஸிம்ஹ முகத்தினள். சரபசக்தி. இவள் பேருண்டத்தின் (இருதலைப்பக்ஷி) மூக்கு, இறகுகள், வராஹத்தின் கொம்பு, ஆமை இவை கோக்கப்பட்ட நரம்புகளை மாலையாகப் போட்டுக் கொண்டு பிரகாசிப்பவள். தன் கரங்களில் சக்ரம், கத்தி, சங்கம், டமருகம், சூலம் இவற்றைத் தரித்திருப்பாள். நெருப்புப் பொறி பறக்கும் நாக்கு நுனியும் உடைய ஸ்ரீபிரத்யங்கிரா காளியை நியானிக்கிறேன். இங்கு பிரத்யங்கிரா சரபசக்தி எனக் கூறப்பட்டிருப்பதையும் காணலாம்.

இவளுக்கும் ஆயிரம் முகங்கள். இந்த முகங்கள் எல்லாம் ஸிம்ஹத்தின் முகம் போன்றிருக்கும். இரண்டாயிரம் கைகள். கைகளிலே சூலம், கபாலம், பாசம், டமருகம் முதலியன இருக்கும். ஜ்வலிக்கும் மூன்று கண்கள். சிரத்தில் சந்த்ர கலை தரித்திருப்பாள். கரிய நிறம். மிகப்பருத்த சரீரம். பெருங்கழுத்து. நீல நிற ஆடை. இவளை உபாஸித்தால் சத்ருபயம் இல்லையாதென்பதாம்.

நம் மீது பிறரால் ஏவி விடப்பட்ட தீயசக்திகள் இவள் திருவருளால் ஏவியவர்

களையே சென்றழிக்கும் என்றும் ருக்மந்த்ரம் கூறுகின்றது.

சென்னை அம்பத்தூர் கங்கை நகரில் அமைந்துள்ள ஸ்ரீ பரத்வாஜ ஆசிரமத்தில், பரம ஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள், ஸ்ரீ அதர்வண பத்ரகாளி என்ற பிரத்தியங்கிரா தேவியை, ஆறு அடி உயரத்தில் வண்ணப்படமாக வரைந்து, யாக சாலையில் வைத்துள்ளார்கள். பராசக்தி புவனேஸ்வரியை, ராஜ ராஜேஸ்வரியை, யார் உபாசனை செய்கிறார்களோ, அவர்களுக்கு இந்தத் தேவி கறுப்புப் பூனைப் படை போன்று, உடனிருந்து காப்பாள்.

உப்பில்லாத வடையில் தேனை ஊற்றியும், வெண்ணெயையும் பிரத்தியங்கிரா தேவிக்கு ஸ்ரீ ஸ்வாமிகள் நைவேத்தியம் செய்வார்கள். பிரத்தியங்கிராதேவியின் யந்த்ரத்தில் வாசனை கலந்த சந்தனத்தைத் தடவி, ஆவரண பூஜையை செய்வார்கள். இந்த பிரத்தியங்கிரா தேவியை பூஜித்த, அந்த சந்தனத்தை எடுத்து உருண்டைகளாகச் செய்து, அதை பக்தர்களுக்கு பிரசாதமாக கொடுப்பார்கள்.

ஏவல், பில்லி, சூன்யம் - விலக இந்தத் தேவியை ஆராதித்தால் போதும். யார் ஏவல், பில்லி சூன்யம் ஏவி விட்டார்களோ, அவர்களுக்கே அதைத் திருப்பி விடுவாள். பூஜா காலத்தில் அவசியம் ஆசார விதிகளைக் கடைபிடிக்க வேண்டும். இந்தத் தேவியின் கிருபா கடாக்ஷத்தால் நமது ஆசிரமத்திலேயே ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அஸ்ஸாம் மாநிலத்தில், ஐ.ஏ.எஸ். அதிகாரியாய் பணிபுரிபவர் சௌத்ரி என்பவர். நல்ல குடும்பம். இவருக்கு மூன்று பெண்கள். மூத்த பெண் கல்லூரி சென்று ஒருநாள் மாலை வீடு திரும்பவில்லை. கல்லூரி, கல்லூரி ஹாஸ்டல், பெண்ணின் தோழிகள் மற்றுமுள்ள எல்லா உறவுக்காரர்கள் வீடுகளிலும் தேடினார்கள். பெண்ணைக் காணவில்லை. ஆங்கில, ஹிந்திப் பத்திரிகைகளில் விளம்பரப்படுத்தினார்கள்.

டான்ஸ் மாஸ்டர் கல்யாண சுந்தரம் என்பவர் மூலமாய் ஸ்ரீ ஸ்வாமிகளைப் பற்றி அறிந்த சௌத்ரி, டில்லியில் ஸ்ரீ ஸ்வாமிகள் எழுந்தருளிய சமயம், தன் மகள் காணாமல் போன செய்தியைச் சொல்லி, எப்படியும் என் மகள் எனக்குக் கிடைக்க வேண்டுமென வேண்ட, அதன்படியே சௌத்ரி குடும்பத்துடன், டெல்லியிலிருந்து ரிஷிகேசத்திற்கு பூஜாதி திரவியங்களோடு ஸ்ரீ ஸ்வாமிகள் புறப்பட்டார்.

சுவாமிசிவானந்தர் தவம் நடத்திய இடத்தில் நித்யப்படி பூஜைகள் அனுஷ்டானத்தையும், அபிஷேகத்தையும் கங்கை நதி ஓரப் படித்துறையிலேயே ஸ்ரீ ஸ்வாமிகள் நடத்தினார்கள். அச்சமயம் சௌத்ரி பெண் திரும்பி வர, பிரார்த்தனை செய்த ஸ்ரீ ஸ்வாமிகள், பிரத்தியங்கிரா ஸஹஸ்ரநாமார்ச்சனையை, சந்தன உருண்டைகள் கொண்டு ஆயிரத்தெட்டு முறை அர்ச்சித்து, அர்ச்சனை செய்த சந்தன உருண்டைகளை கங்கையில் கரைத்து, மீதமுள்ளதை சௌத்ரியிடம் கொடுத்து, பெண் இன்னும் பதினைந்து நாட்களில் திரும்பி வருவாள் என்று அருள்மொழி ஆறுதல் கூறி தேற்றினார்.

பெண் இருபது நாட்கள் கழித்து போன் செய்தாள். சௌத்ரி காருடன் சென்று வீட்டிற்கு அழைத்து வந்தார். குறிப்பிட்ட பஸ் நிலையத்திலிருந்து மகள் போன் செய்தபோது சௌத்ரியால் நம்பமுடியவில்லை. "எங்கு சென்றாய், ஏன் இவ்வாறு செய்தாய்?" என்று சௌத்ரி மகளிடம் கேட்டபோது, "என்னைத் தீவிரவாதிகள் சிலர் கடத்திச் சென்று அடைத்து வைத்தனர். அதில் ஒருவனுக்கு திடீரென புத்திமாறி இவளை விட்டுவிட வேண்டும் என புலம்பி சத்தம் போட்டான். மற்ற தீவிரவாதிகள் என்னை எந்த பஸ் நிலையத்திலிருந்து கடத்திச் சென்றனரோ அதே இடத்தில் இன்று கொண்டுவந்து விட்டார்கள். என்ன காரணத்திற்காக என்னைக் கடத்திச் சென்றனர்? ஒருவேளை அரசு அதிகாரியாக நீங்கள் இருப்பதால் விரோத பாவம் ஏற்பட்டு இவ்வாறு செய்திருக்கலாமெனத் தெரிகிறது." பால் வார்த்தாள் மகள். சௌத்ரி மகிழ்ந்தார். தீவிரவாதியே பெண்ணைக் கொண்டு வந்து விடும்படிச் செய்தது பிரத்தியங்கிராவின் பேரருள். இந்தத் தேவியின் மகிமையை சௌத்ரி போன்ற அனுபவம் பெற்ற அன்பர்களே அறிவர்.

இந்த ஆராதனையை நடத்த ஏகாக்ரசித்தம் முக்கியம். ஸ்ரீபரத்வாஜ ஆசிரமத்தில், ஸ்ரீ ஸ்வாமிகள் நித்தியப்படியாக பிரத்தியங்கிரா தேவி பூஜையை நடத்துகிறார்கள்.

- பரத்வாஜ ஸ்வாமிகள்

பூரிக்கு மாவு பிசையும்போது சிறிது ரவை போட்டுப் பிசைந்தால் பூரி மொறு மொறுவென்று இருக்கும்.

- என். கலா



# தீபாவளியில் அன்புத்தொல்லை

தீபாவளி ஏழை, பணக்காரன், உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்று அனைவரும் புத்தாடை புனைந்து புத்துணர்ச்சியும் மகிழ்ச்சியும் அளிக்கின்ற சமதர்ம பண்டிகையாகத் திகழ்கின்றது.

இந்த இன்பத் திருநாளில் [illegible]லோர் வீட்டிலும் இனிப்புகள்



மற்றும் பலவகை பலகாரங்கள் செய்து உண்டு மகிழ்ச்சியோடு இருப்பது நம் வழக்கம். இந்த பலகாரங்களைச் செய்வதிலும் பல அற்புதமான முறைகள் உண்டு. தீபாவளி அன்று செய்யப்படுகின்ற பலகாரங்கள் எண்ணெய், நெய், மற்றும் மாவுப் பொருட்களைக் கொண்டு செய்வது வழக்கம். தீபாவளி அன்று எந்த வீட்டிற்குச் சென்றாலும் நம்மை உபசரித்து இந்தப் பலகாரங்களை சாப்பிட கொடுப்பார்கள். சாப்பிட மறுத்தாலும் நம்மை அன்புத் தொல்லை செய்து சாப்பிட வைத்து விடுவார்கள். இதனால் வயிற்றுத் தொந்தரவுகள் வராமல் இருக்காது.

இந்த வகை எண்ணெய்ப் பலகாரங்களில் ஓமம், பெருங்காயம், எள், இஞ்சி முதலிய பொருள்களைக் கலந்து செய்தால் இந்தப் பிரச்னைகள் அதிகம் வராது. இந்தப் பலகாரங்களினால் நமக்கு இயற்கையாக ஏற்படுகின்ற வயிற்று வலி, வயிறு உப்புசம், அஜீரணக் கோளாறுகள் இவைகள் ஏற்படாமல் இப்பொருட்கள் தடுக்கவும் செய்கிறது. இவைகளையும் மீறி உங்களுக்கு இந்தத் தொந்தரவுகள் வந்தால் இதோ சில எளிய முறைகளைக் கூறுகிறேன். செய்து பாருங்களேன்!

1. தீபாவளி அன்று கூடிய வரையில் அதிகமான பலகாரங்களைச் சாப்பிடாமல் கொஞ்சம் கொஞ்சமாக சாப்பிட்டுப் பாருங்கள்.

2. அதிகமான எண்ணெய்ப் பலகாரங்களையோ அல்லது செரிக்காத பலகாரங்களையோ சாப்பிட்டு விட்டால் அஞ்ச வேண்டாம். நல்ல சூடான வெந்நீரை அடிக்கடி அருந்தி வர நல்ல பலன் கிடைக்கும்.

மேலும், அந்தக் காலத்திலிருந்தே வழி, வழியாக இந்த மாதிரி தொல்லைகளில் இருந்து விடுபட நம் முன்னோர்கள் மருந்தை நமக்குத் தந்திருக்கிறார்கள். ஆம், அதுதான் "தீபாவளி மருந்து".

பரம்பரையாக எங்கள் குடும்பத்தில் அனுபவ வாயிலாகச் செய்யும் "தீபாவளி மருந்தின்" செய்முறையை விளக்குகிறேன் :

*செய்முறை :*

சுக்கு, மிளகு, அரிசித் திப்பிலி, கண்டத்திப்பிலி, பறங்கிப்பட்டை, லவங்கப்பட்டை, அமுக்கராங்கிழங்கு, ஓமம், சித்தரத்தை, சீரகம் இவை ஒவ்வொன்றும் 50 கிராம், ஏலரிசி 25 கிராம் இவைகளை எடுத்து வெயிலில் நன்கு காயவைத்து இடித்து நைசாக சலித்துக் கொள்ள வேண்டும்.

200 கிராம் வெல்லத்தைப் பொடித்து ஒரு பாத்திரத்தில் போட்டு அத்துடன் 500 மி.லி. தண்ணீர் ஊற்றி வெல்லம் நன்றாகக் கரைகின்ற வகையில் கொதிக்க வைக்க வேண்டும். அதன்பின் வெல்ல

நீரை நல்ல தூய்மையான துணியில் வடிகட்டினால் அதிலுள்ள தூசிகள் நீங்கிவிடும். அதன்பின் நல்லதொரு இரும்புச் சட்டியில் இந்த வெல்ல நீரை ஊற்றி, அடுப்பிலேற்றி சிறிய தீயாக எரித்து, சலித்து வைத்த பொடியை அத்துடன் சிறிது, சிறிதாகக் கலந்து கையில் ஒட்டாத பக்குவத்தில் இறக்கிக் கொள்ள வேண்டும். இதுதான் சரியான பக்குவம். இதனை காற்று புகாத கண்ணாடி ஜாடியில் வைத்துக் கொண்டு கொட்டைபாக்களவு சாப்பிட்டால் தீபாவளி அன்று எந்தவித வயிற்றுத் தொல்லைகளும் வராது.

*செய்முறை : 2*

மேற்கூறிய அதே மருந்துகளையே 50 கிராம் வீதமும், ஏலரிசியை 25 கிராமும் எடுத்து முதல் நாள் நீரில் ஊறவைத்து மறுநாள் அம்மியில் வைத்து வெண்ணெய் போல் அரைத்து ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். முன்பு கூறியது போலவே வெல்லத்தைப் பொடித்து 250 மி.லி. நீரில் கரைத்து கொதிக்க வைத்து வடிகட்டிக் கொள்ள வேண்டும். இரும்புச் சட்டியில் அந்த வெல்ல நீரை ஊற்றி, வெண்ணெய் போல அரைத்து வைத்துள்ள மருந்தையும் அதில் கலக்கி அடுப்பில் ஏற்றி சிறு தீயாக எரித்து நீர்பதம் வற்றும் வரை கிளறி இறக்குவதற்கு முன்பாக 150 மி.லி. நெய்யைக் கலந்து கையில் ஒட்டாத பக்குவத்தில் இறக்கி காற்றுப் புகாத கண்ணாடி ஜாடியில் பத்திரப்படுத்திக் கொள்ள வேண்டும்.

*முடிவுரை :*

இது "தீபாவளி மருந்துதானே" என்று நினைத்து தீபாவளியின் போது மட்டும்தான் செய்து சாப்பிட வேண்டும் என்று நினைத்து இருந்து விடாதீர்கள். இந்தத் தீபாவளி மருந்து செய்து நம் வீட்டில் எப்பொழுதும் வைத்திருக்கலாம். நமக்கு அஜீரணக் கோளாறு ஏற்பட்டாலும், அல்லது சில சமயம் நமக்கு ஏற்படுகின்ற பசியின்மைக்கும் இதை அருந்தி வந்தால் அஜீரணக் கோளாறு நீங்குவதோடு நல்ல பசியும் உண்டாகும்.

**- டாக்டர். இரா. கண்ணன்,**
**சித்த மருத்துவர், திருச்சி.**

அரிசி மாவு 2 பங்கு, கடலை மாவு ஒரு பங்கு, உப்பு, காரம், பெருங்காயம் போட்டு, டால்டா ஒரு கரண்டி காய்ச்சி ஊற்றிப் பிசைந்து, கொப்பரைத் துருவியில் எண்ணெயில் தேய்த்து விட்டால் புது பட்சணம் கரகரப்பாக இருக்கும்.

– ஆர். பார்வதி





**தேங்காய் பர்பி செய்யும்போது பத்து முந்திரிப் பருப்பு ஊறவைத்து அதனுடன் தேங்காய்த் துருவலையும் சேர்த்து மிக்சியில் அரைத்து பர்பி செய்வது போல் செய்தால் முந்திரி வாசனையில் தேங்காய் முந்திரி பர்பி மிகவும் சுவையாக இருக்கும்.**

**- என். கலா**

# அழகு ஒன்றும் புதிதல்ல

பெண்களைப் பொறுத்தவரையில் நிறமும் அழகும் பாதுகாப்பது என்பது காலம் காலமாகத் தொடர்ந்து வரும் ஒன்றுதான். நிறத்தை அதிகமாக்க இன்று பெண்கள் பலரும் செய்து கொள்ளும் 'ப்ளீச்' என்பது பழங்காலத்திலேயே இருந்த ஒன்றுதான்.

எலுமிச்சைச் சாற்றில் சில துளிகள் தேன் சேர்த்து முடியில் படாமல் முகம் முழுதும் தடவி, சில நிமிடங்களில் ஊறி முகம் கழுவுவது உண்டு. அதே போல படிகாரக் கரைசலை முகத்தில் தடவுவதும் நல்ல 'ப்ளீச்'தான். வெண்ணையை முகம் முழுவதும் தடவி சிறிது நேரம் நன்கு ஊறிய பின்பு முகம் கழுவும் பெண்களைப் பாருங்கள் - தொடர்ந்து இப்படிச் செய்து வருவோரின் முகத்தில் ஒரு தனி பளபளப்பு தெரிவதுடன் நிறமும் கூடும். இவைதான் இன்று 'ஹெர்பல்' மற்றும் 'க்ரீம் ப்ளீச்' என்ற பெயருடன் சில மாறுதல்களோடு உபயோகப்படுத்தப் படுகின்றன. பலவித மூலிகைகள் சேர்ந்த ஹெர்பல் ப்ளீச்களை முகத்தில் தடவி 20 நிமிடங்கள் ஊறிய பின்பு முகத்தை நன்கு கழுவிவிட வேண்டும்.

அழகான புருவம் முகத்தின் அழகை மேலும் கூட்டும். புருவத்தை முக அமைப்புக்கு ஏற்ற வகையில் (வளைவாக) அமைப்பதுதான் 'த்ரெட்டிங்'. அந்தக் காலத்திலும் கூட அதிக அடர்த்தி இல்லாத புருவங்கள் என்றால் விளக்கெண்ணெய் தடவிக் கொள்வது வழக்கம்.

கை, கால்கள், முகம் போன்ற இடங்களில்

• வார்ட் ரிமூவிங்



• ப்ளீச்சிங்



• த்ரெட்டிங்

தேவையில்லாமல் வளரும் முடி அழகைக் கெடுக்கும். அந்த நாட்களில் மஞ்சள், மற்றும் சாம்பல் தடவி அகற்றுவது உண்டு. இப்பொழுது 'வேக்ஸிங்' முறையில் அகற்றப்படுகிறது. 'வேக்ஸிங்' செய்ய அவ்வளவாக நேரமாகாது. உதட்டின் மேல், தாடை ஆகிய இடங்களுக்கும் இந்த முறையைப் பயன்படுத்தலாம்.





வயது ஏற ஏற முகத்தில் சுருக்கங்கள் வருவது இயற்கைதான். இந்தச் சுருக்கங்கள் சிலருக்கு வயதாகுமுன்பே வரக்கூடும். இவைகளை நீக்கவல்லது "anti-wrinkle facial". Ceramide பயன்படுத்தி ஃபேஷியல் செய்வதால் தோல் மிகவும் மிருதுவாகி விடுகிறது.

முகச் சுருக்கங்களை நீக்கும் இன்னொரு முறைதான் முகத்திற்கான வேக்ஸ் பாத் (Wax bath). இந்த சிகிச்சை மூலமாகவும் சுருக்கங்களை நீக்க முடியும். முகம் மற்றும் கழுத்துப் பகுதியில் உள்ள மருக்களையும், முகத்தில் உள்ள வேண்டாத கரும்புள்ளிகளையும் உடனே அகற்றும் கருவிதான் 'Wart remover'. இறக்குமதி செய்யப்படும் இந்தக் கருவி வலியில்லாமல் மருக்களை உடனே அகற்றக்கூடியது.

முன்பெல்லாம் குளிக்கும்போது உடம்பில் பூசிக் குளிக்க வாசனைப் பொடியை இடித்துத் தயார் செய்வார்கள். கஸ்தூரி மஞ்சள், பாசிப்பயறு, கார்போக அரிசி, கிச்சிலி கிழங்கு என்று 15 மூலிகைகளால் சேர்த்த பாத் பவுடர் இப்பவும் எல்லா பெண்களாலும் விரும்பி உபயோகப்படுத்தி வரப்படுகிறது. இதில் உள்ள ஒவ்வொரு மூலிகை பொருளும் சருமத்திற்கு நல்ல பளபளப்பை அளித்து, தோல் நோய்களை அகற்றி நிறம் தரவல்லது.

இதுபோன்ற வேறு சில மூலிகைகளால் செய்யப்படும் 'பேஸ் பாக்' (face pack) முகத்தின் பொலிவை அதிகரிக்கும். அதே போன்று மூலிகைப் பொருட்களால் செய்யப்பட்ட க்ரீமைத் தொடர்ந்து 15 நாட்கள் பூசி வர, பருக்கள் எளிதில் மறைந்து விடும். கண்களின் கீழே விழும் கருவளையங்களுக்கும் இதே போன்ற மூலிகை கிரீம் உண்டு. இதைத் தொடர்ந்து மூன்று வாரங்கள் பயன்படுத்த நல்ல பலன் தெரியும் என்கிறார் அழகுக் கலை நிபுணர் வசுந்தரா. 'தி விஸிபிள் டிஃபரன்ஸ்' அழகுக் கலை நிலையத்தை (தொ - 8254079) நடத்தும் இவர் யோகா, தியானம், அழகுக் கலை பயிற்சி தருதல் என எல்லாவற்றிலும் நிபுணராக இருக்கிறார்.



படங்கள் : ஜி. சுரேஷ்

# பட்டாசு அனுபவங்கள்

பட்டாசுகள் இல்லாமல் தீபாவளியா? நினைத்துப் பார்க்கவே முடியவில்லைதான். ஒவ்வொரு வருடமும் புதிய புதிய வகைகள் வேறு. கொண்டாட்டம்தான். கும்மாளம்தான், சிறுவர் சிறுமிகளுக்கு. என்றாலும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் இல்லையா? சில பேர் அனுபவங்களைப் பார்க்கலாம்.



• ரேவதி

"என் பையனுக்கு அப்போது ஒன்றரை வயது இருக்கும். பூஜை அறையில் வைத்திருந்த ஒரு கனிப் பட்டாசை அங்கு இருந்த விளக்கில் எப்படியோ கொளுத்திப் போட்டு விட்டான். பட் பட் என்ற வெடிச் சத்தம் பூஜை அறையிலிருந்து வந்ததும் பதறிப் போய் விட்டோம். பையன் பயந்து போய் கையைக் கட்டிக் கொண்டு அறையின் மூலையில் நின்று விட்டான். ரொம்ப சின்ன அறை என்பதால் உள்ளேயும் போக முடியவில்லை. சத்தம் ஓய்ந்ததும் பாய்ந்து உள்ளே போனோம். நல்லவேளையாக அவனுக்கு ஒன்றும் ஆகவில்லை. என்னைக் கேட்டால் பதினைந்து வயதுக்கு மேல்தான் பட்டாசுகளை விட அனுமதிக்க வேண்டும். அதுவரை கம்பி மத்தாப்புகளும் எளிய வாணங்களும் போதுமே. கண்ணுக்கு அழகான வாணங்களில்தானே கலையே இருக்கிறது!" என்றார் திருமதி. ரேவதி ஸ்ரீதரன்.



• ராஜேஸ்வரி

இவரது கடைசி கருத்தை சிறுவர் சிறுமியர் ஏற்றுக் கொள்வார்கள் என்று தோன்றவில்லை. தவிர ஆர்வத்துடன் பட்டாசு வெடிப்பதில் பெரியவர்களும், பெண்மணிகளும் கூட சளைத்தவர்களா என்ன!

எம்.பி. ஸ்ரீனிவாசன் சேர்ந்திசைக்குழுவில் பங்கு வகிப்பவர் திருமதி. ராஜேஸ்வரி சிவராமகிருஷ்ணன். "எங்கள் குழுவில் இடம்பெற்றுள்ள லலிதா என்பவருக்கு சென்ற தீபாவளியில் ஏற்பட்ட பட்டாசு விபத்தில் கை முழுதும் தீப்புண். இன்னமும் கூட அந்த வெள்ளைத் தழும்புகள் தெரிகின்றன. உயிர்ச்சேதம் உட்பட பல விபரீதங்களுக்கு வழி வகுக்கும் பட்டாசுகளை - குறைந்தது அதில் ஆபத்தான வகைகளை - வாங்காமல் இருந்தால்தான் என்ன? தவிர இந்தப் பட்டாசு வெடிகள் காதுகளுக்கு எவ்வளவு சேதத்தை உண்டாக்குகின்றன தெரியுமா? முக்கியமாக வீட்டில் உள்ள நோயாளிகள் மற்றும் முதியோருக்கு இவை எந்த அளவு மன அமைதியைக் குலைக்கின்றன என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும்" என்கிறார்.



• கங்கா

திருமதி. கங்கா சுவாமிநாதன் தன் மைத்துனருக்கு ஏற்பட்ட பாதிப் பைக் குறிப்பிட்டார். சிறு வயதில் அவர் ஏற்றிய புஸ்வாணம் எதிர்பார்த்ததை

விட வேகமாக பற்றிக் கொண்டதில் அவர் இடது காதுக்கு வெகு அருகில் சத்தத்தோடு மேலெழும்பிச் சென்றதாம். இதனால் அவரது இடக்காது கிட்டத்தட்ட முழுவதுமாகவே கேட்கும் சக்தியை இழந்துவிட்டது. "குழந்தைகளுக்குக் கம்பி மத்தாப்பு போதுமே. அதுவும் மாம்பலத்திலிருந்து அண்ணாநகரில் இருக்கும் அம்மா வீட்டுக்கு தீபாவளி அன்று ஸ்கூட்டரில் போகும் போது ஒரே திகில்தான். பட்டாசைக் கொளுத்தியவர்கள் தள்ளி நின்று கொள்வார்கள். தெருவில் போகும் நமக்குத் தான் அத்தனை சங்கடமும். ஒவ்வொரு அடியையும் எண்ணி வைக்கவேண்டிய நிலை. ஒரு யோசனை. அந்தந்த பகுதிகளில் பொதுவான, பாதுகாப்பான இடத்தில்தான் பட்டாசு கொளுத்த வேண்டும் என்பதை நடைமுறைப் படுத்தினால் என்ன?" என்கிறார்.

இதே யோசனையை திருமதி ரமா ராகவனும் சொல்லியிருக்கிறார். "குறைந்தது பல்வேறு காலனிகளிலாவது இந்த முறையைப் பின்பற்ற வேண்டும். பொதுவாகவே எனக்கு வாணங்கள், பட்டாசுகள் என்றால் வருத்தம்தான் தோன்றும். இவற்றைத் தயாரிக்க சிவகாசியில் எவ்வளவு சிறுவர் சிறுமியர் பயன்படுத்தப்படுகிறார்கள் என்பதை யோசித்தால் பட்டாசு வாங்கும் வழக்கத்தையே விட்டு விடலாம் என்று தோன்றும். அதே சமயம் பல குழந்தைகளுக்கு வாணங்களும், பட்டாசுகளும் அளிக்கும் ஆனந்தத்தை மறுப்பதற்கு இல்லை. ரேஷன் அரிசி போல ஏழைகளுக்குக் கூட மலிவு விலை பட்டாசுகள் கொஞ்சம் கொடுக்கலாமே என்றும் தோன்றும். மேலும் சிறுவர்கள்தான் பட்டாசு விடுவதில் அஜாக்கிரதையாக இருக்கிறார்கள். ஆயிரம் வாலா, இரண்டாயிரம் வாலா என்றெல்லாம் காசைக் கரியாக்குகிறார்கள். சில வருடங்களுக்கு முன் - அப்போதுதான் நான் கார் ஓட்டக் கற்றுக் கொண்டிருந்தேன். கார் பானெட் மீது ஒரு ராக்கெட் வந்து விழுந்ததும் அலறிவிட்டேன்" என்கிறார்.

இந்த எச்சரிக்கை மணிகளை பட்டாசு சத்தத்தையும் மீறி குழந்தைகள் மனதில் பதியவைக்கும் பொறுப்பு பெற்றோரான உங்களுக்குத்தான்.

— ஜிஎஸ்எஸ்.

படங்கள் : ஜி. சுரேஷ்

சின்னக் குழந்தைகளுக்கோ பலூதா (Falooda) என்றால் பயங்கர இஷ்டம். ஆனால், ஹோட்டலுக்குப் போனால் பலூதா காஸ்ட்லி! வீட்டிலேயே செய்யலாமே.

**தேவையான பொருட்கள் :**

குளிர வைத்த பால் - 1 கப், சர்க்கரை - 5 டீஸ்பூன், கார்ன் ப்ளோர் (அ) மைதா - 2 டீஸ்பூன், ஜவ்வரிசி - 1 டீஸ்பூன், சேமியா - 1 டீஸ்பூன், ஃபுட் கலர் - தேவையான அளவு (1 அல்லது 2 டிராப்), ரோஸ் எஸன்ஸ் - 1 அல்லது 2 டிராப், Wafer biscuit - 1 pocket, டூட்டி ப்ரூட்டி - 2 டீஸ்பூன், பழத்துண்டங்கள் - 4 டீஸ்பூன்.

**செய்முறை :**

குளிர வைத்த பாலில் 2 ஸ்பூன் சர்க்கரையும், கார்ன்ப்ளோரும் சேர்த்து முதலில் கஸ்டர்ட் தயார் செய்யவும். பின் அதில் பாதி கஸ்டர்டில் கலரும் எஸ்ஸென்ஸும் கலந்து தனியாக வைக்கவும். ஜவ்வரிசியும் சேமியாவும் தனித்தனியாக ஒரு ஸ்பூன் சர்க்கரை சேர்த்து வேகவைத்து தனித்தனியாக வைக்கவும். ஏதேனும் ஒன்றிற்கு (சேமியா அல்லது ஜவ்வரிசிக்கு) கலர் சேர்க்கவும். இரண்டு அழகான கிளாஸ் டம்ளர்கள் எடுத்துக் கொள்ளவும். முதலில் பழத் துண்டங்களைப் போடவும். அதன்பின் கலர் சேர்க்காத கஸ்டர்ட் போடவும். தொடர்ந்து ஜவ்வரிசி, கலர் கஸ்டர்ட், சேமியா, கலர் கஸ்டர்ட் என ஒன்றின் பின் ஒன்றாக மெதுவாக பொறுமையாக ஊற்றவும். கடைசியில் டூட்டி ப்ரூட்டி தூவவும். wafer biscuit ஐ அழகாக வெட்டி பலூதாவை அலங்கரிக்கவும். இது செய்வதை விட அலங்கரிப்பதில்தான் திறமையை காட்ட வேண்டும். பின்னர் ப்ரிட்ஜில் வைத்து குளிர்ந்தபின் குழந்தைகளுக்குக் கொடுக்கவும். சத்துக்காக பேரீச்சம்பழம் திராட்சை, தேன் போன்றவைகளைக் கூட சேர்க்கலாம்.

- கீதா கிருஷ்ணமூர்த்தி

உங்கள் பிரஷர் குக்கரின் பாதுகாப்பு வளையம்



# SGS





## பிரஷர் குக்கர் கேஸ்கட்

நாட்டிலே குக்கருக்கு உண்டு பல பெயர்கள்.
ஆனால் அதற்கு வாங்கும் கேஸ்கட்டோ
பௌர்ணமியன்று வாங்கினால்
அமாவாசை வரை கூட உழைக்கவில்லை
அது ஏனென்று புரியவில்லை நம்மில் பலருக்கு.
தரக்குறைவான தயாரிப்பில் உயர்ந்தது
தயாரிப்பாளரின் லாபம்.
அதனால் கண்ணீர்வடிப்பதோ
உங்கள் உழைப்பின் ஊதியம்.
இனியும் இந்த அவலநிலை தொடரவேண்டுமா?
சிந்திப்பீர்! செயல்படுவீர்! ஆதரிப்பீர்!

✲ இறக்குமதி செய்யப்பட்ட தரமான ரப்பரிலிருந்து.
✲ இந்திய தரக்கட்டுப்பாடு முறைகளை பின்பற்றி தயாரிக்கப்படுகிறது.
✲ நீண்ட நாளுக்கு உழைக்கும். ✲ எரிபொருள் சேமிக்கும்.
பூரண விநியோகஸ்தர்கள்

**ஸ்ரீ கோமதிசங்கர் எண்டர்பிரைசஸ்,**

75, குமரப்பாதெரு, நுங்கம்பாக்கம்,
சென்னை - 600 034. ☎ 8232855, 8259288

வாங்கிவிட்டீர்களா

# மணமாலை

திருமண, ஜோதிட மாத இதழ்

## ஆயிரக்கணக்கான மணமக்கள் தகவல்களுடன் வெளிவரும் ஒரே மாதஇதழ்

- ஜோதிடத்திலகம் டாக்டர் லயன் கே.பார்த்தசாரதியின் மாதப்பலன்கள்!
- ஜோதிட சக்ரவார்த்தி டாக்டர் முருகு இராஜேந்திரன் எழுதும் களத்திர பாவத் தொடர்!
- டாக்டர் திரு.இந்திரச்சந்திரானா நவரத்தினங்களைப் பற்றிய தொடர் எழுதுகிறார்!
- டாக்டர் C.K.M. சபாபதி சித்த மருத்துவத்தின் சிறப்பு பற்றிய தொடர் எழுதுகிறார்!
- பிரபல ஜோதிட வித்தகர் திரு.ஆர்.கே அவர்களின் குரு பகவானைப் பற்றிய அற்புதமான தகவல்கள்!
- பிரபல ஜோதிடர் கும்பகோணம் திரு. வி.சி. கிருபானந்தம் அவர்களின் அறியவேண்டிய ஜோதிடத் தகவல்கள்!

## அனைத்து கடைகளிலும் கிடைக்கிறது!

தீபாவளி சிறப்பிதழ் இரண்டு புத்தகங்கள் விலை ரூ.15/- மட்டும்

### ஏஜெண்டுகள் கவனத்திற்கு

ஏஜெண்டுகள் இல்லாத ஊர்களுக்கு பிரதிகள் பெற விரும்பும் ஏஜெண்டுகள் தேவையான பிரதிகளுக்குண்டான தொகையையோ முன்பணத்தையோ மணமாலை பெயரில் D/D யாகவோ மணியார்டராகவோ அனுப்பிவைத்தால் உடன் பிரதிகள் அனுப்பி வைக்கப்படும்.

முகவரி: 33, கிருஷ்ணா தெரு, தி.நகர், சென்னை-17.

# இளமை தரும் காந்தங்கள்




எல்லா நோய்களுக்கும் காந்த சிகிச்சைக் கருவிகளின் மூலம் குறைந்த செலவில் மிக எளிய முறையில் நீங்களாகவே சிகிச்சை செய்துக் கொள்ளலாம். இந்த சிகிச்சையினால் பின் விளைவு, பக்க விளைவு எதுவும் இல்லை.




மேலை நாடுகளில் புகழ்பெற்ற இந்த சிகிச்சையின் மூலம் பருத்த வயிற்றை குறுகச் செய்யவும், ஆஸ்துமா, இடுப்பு வலி, சிறுநீரகக் கோளாறுகள், சைனஸ், தலை வலி, மூட்டு பிடிப்புகள், தோல் வியாதிகள், பசியின்மை மாதவிடாய் மற்றும் மார்பகக் கோளாறுகள், கருத்து எலும்புத் தேய்வு, கண், காது, மூக்கு தொண்டை கோளாறுகள் உள்ளிட்ட பல நோய்களுக்கும் இந்த சிகிச்சையின் மூலம் பயன் பெறலாம். உடலுக்கும், காந்த நீர் தயாரிக்கவும் உயர் சக்தி காந்தத்தை தபால் மூலம் பெற ரூ. 460/-

பெண்களுக்கு பருத்த வயிற்றை குறைக்கவும், மாதவிடாய், இடுப்பு வலி, கருப்பை, வெள்ளைப்பாடு, சினைப்பை கோளாறுகளை நீக்கவும் உபயோகிப்புக்கள் காந்த வயிற்றுப் பட்டையை. தபால் மூலம் பெற ரூ. 220/-

ஆண்தன்மை, மார்பு வலி, மூச்சுத்திணறல், மார்புச்சளி, இருதயக் கோளாறுகளை சரிபடுத்த ஆண்தன்மை மணிமாலைகளை அணிகலங்கள். தபால் மூலம் பெற ரூ. 120/-

**இலவசம்** இந்த விளம்பரத்தை 15.11.97க்குள் அனுப்புவதுடன் ரூ.500/- மேல் கருவிகளை வாங்குபவருக்கு ரூ.100/- மதிப்புள்ள காந்த சீப்பு இலவசமாக அளிக்கப்படும்.

இலவச ஆலோசனைக்கு சுய விலாசமிட்ட இரண்டு ரூபாய்த் தபால் தலை ஒட்டிய கவர் அனுப்புக

## காந்த சிகிச்சை ஆராய்ச்சி நிலையம்

பிளாட் 60, ஜீவன்லால் நகர், (எல்லீஸ் எதிரில்)
திருவொற்றியூர், சென்னை - 19.
போன் : 545207, 545235

Rs.20,000/- முன்பணம் கட்டகூடிய ஸ்டாக்கிஸ்ட் தேவை

# பித்தம் தெளிய அருமருந்து இருக்குது



"பித்தம் தெளிய அருமருந்தொன்று இருக்குது" என்று அன்று சொன்னார் நந்தனார். நமது பித்த நோய்களுக்கு மருந்தும் சிகிச்சையும் உண்டென்று தெரிந்து கொள்கிறோம் இந்த நாள்! நாம் அன்றாடம் உண்ணும் உணவில் உள்ள கொழுப்பு சத்துக்களை செரிக்க உதவுவது பித்தநீர். கல்லீரலில் உருவாகும் பித்தநீர், பித்தநீர் குழாய்கள் மூலம் இறங்கி தற்காலிகமாக தங்குவது பித்தப்பையில். (Gall Bladder).

இந்த பித்தப்பைக்கு பித்து பிடித்தால்? பித்தப்பையின் வேலைகளையும், பித்தப்பையில் உருவாகக்கூடிய கோளாறுகளையும் அதற்கான நிவாரணங்களையும், சுமார் ஆயிரத்தி முன்னூறு பித்தப்பை அறுவை சிகிச்சைகளை செய்துள்ள, காஸ்ட்ரோ என்ட்ராலஜிஸ்ட் டாக்டர் திரு ஜோசப் ராஜ்குமார் அவர்கள் விளக்குகிறார். இவர் சென்னை அடையாறிலுள்ள மலர் மருத்துவமனையிலும், நியூ ஆவடி ரோடில் உள்ள ராஜரத்தினம் இன்ஸ்டிட்யூட் ஆப் கேஸ்ட்ரோ இன்டஸ்டினல் டிசீஸஸ் (RIGID) என்ற மருத்துவமனையிலும் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்கிறார்.

**கேள்வி : *பித்தப்பையின் வேலையை விவரியுங்களேன்!***

**டாக்டர் :** பித்தப்பை என்பது மிருதுவான ஒரு சிறிய பைப்போன்ற உறுப்பு. கல்லீரலின் கீழ்ப் பகுதியில் தொங்கிக் கொண்டிருக்கும். பொதுவாக கல்லீரலில் உருவாகும் பித்தநீர் கீழிறங்கி இரு குழாய்கள் வழியே பிரதான பித்தக் குழாய் மூலம் பித்தப்பையை அடைகிறது. கொழுப்புச் சத்து நிறைந்த உணவை உட்கொண்டதும், அதை ஜீரணிக்க, அதிகப்படி தேவையான சுமார் முப்பது முதல் ஐம்பது சி.சி. பித்த நீரை பித்தப்பை அளிக்க, சிறு குடலில் உணவு ஜீரணிக்கப்படுகிறது. பித்தப்பைக்கென்று தனியான வேலை அதிகமில்லை. பித்தப்பை கல்லீரல் சுரக்கும் பித்த நீரை அமிலமாக்கி தருகிறது."

**கேள்வி : *பித்தப்பையில் தோன்றக்கூடிய பிரச்னைகள் என்னென்ன?***

**டாக்டர் :** "பித்த நீரை சிறுகுடலுக்கு அளிப்பதற்காக பித்தப்பை சுருங்கி, விரிந்து செயல்பட வேண்டும். அவ்வாறு இயங்குவதில் கோளாறு ஏற்படும்போது பித்த நீர் கொலஸ்ட்ராலுடன் இணைந்து கடினப்படுகிறது. இதன் விளைவாக சிறிது சிறிதாக ஆகி பித்த மண் உருவாகிறது. காலப்போக்கில் இதில் மேலும் கொலஸ்ட்ராலும், கால்சியமும் இணைந்து படிந்து பித்தக் கற்கள் பித்தப்பையில் உருவாகின்றன. (Gall Stones) பித்தப்பையில் கற்கள் உருவானவுடன் பல வித பிரச்னைகள் ஏற்படலாம்.

1. கற்கள் உருவானதே தெரியாமல் அமைதியாக இருக்கலாம். இதை அல்ட்ரா சவுண்டில் மட்டுமே அறிய முடியும்.

2. பித்தப்பை சரியாக இயங்காததால் அஜீரணம் ஏற்படக்கூடும்.

3. பித்த நீர் வெளியேற முடியாமல் பித்தப்பையின் வாயிலைக் கற்கள் அடைத்து விட, பித்தப்பை உப்புசமாகி தீவிரமான வலி ஏற்படலாம். இந்நிலை Mucocoele எனப்படும். தேங்கிய பித்தநீர் சீழ் பிடித்து பித்தப்பை சீழ் நீரால் நிரம்பக்கூடும். இந்நிலை Empyema எனப்படும். பித்தப்பை வாயில் அடைபடாத போது கூட சீழ் பிடித்திருக்கக் கூடும். இந்நிலை Cholecystitis எனப்படும்.

1. பித்தக்கற்கள் பித்தப்பையிலிருந்து

கீழிறங்கி பிரதான பித்தகுழாயை அடைத்து சிறு குடலுக்கு செல்ல விடாமல் பித்த நீரை தடுக்கும்போது, பித்தநீர் மேல் நோக்கி சென்று இரத்தத்தில் கலந்து மஞ்சட்காமாலை உண்டாகக்கூடும். இதனால் கல்லீரல் இயக்கம் பாதிக்கப்பட்டு கல்லீரல் வீணாகலாம். சிறுநீரகத்தின் இயக்கம் கூட நின்று விடக்கூடும். இந்நிலை கற்கள் பித்தப்பையிலிருந்து நகருவதால் ஏற்படுகிறது.

5. பித்தக்கற்கள் சிறுகுடலில் நுழைந்து தடை செய்யும் போது வாந்தி ஏற்படும்.

இவற்றைத் தவிர நீர்ப்புண்கள் ஏற்பட்டிருக்கும் போது பித்தப்பை வீங்கி, சீழ் பிடித்து அழுகக் கூடும். இந்நிலையில் மரணம் ஏற்பட அதிக வாய்ப்புள்ளது. மேலும் பித்தப்பையில் 'பாலிப்' எனப்படும் சிறு வளர்ச்சிகள் தோன்றக் கூடும். இவற்றால் சாதாரண நிலையில் பிரச்னை எதுவுமில்லை. ஆனால் இவை புற்று நோயாக மாறக் கூடும். அதனால் அவற்றையோ, அல்லது தேவைப்பட்டால் பித்தப்பையையோ நீக்க வேண்டும். பித்தப்பையில் புற்றுநோய் ஏற்படுவது மிக அரிது. ஆனால் ஏற்படும்போது அது மிகக் கொடுமையானதாகவும், உயிருக்கு ஆபத்தேற்படுத்தும் வகையிலும் இருக்கும்.

**கேள்வி : *பித்தப்பையில் கற்கள் ஏன் ஏற்படுகின்றன? இவை ஏற்பட்டுள்ளதற்கான அறிகுறி என்ன?***

டாக்டர் ராஜ்குமார் : பெண்களுக்கு முன்னாளில் பித்தப்பை கோளாறை ஐந்து அறிகுறிகளால் ஏற்படக்கூடும் என தீர்மானித்திருந்தனர். இதனை Five 'f's என அழைப்பர். கொழுப்பு (fat) அதிகமாக கர்ப்பம் தரிக்கக் கூடிய நிலை (fertility) உப்புசம் (flatulence), பெண் இனம் (female) ஐம்பது வயதிற்கு மேற்பட்டோர் (fifty) என்று வரையறுத்திருந்தனர். அதாவது அதிகக் குழந்தைகள் உண்டாகியிருந்த, உடல் பருத்திருந்த, அதிக வாயு உடல்வாகுடன் ஐம்பது வயதிற்கு மேற்பட்ட பெண்மணிகளுக்கே பித்தப்பை கோளாறு ஏற்பட்டு வந்தது. ஆனால் இன்று நிலை மோசமாகி விட்டது. இன்று இதனை 4 'P's என்கின்றனர். அதாவது Post, Portem, Primi, Pre Pregnancy Pill takers என்று மாறிவிட்டது. அதாவது முதலில் கருத்தடை மாத்திரை சாப்பிட்டு வந்து, பிறகு கருத்தரித்து, முதல் குழந்தை பெற்றெடுத்த உடன் பித்தப்பை கோளாறுகள் ஏற்படத் தொடங்கி விடுகின்றன. இத்தகைய பித்தப்பை பிரச்னைகள் ஆண்களை விட பெண்களுக்கே அதிகம் ஏற்படும். இதை என் அனுபவத்தில் சொல்லுகிறேன் - அதாவது, ஆயிரத்து முன்னூறு அறுவை சிகிச்சைகள் பித்தப்பை கோளாற்றிற்கு செய்ததில் சுமார் ஆயிரம் பெண்களுக்குதான் செய்யப்பட்டுள்ளன!

பித்தப்பையில் பித்த நீருடன் கொலஸ்ட்ராலை சீராகக் கலக்கச் செய்ய பல காரணங்கள் உள்ளன. இவற்றில் ஏதேனும் ஒன்று, உதாரணமாக, கருத்தடை மாத்திரை, உடலில் அதிக ஊளைச்சதை, உணவில் அதிக கொழுப்பு, பாரம்பரியமாக பித்தப்பை கோளாறு போன்றவை பித்தப்பையில் கற்கள் உருவாக இக்கொலஸ்ட்ரால் கலவையை பாதிக்கின்றன. பித்தப்பையில் கோளாறு இருப்பவர்களுக்கு, கொழுப்பு சத்து நிறைந்த உணவை (வெண்ணெய், நெய், அசைவ உணவு) உட்கொண்டதும் ஜீரணமாகாமல் வயிறு உப்புசமடைந்து, வாந்தி எடுக்க வேண்டும் போன்ற உணர்வுடன், அடிவயிற்றின் வலது புற மேல் பகுதியில் வலி ஏற்படும். வயிற்றின் ஒரு பகுதியான விதானத்திற்கும் டையப்ராம்மிற்கு (Diaphragm) தோள்பட்டைக்கும் பொதுவான நரம்பே இரத்த ஓட்டம் கொண்டிருப்பதால் இக்கோளாறு உள்ளவர்களுக்குத் தோள்பட்டையிலும் வலி ஏற்படலாம். இதனை வாய்வு தொந்திரவு என்று பலர் எண்ணி விடுகின்றனர். இது தவறு.

**கேள்வி : *பித்தப்பையில் கோளாறு ஏற்பட்டால் அதற்கான மருத்துவ சிகிச்சை என்ன?***

டாக்டர் ராஜ்குமார் : மேற்கூறிய அறிகுறிகள் ஏற்பட்ட உடனே அல்ட்ரா சவுண்ட் ஸ்கேன் எடுத்துப் பார்க்க வேண்டும். இதில் வலி ஏற்படுவதில்லை. அதிக செலவுமில்லை. மிகத் துல்லியமாக நோயையும், அதன் தீவிரத்தையும் எடுத்துக் காட்டும். இதில் அறிகுறி தெரிந்ததும், கல்லீரலின் பணி சம்பந்தப்பட்ட



**சிலர் மளிகை சாமான் வாங்கியவுடன் சென்ற மாதங்களில் வாங்கி போட்டு வைத்ததிலேயே (டப்பாக்களிலேயே) புதிதாக வாங்கியவற்றையும் அதே பருப்பு, மிளகாய்தானே என்று அதனுடனேயே போட்டு வைத்து விடுகிறார்கள். அவ்வாறு செய்வதால் புழு, பூச்சி வர வாய்ப்புகள் அதிகம். விரைவில் கெட்டு விடும். அதனால் பழைய (போன மாதம் வாங்கியது) பொருட்கள் காலியான பின்னர், புதியதாக வாங்கியதைப் போடவும்.**

**— ஆர். கலைச்செல்வி**

10




# பெண்களின் மனதை புரிந்த ஆனந்தா !




**இலவசம் !**

ஒவ்வொரு ஆனந்தா
பிரஷர் குக்கருடன்
டீப் பிரஷர்பேன் —
இலவசம் !

**ஆனந்தா**

பிரஷர் குக்கர்

போன் : 342213, 342328

இரத்தப் பரிசோதனைகள் எடுக்கப்படும். சில சமயம் கற்கள் உருவாவதற்கு முன்பே கடுமையான வலி ஏற்படத் தொடங்கும். ஆனால் கற்கள் உருவாகியிருக்காது. இந்நிலையையும், இதற்கான காரணத்தையும் Bulida Scan என்ற முறையில் தெளிவாக தெரிந்து கொள்ளலாம். நோய் இருப்பதையும் அதன் காரணத்தையும் தெரிந்து கொண்ட உடன், பித்தப்பையையும், அதன் உள்ளே இருந்த கற்களையும் அறுவை சிகிச்சை மூலம் எடுத்து விடலாம். இந்த உறுப்பிற்கென தனியான சிறப்புப் பணி ஏதுமில்லாததால் இயல்பான வாழ்க்கையைத் தொடரலாம். சிலர் பித்தப்பையை நீக்கி விட்டால், கொழுப்புச் சத்து இல்லாத உணவையே உட்கொள்ள வேண்டும் என்று தவறாக எண்ணுகிறார்கள். ஆனால் கொழுப்பை ஜீரணிக்க வேண்டிய பித்த நீரை சுரப்பது கல்லீரலே. அதனால் இயல்பாக உணவு உட்கொண்டு வாழலாம்!

***கேள்வி : பித்தப்பையை நீக்கும் அறுவை சிகிச்சையை என்னென்ன முறைகளில் செய்யலாம்?***

டாக்டர் ராஜ்குமார் : முன் நாளில் பித்தப்பையினை நீக்க உடலில் அறுவை சிகிச்சை செய்து வருவதே வழக்கமாயிருந்தது. இதில் மருத்துவமனையில் நிறைய நாட்கள் தங்க வேண்டும். கவனமாக இருக்க வேண்டும். இந்நாளில் மருத்துவ உலகின் முன்னேற்றத்தால் உடலில் சிறு துளைகள் போட்டு குழாய்களை செலுத்தி, மானிட்டரில் படம் போல் உள் உறுப்புகள் தெரிய, வலியின்றி, வடுவின்றி லாப்ராஸ்கோபி முறையில் பித்தப்பையை நீக்கி விடலாம். இம்முறை அதிக செலவு உண்டாகும் என்று சிலர் எண்ணுகின்றனர். ஆனால் திறந்த அறுவை சிகிச்சையில் மருத்துவமனையில் பல நாட்கள் தங்க செலவு செய்வதும், வலியைத் தாங்கிக் கொள்வதும் அநாவசியமே. ஆனால் சில சமயங்களில் பித்தப்பையில் புற்று நோய் போன்ற பிரச்னைகள் ஏற்படும்போது, பித்தப்பையையும், அதைச் சுற்றியுள்ள கல்லீரலின் பகுதிகளையும் அறுவை சிகிச்சை செய்தே எடுக்க வேண்டும்.

பித்தப்பைக் கற்களை, சிறுநீரகக் கற்களை உடைத்து கரைப்பதைப் போலச் செய்வதோ, மாத்திரைகளைக் கொடுத்து கரைப்பதோ, பயனற்ற செயலாகும். பித்தப்பை கற்கள் எதனால் உண்டாகின்றன? பித்தப்பையின் செயல்பாட்டில் கோளாறு ஏற்படுவதால்தான். அதனால் மறுபடியும், திரும்பத் திரும்ப கற்கள் உருவாகிக் கொண்டே இருக்கும். அதனால் பித்தப்பையை நீக்கி விடுவது ஒன்றே இதற்கான சிகிச்சை முறை.

***கேள்வி : பழைய முறை அறுவை சிகிச்சையை விட லாப்ராஸ்கோபி முறையை நீங்கள் அதிகம் ஆதரிப்பது ஏன்?***

டாக்டர் ராஜ்குமார் : எந்த ஒரு நோய்க்கும் தீவிரம் வித்தியாசமாக உண்டு. தீவிரம் அதிகமாகி முற்றிப்போய் பிற பகுதிகளை பாதிக்கக் கூடிய நிலையிலேயே திறந்த அறுவை சிகிச்சை அவசியமாகிறது. புற்றுநோய் போன்ற சில தீவிர நிலைகளிலும் இச்சிகிச்சை முறை அவசியமாகிறது. மற்றபடி நோய் கொண்டிருக்கும் எந்த நோயாளியும், அதன் கடுமையிலிருந்து வலியின்றி, வடுக்கள் இல்லாமல், சீக்கிரமாக குணமடைவதையே விரும்புவர். இதற்கு லாப்ராஸ்கோபியே சிறந்த முறை. முன் கூறியபடி செலவிலும் அதிக வித்தியாசமேதும் இல்லை. ஆனால் இதனை அதிகப் பேருக்குச் செய்யும் முறை தெரியாததால் இதனை ஆதரிப்பது இல்லை. இது தவறு. இந்நிலை மாறி, வலியின்றி நடக்கும் 'லாப்ராஸ்கோபி' அறுவை சிகிச்சை முறை வர வேண்டும். அதனால்தான் எங்கள் மருத்துவமனையான ராஜரத்தினம் சர்ஜிகல் சென்டரில் இச்சிகிச்சையை செய்யும் முறையை பயிற்சியாக அளிக்கிறோம். மேலும் இம்முறை சிகிச்சையில் நோயில் இருந்து விடுபட்டு சகஜமான வாழ்க்கை நிலைக்கு எளிதில், மிக விரைவாக வந்து விடலாம். இதனால் இம்முறையை அதிகம் செயல்படுத்தும் மேல்நாட்டில் வியக்கத்தகும் வகையில் லாப்ராஸ்கோபி முறையில் சிறு ரோபாட் என்ற இயந்திரமனிதனை உடலுக்கு உள் செலுத்தி உடல் நிலையைச் சோதிக்கின்றனர். நவீன முறைகளை சரியாகப் பயன்படுத்தினால், இந்நிலை சிகிச்சை முறை வெகு விரைவில் இந்தியாவிற்கும் வரலாமே!

பேட்டி : **ராஜ்ஸ்ரீ சந்திரசேகர்**



**காரக்குழம்பு வைக்கும்போது வழக்கமாக போடும் குழம்புப்பொடி, புளிச்சாறு, உப்பு, காய்கள் இவற்றுடன் வெறும் வாணலியில் வறுத்த கொத்துமல்லி, கடலைபருப்பு, சிறிது மிளகு, சிறிது வெந்தயம், துவரம்பருப்பு, மூன்று மிளகாய் வற்றல் இவற்றை அரைத்த விழுதையும் சேர்த்துக் கொதிக்க வைத்து இறக்கினால் மிகவும் சுவையாகவும், குழம்பு கெட்டியாகவும் இருக்கும்.**

— என். கலா



விண்வெளி விஞ்ஞானி களை ஒரு கலக்கு கலக்கி யிருக்கிறது. அமெரிக்க விஞ்ஞானிகளின் உதவி யுடன் சிக்கல் ஓரளவு சரிசெய்யப்பட்டிருக் கிறது.

**வா**ரணாசியில், 'மத்திய இந்து உயர் நிலைப் பள்ளி'யைத் துவக்கியவர் அன்னி பெஸண்ட். அரசிட மிருந்து எந்த உதவியும் பெறாமலே நடத்தப் பட்ட இந்தப் பள்ளியில் ஒழுக்க நெறிகளுக்கும், மதபோதனைகளுக்கும் முக்கியத்துவம் அளிக் கப்பட்டன. அந்தப் பள்ளிதான் வளர்ந்து உருமாறி இன்று பனா ரஸ் இந்து பல்கலைக் கழகமாக விளங்குகிறது. பிறந்தது இங்கிலாந்தில் என்றாலும் இந்தியா வில் பல சீர்திருத்தங் களை செய்த அன்னி பெஸண்ட் அம்மை யாரை இங்கே குறிப் பிட்டதற்கு ஒரு சிறப்புக் காரணமும் உண்டு. அவர் பிறந்து சரியாக 150 வருடங்கள் ஆகின்றன.



**இ**ந்தியா தனது முதல் செயற்கைக் கோளான ஆர்யபட்டாவிலிருந்து தொடங்கி விண்வெளியில் பலவித முன்னேற்றத் தடங் களைப் பதித்துவருகிறது. 'இஸ்ரோ' அமைப்பு ஐ.ஆர்.எஸ்.1- டி என்ற செயற்கைக் கோளை ஸ்ரீஹரிகோட்டாவிலிருந்து வெற்றிகரமாக ஏவியிருக்கிறது. இதற்கு முன் இதுபோன்ற முயற்சியில் இருமுறை படுதோல்வி அடைந் ததால் இம்முறை கொஞ்சம் அதிகப்படி திக் திக் உணர்வுடன்தான் மக்கள் இருந்தனர். நல்லவேளை செயற்கைக் கோள் அதற்கான விண்வெளி சுற்றில் விடப்பட்டு வெற்றிகர மாக இயங்கத் தொடங்கியிருக்கிறது.

**மீ**ன் புட்டு, தவிர மாட்டிறைச்சி, பல் வேறு விலை உயர்ந்த பழங்கள், எலும்பில்லாத ஆட் டிறைச்சி, மீன்தா பேர்ப், வறுக் கப்பட்ட முந்திரி - இப்படிப் பட்ட மெனுவுடன் சமீபத்தில் டெல்லியில் கருத் தரங்கு ஒன்றை அரசு நடத் தியுள்ளது. இந்தக் கருத் தரங்கம் எதற்காக தெரியுமா? "ரேஷன் முறை மூலம் ஏழை யிலும் ஏழை மக்களுக்கு எப்படி சிறப்பான முறையில் உணவுப் பொருள்களை விநியோகிக்கலாம்" என்பது பற்றி விவாதிக்கத்தான்.

**இ**ந்தியாவில் முதல் பெண் ஐ.பி.எஸ். அதிகாரி யான கிரண்பேடிக்கு இன்ஸ் பெக்டர் ஜெனரலாகப் பதவி உயர்வு கிடைத்திருக்கிறது. வாழ்த்துக்கள்.

**ப**ம்பாய் நகரில் உள்ள சில தனியார் பள்ளிகளுக்கு விசிட் செய்திருக் கிறார் மாநில கல்வி அமைச் சர். அந்த மாநிலத்தில் குறிப் பிட்ட வகுப்பில் படிக்கும் மாணவர்களுக்கு அதிகபட் சம் இவ்வளவு எடை கொண்ட புத்தகங்களைத் தான் எடுத்துவரச் சொல் லலாம் என்று சட்டம் உண்டு. இதை பல பள்ளிகளும் பின்பற்று வதில்லை என்பது கழுதைப்பொதி போல் ஏகப்பட்ட எடை கொண்ட புத்தகங் களை அந்தக் குழந்தைகள் தூக்கிவந்ததிலிருந்து தெரிந்தது. இனி இந்த விஷயத்தில் தீவிர கவனம் செலுத்தப்படும் என்றிருக்கிறார் அமைச்சர்.

**உ**லகின் மிக அதிகமான வைரச் சுரங் கங்களுக்கு சொந்தக்காரர்கள் 'டி பீர்ஸ்' நிறுவனத்தினர். இவர்கள் இந்தியா விலும் தங்கள் சுரங்கங்களை தொடங்கு வதற்கு சமீ பத்தில் அரசு அனுமதி பெற்றிருக்கிறார்கள். சில இந்திய மாநிலங்களில் - குறிப்பாக மத் திய பிரதேசத்தில் - விலை உயர்ந்த கற்கள் கிடைக்குமென்று கருதுகிறார்களாம் இந்த நிறுவனத்தினர்.

- ஜி.எஸ்.எஸ்.

# என்ன கோர்ஸ்,

நமது இதழில் 'வழிகாட்டிகள்' போட்டியை அறிவித்தது பற்றிப் பெருமிதப்படும் வகையில் நிறைய வாசகிகள் மிகப் பயனுள்ள கல்வி வகுப்புக்களைப் பற்றி எழுதி வருகிறார்கள். இவற்றைப் பத்திரப் படுத்திக் கொண்டே வாருங்கள். கல்வியாண்டில் பயனுள்ளதாக இருக்கும். மற்றவர்களுக்கும் தரலாமே, வழிகாட்டலாமே! (வாசகர்களுக்கு ஒரு வார்த்தை) இது ஒரு வழிகாட்டும் தகவல் பகுதி மட்டுமே. கோர்ஸ் அல்லது கோர்ஸ் நடத்தும் நிறுவனங்களின் நிறைகுறைகளை அவரவர்கள்தான் ஆராய்ந்து தேர்ந்தெடுக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறோம். நம் நிறுவனம் அதற்குப் பொறுப்பாகாது. – ஆர்.



• ஆர்

மும்பையில் பாரதீய வித்யா பவன் ஆரம்பித்து நடத்தும் கம்ப்யூட்டர் கல்வி பற்றி ஜூலை '97 இதழில் கண்டேன். தற்போது சென்னையில் கூட பாரதீய வித்யாபவன் ஒரு கிளையை ஆரம்பித்துள்ளது. மும்பையில் சென்று படிக்க முடியாத ஏழை மாணவர்களுக்கு இந்த கிளை திறப்பு ஒரு வரப் பிரசாதம். சென்னை மாணவர்களுக்காக குறைந்த கால அளவில் கம்ப்யூட்டர் பயிற்சி இலவசமாக அளிக்கப்படுகின்றது. சென்னையில் இதற்கான விழாவில் நமது கல்வி அமைச்சர் கோர்ஸ் முடித்த மாணவர்களுக்கு டிப்ளமா வழங்கினார்.

டி. புஷ்பலதா, மீஞ்சூர் – 601 203.





• பத்மா கணேஷ்

டேராடூனில் இயங்கி வரும் இராஷ்ட்ரீய இந்தியன் இராணுவக் கல்லூரியில் சேர்க்க மாணவர்களை வருடந்தோறும் தமிழ்நாடு அரசுத் தேர்வாணையக் குழு தேர்வு செய்கிறது. விண்ணப்பிக்க விரும்பும் மாணவர்களின் பெற்றோர் அல்லது பாதுகாவலர் தமிழ்நாட்டில் வசிக்கக்கூடியவராக இருத்தல் அவசியம்.

அரசு அங்கீகாரம் பெற்ற ஏதாவது ஒரு பள்ளியில் ஏழாம் வகுப்பு படிக்கும் மாணவர்கள் மட்டுமே இதற்குத் தகுதியுடையவர்கள். விண்ணப்பிக்கும் வருடம் ஜூலை மாதம் 11 1/2 வயதுக்குக் குறையாமலும், 13 வயதுக்கு மிகாமலும் இருக்க

# எங்கு படிக்கலாம்?

வேண்டும். யாருக்கும் வயது வரம்பு சலுகை வழங்கப்படமாட்டாது.

ஆங்கிலம், கணிதம், பொது அறிவு ஆகியவற்றில் தேர்வு நடைபெறும். கணிதத் தேர்வினை ஆங்கிலத்தில் அல்லது இந்தியில் விடையளிக்க வேண்டும். பொது அறிவுத் தேர்வினை மாநில மொழியில் எழுதலாம்.

இந்தத் தேர்வில் தேர்ச்சிப் பெறுவோர் நேர்காணலுக்கு அழைக்கப்பட்டு நுண்ணறிவு மற்றும் ஆளுமைச் சோதனைகளுக்கு ஆட்படுத்தப்படுவர்.

இதற்கான முதனிலைத் தேர்வு ஒவ்வோர் ஆண்டும் ஜனவரி அல்லது பிப்ரவரி மாதம் நடைபெறும் (சென்னையில்தான்).

சென்ற ஆண்டு வரை இதற்கான விண்ணப்பமும், மாதிரி வினாத்தாள்களும் இலவசமாக டி.என்.பி.எஸ்.சி. அலுவலகத்தில் வழங்கப்பட்டது. இந்த ஆண்டு பிரபல நாளிதழ்களில் விளம்பரங்கள் வரும். விவரங்களுக்கு :

Controller of Examinations,
TamilNadu Public Service Commission,
Chennai - 600 002. அணுகவும்.

— ஜி. நாகராஜன், சென்னை - 78.

## ரோட்டரி ஸ்கூல் ஆஃப் நர்ஸிங் (தமிழக அரசு அங்கீகாரம் பெற்ற பள்ளி)

தென்மேற்கு ரோட்டரி சங்கம், தென் சென்னையில் பிரபலமான மூன்று மருத்துவமனைகளுடன் இணைந்து அரசு அங்கீகாரம் பெற்ற செவிலியர் பயிற்சிப் பள்ளி ஒன்றை நடத்தி வருகிறது.

இப்பள்ளியில் திருமணம் ஆகாத 17 முதல் 25 வயதிற்குட்பட்ட பெண்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். குறைந்தபட்ச கல்வித் தகுதி : +2 வில் சயின்ஸ் அல்லது Vocational Nursing Group எடுத்து பாஸ் செய்திருக்க வேண்டும். இப்பள்ளியில் ஒவ்வொரு வருடமும் 20 மாணவியர் சேர்க்கப்படுகின்றனர். ஒவ்வொரு வருடமும் ஜூன் மாதத்திற்குள் அட்மிஷன்கள் முடிவடைந்து விடும். இப்பள்ளியில் நடத்தப்படும் கோர்ஸின் காலம் 3 ஆண்டுகள். கோர்ஸின் பெயர் : "Diploma in General Nursing and Midwifery."

இப்பள்ளியின் சிறப்பம்சங்கள் :

1. முதலீட்டுத் தொகை கிடையாது. (No Capitation fees)
2. பயிற்சிக் கட்டணம் இல்லை. (No Tution fees)
3. ஹாஸ்டல் வசதி இலவசம்.
4. மாதாந்திர உதவித் தொகை மற்றும் சீருடைகள் இம் மாணவியர் பயிற்சி பெறும் மருத்துவமனைகளினால் அளிக்கப்படுகின்றன. மாதாந்திர உதவித் தொகை ரூ 225/- முதல் 325/- வரை.
5. பயிற்சிக் காலம் முடிந்த மறுநாள் முதலே அவர்கள் பயிற்சி பெற்ற மருத்துவமனைகளிலேயே வேலை வாய்ப்பும் அளிக்கப்படுகிறது.
6. இந்தப் பள்ளி அரசு அங்கீகாரம் பெற்ற பள்ளியாதலால் 3 வருட படிப்பும் பயிற்சியும் வெற்றிகரமாக முடித்த பின்னர் தமிழ்நாடு Nursing Council-ல் "Registered Staff Nurse" ஆக பதிவுசெய்யப்படுவர். இதன் மூலம் வெளிநாட்டில் வேலை வாய்ப்புகளுக்கும் விண்ணப்பிக்கலாம்.
7. மேலும் இந்த டிப்ளமோ பெற்றவர்கள் மேற்படிப்பை தொடர விரும்பினால், பி.எஸ்ஸி. நர்ஸிங் 4 வருடங்களுக்குப் பதிலாக 2 வருடங்கள் படித்தால் போதுமானது.
8. இதன் பாடத் திட்டங்களும் தேர்வு முறைகளும் தமிழ்நாடு மற்றும் அகில இந்திய நர்ஸிங் கவுன்ஸிலின் சட்டத் திட்டங்களுக்கு உட்பட்டது.

இப்பள்ளியைப் பற்றி மேலும் விவரம் வேண்டுவோர் அணுக வேண்டிய முகவரி :

"சேர்மன்"
ரோட்டரி ஸ்கூல் ஆஃப் நர்ஸிங்,
9, வெள்ளாள தெரு,
கோடம்பாக்கம்,
சென்னை - 600 024.

— பத்மா கணேஷ், சென்னை - 34.

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

**நான்-ஸ்டிக் தோசைக் கல்லை காஸ் அடுப்பின் சுவாலையை ஸிம்மில் வைத்து, அதில் அப்பளத்தைப் போட்டுத் திருப்பித் திருப்பி எடுத்து வெள்ளை வெளேர் என்று சுடலாம். அப்பளம் சுட தனி வலை, கம்பி எதுவும் தேவையில்லை.**

**— சரஸ்வதி சீனிவாசன்**



## சமுதாயக் கல்லூரி

சமுதாயக் கல்லூரி என்ற உயர்கல்வி அமைப்பு அமெரிக்காவில் 1960ல் உருவானது. சமுதாயக் கல்லூரியின் நோக்கம் சமுதாயத்தில் உள்ளவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வது. வணிகம், தொழிற்சாலை, அரசாங்கம் போன்ற சமுதாயத்தின் அங்கங்களுக்கேற்ப செயல்படுவதுதான் இதன் நோக்கம். இன்னும் சொல்லப் போனால் சமுதாயத்திற்காக, சமுதாயத்தால் செயல்படுவதுதான் சமுதாயக் கல்லூரி.

1994ம் ஆண்டு பாண்டிச்சேரியில் முதன் முதலாக இந்தக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டது. இதன் மூலம் பாண்டிச்சேரி மட்டுமல்லாமல், தமிழ்நாடும், ஏன் இந்தியாவில் உள்ள ஒவ்வொருவரும் பயன் அடையலாம். இந்தக் கல்லூரியில் பலதரப்பட்ட கோர்ஸ்கள் உள்ளன.

ஒரு மாணவனின் தனித்திறமையையும் சமுதாயத்தின் தேவைகளையும் இணைப்பது தான் இதனின் முக்கிய நோக்கம். இதன் மூலம் மனிதவளம் மேம்பட வழி உள்ளது. பாடத்திட்டம் சமுதாயத்தின் தேவைக்கேற்ப வரையறுக்கப்பட்டுள்ளது. விவசாயம், தொழிற்சாலை, வணிகம், சமுதாயம் போன்றவற்றில் எழும் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் பாடத் திட்டங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. அவை பல்வேறு சமுதாயத் தலைவர்களின் ஆலோசனைப்படியும், அறிவுரைப்படியும் வரையப்பட்டுள்ளது.

சமுதாயக் கல்லூரியின் ஏனைய சிறப்பு அம்சங்கள் 18 வயதும், பள்ளி இறுதிப் படிப்பும் முடித்த மாணவர்கள் இங்கு சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

2. மேல்நிலைக் கல்வியில் தாமதமாக தேறியவர்களுக்கும் இது அரிய வாய்ப்பு.

3. ஜாப் - ஓரியன்டட் கோர்ஸ் .

4. அரசு வேலையில் இருப்பவர்களுக்கு மேலும் பயிற்சி அளிக்கும் வகையில் சில கோர்ஸ்கள் அமைக்கப்பட்டுள்ளன.

5. மற்ற வழக்கமாக உள்ள கல்லூரிகளை விட இந்த சமுதாயக் கல்லூரி தேவைக்கேற்ப காலத்திற்கேற்ப சமுதாயத்தில் எழும் மாற்றத்திற்கேற்ப அவ்வப்பொழுது கோர்ஸ்களை மாற்றி அமைத்துக் கொள்ளும்.

5. கோர்ஸ் முடித்தவர்களுக்கு ஏற்ற வேலையை அமைத்துக் கொடுக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

– ஜி. ரூபிதேவகிசி, பாண்டிச்சேரி.






**எங்கள் வீட்டுச் சுவரில் ஆணி அடித்த இடங்களை மறைப்பதற்காக, ஸ்டிக்கர் வண்ணத்துப் பூச்சிகளை அதன் மேல் ஒட்டினேன். பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருந்தது.**

**– சுசீலா ரமணி**

## C.B.S. வழங்கும் B.B.S.

எந்தத் துறையில் படித்து டிகிரி வாங்கினாலும் இப்பொழுது அந்தந்தத் துறையில் அதற்கு மேல் எம்.பி.ஏ. எனப்படும் கோர்ஸுக்கு ஒரு அவசியமும் மதிப்பும் ஏற்பட்டுள்ளது. அம்மாதிரி M.B.A. Courseகள் சாதாரணமாக பட்டதாரிக்குப் பிறகு கற்பிக்கப்படும். ஆனால் அதையே அண்டர் கிராஜுவேட் லெவலில் அதாவது 10+2 விற்குப் பிறகு College of Business Studies மூலம் பெற. டெல்லியில் டெல்லி அட்மினிஸ்ட்ரேஷன் 1987ல் B.B.S. (Bachelor of Business Studies) டிகிரி வழங்கும் கல்லூரியை ஆரம்பித்துள்ளது. Delhi University யால் B.B.S. டிகிரி வழங்கப்படும் முதல் கல்லூரி இதுவே. மேலும் Commonwealth Education Societyயினால் அங்கீகாரம் அளிக்கப்பட்டுள்ள கௌரவத்தை உடையது. இந்தக் கோர்ஸின் முக்கியமான பிளஸ் பாயிண்ட் இதிலுள்ள placement cell. பட்டம் பெற்ற (B.B.S.) மாணவ மாணவிகளுக்கு இந்த placement cell உயர்ந்த வேலை வாய்ப்பைப் பெற்றுத் தருகிறது. இந்தக் கோர்ஸின் முதலாவது இரண்டாவது வருஷ Summer training Course- க்கும் நல்ல Business Establishment Trainee ஆக இருக்க உதவி செய்கிறது. ஒவ்வொரு வருஷ இறுதி மாதங்களில் placement cell- லினால் கல்லூரிக்கு அழைக்கப்படும் பெரிய நிறுவனங்கள் group discussion, interview, informal talks முதலியவற்றில் தகுந்த மாணவர்களை தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். மாணவர்



வெண்ணெய் காய்ச்சியதும் இறக்குவதற்கு முன் 1 சிட்டிகை சமையல் உப்பைப் போட்டு இறக்கினால் நெய் நல்ல மணமாகவும் இருக்கும் மாதம் வரை கெட்டுப் போகாமலும் இருக்கும்.

- ஆர். கலைச்செல்வி

---

அதும் பிரபலமான பெரிய நிறுவனங்களில் Management Trainee, Marketing Executive, Market Research Associate, Sales Officer Trainee என்று பலவாறாக தேர்ந்தெடுத்துக் கொள்ளப்படுகிறார்கள்.

இந்தக் கல்லூரி அளிக்கும் கோர்ஸ்கள் :

1. 10+2க்குப் பிறகு உள்ள 3 வருஷ முழு நேர கோர்ஸ். இது டெல்லி யுனிவர்சிட்டியின் பி.பி.எஸ். டிகிரியை (Bachelor of Business studies) வழங்குகிறது.

2. 1 வருட போஸ்ட்-கிராஜுவேட் கோர்ஸ். (இது கிராஜுவேட் டிகிரிக்குப் பிறகு) வழங்கப்படும் Diploma in Computer Application.

Admission Procedure :

1. Annual intake 120 students (including reserved catagories)

2. Eligibility.

a) Candidate must be 17 years of age before 1st Oct in the year in which he/she seeks admission.

4. He/she must have passed the Senior Secondary Examination of the Central Board of Secondary Education or any other equivalent examination with an aggregate of at least 60% marks in his/her any four subjects including English.

Note : 5% concession of marks is allowed to the children of widows of armed personnel killed/disabled in action during the hostilities. Scheduled Caste and Scheduled Tribe Candidates.

C) Students who are appearing for the Senior Secondary (Or equivalent) Examination in the year of admission can also apply subject to the condition that they secure the required percentage of marks latest by the date of interview and meet the other eligibility requirements for admission.

Application Forms :

application form for B.B.S. Programme மார்ச்/ஜூன் மாதங்களில் காலை 10 மணி முதல் பிற்பகல் 1 மணி வரை (திங்கள் முதல் வெள்ளிக்கிழமைகளில்) கல்லூரியின் ஆபீஸில் ரூ. 20 பணமாக (கேஷ்) கொடுத்து பெற்றுக் கொள்ளலாம். வெளியூர்களில் இருப்பவர்கள் தபால் மூலம் க்ராஸ் செய்யப்பட்ட ரூ. 20க்கு பேங்க் டிராஃப்ட் (Issued by the State Bank of India, payabale at Delhi/New Delhi) in favour of the Principal, College of Business Studies, Delhi- க்கு அனுப்பி பெற்றுக் கொள்ளலாம். தபால் மூலம் விண்ணப்பம் செய்பவர்கள் அவர்கள் அனுப்பும் என்வலப் மேல் Purchase of BBS Application Form என்று எழுதி ரூ. 4க்கு ஸ்டாம்ப் ஒட்டிய self addressed envelope (size 15 cm X 25 cm approximately) ஒன்றும் அனுப்ப வேண்டும்.

Application Form duly filled together with the index card and acknowledgement Card must be submitted at the College Cash Counter along with a fee of Rs. 150/- (Rs. 50/- in case of SC/ST Candidates and without any fee for wards/widows of armed personnel killed/disabled during the hostilities.) in Cash. Outstation applicants may send their forms by post, along with Bank Draft issued by any branch of State Bank of India payable at Delhi/New Delhi drawn in favour of "PRINCIPAL, COLLEGE OF BUSINESS STUDIES, DELHI" which must reach the college office on or before the due date.

MODE OF SELECTION :

a) Candidates who fulfill the above Criteria are called for an objective type written examination which is held at Bombay, Calcutta Chandigarh, Delhi and Madras in the month of May/June. The examination Consists of 1. Test of Business Aptitude, 2. Test of Reasoning Ability 3. Test of Quantitative Aptitude 4. Test of General Awareness & 5 Test of English.

B. Based on the Performance in the written examination, apporoximately 300 candidates are called for a personal interview which is conducted at the College premisses.

C. Final Selection is made on the basis of

the following Criteria.

40% Weightage to the academic performance at the Senior Secondary Level, ie. aggregate marks of any four subjects including English.

40% Weightage to the Written entrance Examination performance 20% Weightage to the interview.

PAYMENT OF FEES AND OTHER CHARGES.

All college dues are payable in Cash at the time of admission by Candidates seeking admission.

Total amount payable at the time of admission. Rs. 1,800 - Degree Course படித்து விட்டு மேலும் எம்.பி.ஏ. படித்து விட்டு வேலை வாய்ப்புக்கு பார்ப்பதை விட அதே அளவு வருவாய் தரக்கூடிய சிறந்த குறுக்கு வழி.

இந்தக் காலேஜின் அட்ரஸ் :

COLLEGE OF BUSINESS STUDIES,
JHILMIL COLONY,
VIVEK VIHAR,
DELHI - 110 095.

- என். ராஜேஸ்வரி,
நியூ டெல்லி - 110 016.

நான் முன்னணி விளம்பர நிறுவனம் ஒன்றில், 'கிராஃபிக்ஸ் டெவலப்பர் மற்றும் டி.டி.பி. ஆப்பரேட்டர்' ஆகப் பணிபுரிந்து வருகிறேன்.

எனது சொந்த ஊர் திருநெல்வேலிக்கு அருகில் உள்ள ஒரு குக்கிராமம். தூத்துக்குடியில் உள்ள கல்லூரி ஒன்றில் இளநிலைப் பட்டம் முடித்தபின் டி.டி.பி.யில் பெண்களுக்கு நல்ல வேலை வாய்ப்பு இருப்பதாகக் கேள்விப்பட்டு, அதனைக் கற்றுக் கொள்ள சென்னைக்கு வந்தேன். என் உறவினர் ஒருவர் பரிந்துரைத்ததால் 'சாஃப்ட் விஷு கம்ப்யூட்டர்ஸ்' நிறுவனத்தில் டி.டி.பி. கற்கச் சென்றேன்.

நான் இன்று இந்த நிலைக்கு உயர்ந்திருப்பதற்குக் காரணம், டி.டி.பி., மல்ட்டி மீடியாவில் எனக்குப் பயிற்சியளித்து வேலை பெற்றுத் தந்த 'சாஃப்ட்விஷு கம்ப்யூட்டர்ஸ்' நிறுவனத்தின் பாடத் திட்டங்களும் அவர்கள் சொல்லிக் கொடுத்த முறைகளும்தான். இந் நிறுவனம் என்னை மாதிரி சுமார் ஆயிரத்திற்கும் மேற்பட்டோருக்குக் கடந்த எட்டு வருடங்களாக டி.டி.பி. மல்ட்டி மீடியா, எம்.எஸ். வேர்டு, டேட்டா என்ட்ரி போன்ற பயிற்சிகளைக் கற்றுக் கொடுத்து வருகிறது.

இந்தப் பயிற்சியினை முழு நேரமாகவோ அல்லது பகுதி நேரமாகவோ கூடக் கற்றுக் கொள்ளலாம். இவற்றைக் கற்றுக் கொள்ள குறைந்தபட்சம் பத்தாம் வகுப்பு தேறியிருந்தால் கூட போதுமானது. பயிற்சிகளின் கால அளவு ஒரு மாதத்திலிருந்து ஆறு மாதங்கள் வரை பயிற்சிகளைப் பொறுத்து வேறுபடும்.

கம்ப்யூட்டரில் பல பயிற்சிகள் பலதரப்பட்டவர்களுக்கு உள்ளன. அவற்றைக் கொஞ்சம் விரிவாகச் சொன்னால் நிறைய பேருக்குப் பயன்படும் என நினைக்கிறேன். கம்ப்யூட்டரில் பத்திரிகைகளுக்கு அச்சு கோர்ப்பது, பக்கங்களை லே-அவுட் செய்வது, விசிட்டிங் கார்டு முதல் விளம்பரங்கள் வரை அனைத்து டிசைன்களையும் உருவாக்குவது போன்றவற்றைக் கற்றுக் கொள்ள டி.டி.பி. (Desk Top Publishing) உதவுகிறது. டி.டி.பி.யில் Certificate in D.T.P., Advance Diploma in D.T.P. Photo Shop என மூன்று லெவல்கள் உள்ளன. இவற்றைக் கற்றுத் தேர்ந்தவர்கள் கிராஃபிக்ஸ் ஆப்பரேட்டர், டி.டி.பி. ஆப்பரேட்டர், கிரியேட்டிவ் டிசைனர், லே-அவுட் ஆர்ட்டிஸ்ட் போன்ற பணிகளுக்குச் செல்லலாம். குறைந்தபட்சம் மாதத்திற்கு ரூ. 1800 ஆவது இவர்களால் சம்பாதிக்க இயலும்.

திரைப்படத்துறை, விளம்பரத் துறை, தொலைக்காட்சி நிறுவனங்கள் போன்றவற்றில் இன்று பரவலாகப் பேசப்பட்டு வரும் மல்ட்டி மீடியாவிலும் Level 1, Level 2, Level 3 என மூன்று Levelகள் உள்ளன.

இவ்விரண்டு துறைகளிலும் பெண்களுக்கும் நல்ல வேலை வாய்ப்புகள் உள்ளன. வசதி உள்ளவர்கள் இவற்றைச் சுயதொழிலாகக் கூடச் செய்யலாம்.

வரவேற்பாளர், குமாஸ்தா, மேற்பார்வையாளர், மேலாளர் ஆக பணிபுரிவோருக்கு அவரவரது அலுவலகத் தேவைகளுக்கேற்ப கம்ப்யூட்டரினைப் பயன்படுத்தலாம். பவர் பாயிண்ட், எம்.எஸ். வேர்டு, எம்.எஸ். எக்செல் போன்ற பாடத் திட்டங்கள் அடங்கிய 'எம்.எஸ். வேர்டு' என்ற தலைப்பிலான பயிற்சி இதற்கென வடிவமைக்கப்பட்டுள்ளது. இதனைக் கற்போருக்கு 'இன்டர்நெட்' பற்றியும் இலவசமாகச் சொல்லித் தரப்படுகிறது.

டைப்பிஸ்ட்டுகளுக்கு மாற்றாக டேட்டா என்ட்ரி ஆபரேட்டர்கள் (Data Entry Operators) பெருகிவரும் இவ்வேளையில் டைப்ரைட்டிங் தெரிந்த எவரும் இந்தப் பயிற்சியினை மேற்கொள்ளலாம்.

இவற்றைப் பற்றி மேலும் விவரங்கள் அறிய, சாஃப்ட் விஷு கம்ப்யூட்டர்ஸ், 40, நெல்சன் மாணிக்கம் ரோடு, அமிஞ்சிக்கரை, சென்னை - 29. தொலைபேசி : [illegible], [illegible] என்ற முகவரியில் தொடர்பு கொள்ளலாம்.

- த. அன்னபூரணி,
புளியம்பட்டி, நெல்லை.




வரை வைத்துத்தான் சித்திரம் எழுத வேண்டும் என்ற பழமொழி கேள்விப்பட்டு இருப்பீர்கள். சுவர் நன்றாக வழுவழுவென சமமாக இருந்தால்தான் சித்திரம் அழகாக அமையும். அதே போலவே ஒரு பெண்ணின் அழகுத் தோற்றம் உச்சி முதல் உள்ளங்கால் வரை ஆரோக்கியமாக கச்சிதமாக இருக்க வேண்டும்.

பெண்களுக்கு அழகு தருவது அடர்ந்த கூந்தல், நீண்ட கூந்தல் முதலியன. தலையில் முடி அடர்ந்து இல்லாது போனால் தலையின் அழகு குறைகிறது. இறைவன் எல்லோருக்கும் தலையின் முடி அமைப்பை வெவ்வேறுவிதமாக உண்டுபண்ணியிருக்கிறார். சிலருக்கு சுருட்டை முடி, நெளிந்த முடி, நீண்ட முடி என்று பரம்பரையைப் பொறுத்து உள்ளது. உணவில் நல்ல ஊட்டச் சத்துக்கள் உடலுக்கு இவற்றைப் பொறுத்து தலையில் அடர்ந்த முடிகள் வளர்கின்றன. ஒரு பெண்ணின் உடல் ஆரோக்கியத்தை அவளின் தலைமுடி வெளிப்படையாக சொல்லி விடும்.



வெந்நீரில் ஸ்நானம் செய்வதாயிருந்தால் காலிருந்து ஆரம்பித்துக் கிரமமாக உடல் முழுவதும் வெந்நீரை ஊற்றிக் கொள்ள வேண்டும். பிறகுதான் தலைக்கு வெந்நீர் ஊற்றிக் கொள்ள வேண்டும். இதனால் உடலிலுள்ள சூடு தலைக்கேறி வெந்நீரின் சூட்டை ஏற்கத் தலைக்குத் தகுதி ஏற்படும்.

# அழகுக்கு அழகு செய்ய..

நீரின் மூலமே 'காலரா' போன்ற கொடிய நோய்கள் பரவுகின்றன. ஆகவே நீரை நன்கு காய்ச்சிக் குளிர வைத்துப் பருகுதல் வேண்டும். காய்ச்சும் போது நீரிலுள்ள கிருமிகள் இறந்து விடுவதால் அந்நீரால் பருகுவோர்க்குத் துன்பம் இல்லை.

நிறைய பேர் கண்ணுக்கு அடியில் கருவளையம் உள்ளது. அதைப் போக்க நேரில் சிகிச்சை செய்து கொள்ளலாமா என்று கேட்கிறார்கள். [illegible] சிகிச்சை பற்றிப் பேசுவதானால், உடலால் ஆகிய ஒரு ஜீவனின் வாழ்க்கைக்கு உணவு, காற்று, உஷ்ணம், நீர் முதலியவைகள் எப்படி அத்தியாவசியமானவையாகப்படுகின்றனவோ அதே போல் தூக்கம் ஒரு அதிமுக்கியமான தேவையாகும். இவற்றில் ஏதேனும் ஒன்று குறை பட்டாலும் இந்த மனித உடலின் இயக்கம் தடைபட்டு விடுகிறது. வாழ்நாளை நிர்ணயிக்கும் வரப்பிரசாதமான தூக்கத்தை உடலைப் பேணி இதை இயக்கிவிடும் தலைமையிலிருந்து பெற வேண்டும் என்பது இயற்கையின் ஒரு விசித்திர ஏற்பாடு.

உடலையும், உள்ளத்தையும் சுகாதார விதிப்படியும் ஒழுக்க நியதிப்படியும் வைத்துக் கொண்டிருப்பவர்க்கு தூக்கம் தானாகவே கிடைத்து விடும். பரிபூரணத் தூக்கத்தின் போது உடலிலுள்ள தசைநார்கள் ஓய்வெடுத்துக் கொள்கின்றன. சரியான தூக்கமில்லையென்றால் தசைநார்கள் தங்கள் வேலையைச் செய்து கொண்டே இருக்க நேரிடும். அப்படி அளவுக்கு மீறிய உழைப்பை மேற்கொண்டால் கண்ணின் கீழ் கருவளையம் ஏற்படும். சரியான அளவு தூக்கம் அவசியம். ஜீவ சத்துக்களை உற்பத்தி செய்து உடலின் பல பாகங்களுக்கும் அனுப்பி வைக்கும் ஜீரணச் சுரப்பிகள் வேலை செய்ய வேண்டுமென்றால், உணர்ச்சியூட்டும் நரம்புகளும், தசைநார்களும்

நன்கு ஓய்வெடுத்துக் கொள்ள வழி விட வேண்டும்.

தூங்குவதற்கு முன் காப்பி, தேயிலை, கலர் முதலியன பருகவே கூடாது. பசுவின் பாலைக் காய்ச்சி ஒரு கரண்டி தேன் விட்டுப் பருகலாம். ஆழ்ந்த நித்திரைக்கு இது உதவியாக இருக்கும். சரியான தூக்கம் வராமல் இருப்பவர்கள் சமமான தரையில் படுத்துக் கால்கள் இரண்டையும் கொஞ்சம் உயரமான ஸ்டூலின் மேல் தூக்கி வைத்துக் கொண்டு இருந்துவிட்டு பிறகு படுக்கையில் படுத்தால் ஆழ்ந்த தூக்கம் வரும். கண்ணின் கருவளையம் நீங்க வாரத்திற்கு இரண்டு தடவை கொத்துக்கடலை சுண்டல் (முளைகட்டிய கொத்துக்கடலை) சாப்பிடுவது நல்லது.

கொத்துக்கடலை 12 மணி நேரம் ஊற வேண்டும். 6 மணி நேரத்திற்கு ஒரு தரம் ஊறின தண்ணீரைக் களைந்து கொட்டி விட வேண்டும். புது தண்ணீர் விட வேண்டும். இப்படி இரண்டு முறை செய்தால் கடலையில் உள்ள அழுக்கு நீங்கி நல்ல நிறமாக இருக்கும். இப்படி ஊறின கடலையைச் சுமார் 8 மணி நேரம் ஒரு துணியில் கட்டி ஒரு பலகையின் மேல் வைத்து இருந்தால் முளைத்து விடும். புரதச் சத்து நிறைய கிடைக்கும். கண்ணின் கருவளையம் உள்ளவர்கள் தினமும் உட்கொள்ள வேண்டும். நாம் நல்ல சத்துள்ள ஆகாரங்களை சாப்பிட்டால்தான் நம் தேகமும் அதைப் பிரதிபலிக்கும்.

என்னுடைய சிகிச்சை முறைகளை சாப்பிடும் உணவிலிருந்துதான் ஆரம்பிக்கிறேன். ஃபேஷியல் செய்யும் முன் அவரவர் சருமத்திற்கு ஏற்றவாறு முளைகட்டிய பயறு, பழச் சாறு மற்றும் உலர் பழங்கள் கொடுத்து ஆரம்பிக்கிறேன். நான் தயாரிக்கும் மூலிகை எண்ணெய் உச்சி முதல் பாதம் வரை உஷ்ணத்தைத் தணித்து மேனிப் பளபளப்பை உண்டாக்கும். பித்த வெடிப்புக்கு பல பேர் ஆளாகி உள்ளனர். கால்களுக்குத் தேவையான உலர் மூலிகைகளை தந்து குணப்படுத்துகிறேன். மூலிகைப் பொடிகள் வஸ்திரகாயம் செய்யும்போது அதிக கவனமாகச் செயல்பட வேண்டும். தேமல், மற்றும் பருக்களால் ஏற்படும் தழும்புகள் போக முக்கியமாக நாம் சாப்பிடும் உணவு முறையை மாற்ற வேண்டும். காரட் ஜூஸ் அவசியம் சாப்பிட வேண்டும். வைட்டமின்கள் பழங்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. புரோட்டீன் சத்தைப் பேரிச்சம்பழம், அத்திப் பழம், மாதுளம் பழம் இவற்றிலிருந்து அதிகமாகப் பெறலாம். (ஆலோசனைக்கு தொ. பே. எண் :4817137 எனும் எண்ணில் அணுகலாம்)

தலைமுடிக்கு வேண்டிய போஷாக்கு புரோட்டீனால் அதிகம் கிடைக்கிறது. ஹென்னா போடும் போது புரோட்டீன் கலந்து போட்டால் இளநரை, பொடுகு இவற்றைத் தவிர்க்கலாம். பெண்கள் டை போடும் முன் அவசியம் ஹென்னா கண்டிஷனர் போட்டுக் கொள்ள வேண்டும்.

**- ஹேமா லக்ஷ்மண்,**
**அழகு மற்றும் சிகை அலங்கார நிபுணர்.**

**அது எப்படி ஆஞ்சநேயருக்கு சாத்தப்படும் வடை மாலை மட்டும் மெல்லிசாக கரகரப்பாக வருகிறது?**

**கால் கிலோ குண்டு உளுந்தை மிக்ஷியில் சிறிது மிளகு, சீரகம், உப்புடன் ஒன்றிரண்டாக (அரிசி உப்புமாவிற்கு உடைப்பது போல) பொடியுங்கள். இந்த அளவிற்கு 1 கப் குளிர்ந்த நீர் விட்டு பிசிறி 10 நிமிடம் ஊறவிடுங்கள். தேவையெனில் மேலும் சிறிது நீர் விட்டுப் பிசிறி வையுங்கள். 10 நிமிடத்தில் உளுத்தம் பருப்பு ஊறி நீரை இழுத்துக் கொண்டு வடை மாவு போல் கெட்டியாகி விடும். 2 டீஸ்பூன் பச்சரிசி மாவு, சிறிது தூள் பெருங்காயம் சேர்த்து ஈரத்துணியில் சிறிது எலுமிச்சை அளவு மாவெடுத்து மெல்லியதாக தட்டி நடுவில் சிறிய துளையிட்டு சூடான எண்ணெயில் சிவக்கப் பொரித்தால் தூள்தான் வடை.**

**– லக்ஷ்மி ஸ்ரீநிவாசன்.**



# தங்க மழை பொழியும் தங்கத் திட்டம்

சென்னைக்கு மிக அருகில் சகலவசதிகளுடன் கூடிய அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டுமனைகள் மிக குறைந்த விலையில் குறைந்த மனைகளே விற்பனைக்குள்ளது.

5 மனைகளை வாங்க
வாங்க
ஒதுக்கியிப்போருக்கு
4gm தங்க பரிசு

## ஸ்ரீ வெங்கடேஸ்வரா நகர்

**D.T.P. No. 1182/90**

- 1வது பரிசு 5 பவுன்
- 2வது பரிசு 3 பவுன்
- 3வது பரிசு 1 பவுன்

வாடிக்கையாளர்களால் குலுக்கல் நடத்தப்படும்.
இச்சலுகை 1-12-1997 வரை.

குலுக்கல் முறையில் வென்றிடுவீர் தங்க புதையலை





**Chandini Estates**
1, New Tank Street, (Near Valluvar Kottam)
Nungambakkam, Chennai - 600 034.
Phone : 8241881,8258118.

மனையை பார்வையிட இலவசமாக அழைத்துச் செல்கிறோம்.

---

# INRECO புதிய வெளியீடு



## நவராத்திரி நாயகியே...

பாடியவர்

'மகாநதி' **ஷோபனா**



இசை : டி. கிருஷ்ணன் கேசட் எண் : C-602 **விலை ரூ. 35/-**

SIDE -A
1. ராகு கால துர்காஷ்டகம் (வாழ்வு ஆனவள்...)
2. துளசி ஸ்தோத்திரம்
3. சகலகலாவல்லி மாலை
4. திருவிளக்கு பூஜை

SIDE -B
1. லலிதா நவரத்தினமாலை (பாடியவர் : ...)
2. குங்கும அர்ச்சனை
3. திருவிளக்கு அர்ச்சனை
4. துக்க நிவாரண அஷ்டகம் (மங்கள ரூபிணி...)

கேசட்டுடன் பாடல் புத்தகம் இணைக்கப்பட்டுள்ளது.

### 'சேம்பார்' புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ ஸ்ரீநிவாச கல்யாணம் (2 கேசட்டுகள்) | விலை ரூ. 70/- |
| 2. | ஸ்ரீ ருக்மணி கல்யாணம் (2 கேசட்டுகள்) | விலை ரூ. 70/- |

எல்லா கேசட் கடைகளிலும் கிடைக்கும்



Marketed by : Inreco Marketing Services, 19, Dr. Ranga Road, Chennai - 4. Ph : 4996090

# ஏன் இந்த இரட்டை வேடம்?

"உன் கௌரவம் வேறெங்கும் இல்லை
உன் நாக்கு நுனியில்தான் இருக்கிறது"

என்னை என் அம்மா ஒருமுறை இப்படிக் கடிந்து கொண்ட போது எனக்குக் கோபத்திற்கு பதிலாய் சிந்தனை ஓடியது.

தவறு என் பேரில்தான்.

சாதாரணமாய் நான் சொல்ல வந்த பதிலை நாக்குத் தெறிக்கப் பேசினேன் ஒருவரிடம். அவர் முகம் கன்றி விட்டிருந்ததைப் பார்த்து பிற்பாடு வருந்தினேன்.

இதை மறுநாள் என் தோழியிடம் கூறி வருத்தப்பட்டேன். பிறகு ஒரு நான்கைந்து பேராக அமர்ந்து அலசி ஆராய்ந்தபோது சில உண்மைச் சம்பவங்களும் பேசப்பட்டன.

அலுவலகத்தில் அவ்வளவு சாதுர்யமாக எத்தனை முறை கேட்கப்பட்ட கேள்விகளுக்கும் கூட பொறுமையை வரவழைத்து பதில் கூறும் நாம் இன்னொரு பக்கம் அதைக் காண்பிக்கத் தவறுவது மறுக்க முடியாத உண்மை.



"ஆபீஸ்ல பொறுமையை கடைப்பிடிச்சுட்டு வீட்டுக்கு வந்து தொலைச்சா அதே தொல்லைப்பா..." என் தோழி என்னிடம் அலுத்துக் கொண்டாள்.

"ஏம்ப்பா... அப்படி என்ன தொல்லை" என்றதற்கு அவள் கூறிய பதில் வேடிக்கையாயிருந்தது.

"பாருப்பா... உள்ள நுழைஞ்சதும், நுழையாததுமாய், அம்மா, என்ன வாங்கிட்டு வந்திருக்கீங்கன்னு கேள்வி..." என்றாள்.

குழந்தை நம்மைக் கேட்காமல் அடுத்தவரையா கேட்கும்? நாம் நிறைய விஷயங்களை வாழ்க்கையில் கவனிக்கத் தவறுகிறோம். அதே குழந்தையிடம் மறுநாள் இனிப்புப் பொட்டலத்தை நீட்டும் போது கண்களில் பயத்துடன் நம்மை எதிர்கொள்கிறது. இது தேவைதானா?

அந்தத் தோழிக்கு அவ்வளவு குட்வொர்க் அவார்ட் அலுவலகத்தில். வீட்டில்?

"பின்ன என்ன செய்யறதுப்பா" என்றாள்.

நான் சொன்னேன், "வீட்டையும் அலுவலகமா நினைச்சுக்க" என்றேன்.

சிரித்தாள்.

"ஆமாம்... அலுவலகத்தை வீடா நினைக்கறப்ப வீட்டை அலுவலகமா நினைச்சுட்டா... தானா சரியாயிடும். உன் வீட்டுக்காரர் மேனேஜர் மாதிரி கட்டளை விடறார். உன் பொண்ணுங்க உன் கொலீக்.





மாதிரி இப்படியாக...'' என்றதும் அவன் முகத்தில் சிந்தனையுடன் தேசகம் முடிக்கலனாய்.

''மேடம், நான் கூட சில சமயத்துல வெட்கப்பட்டதுண்டு'' என்று ஆரம்பித்தார் ஒரு அன்பர்.

ஒருமுறை அவர் குடும்பத்துடன் ஹோட்டலுக்குச் சென்றிருந்தாராம். மெனு கார்டை கொடுத்து விட்டுப் போன சர்வர் பத்து நிமிடம் கழிந்து திரும்ப, அந்த அன்பர் அந்த சர்வரை ஏற இறங்க பார்த்துச் சரமாரியாய் திட்டியிருக்கிறார்.

''முதலில் ஹோட்டல் மேனேஜ்மெண்டைப் பத்தி தெரிஞ்சுக்குங்க. கஸ்டமரை சரியா கவனிக்கத் தெரியாத, உங்க மேனேஜருக்கு என்னய்யா ஹோட்டல்'' என்று கேட்க அவருடைய மகள் சமயோஜிதமாக நிலைமையைச் சமாளித்திருக்கிறாள்.

''அப்பா... அவங்களுக்கு நீங்க மட்டும் கஸ்டமர் இல்லை... ஆபீஸ்ல நீங்க இருக்கற இடமே தெரியாது... அப்படிங்கறாங்க... இப்படிச் சத்தம் போடலாமாப்பா...'' என்று அவள் அப்பாவை ஆசுவாசப்படுத்தியிருக்கிறாள்.

''அப்பா... நீங்க காசு வாங்கிட்டு வேலை செய்யறீங்க... அதனால பொறுமையா இருப்பீங்க. காசைக் கொடுக்கிற இடத்துல கொஞ்சம் கருணையையும் கொடுங்க...'' என்று சொன்னதும் வெட்கிப் போய் விட்டாராம்.

அலுவலகத்தில் பொறுமையாய் இருந்தால் வெளி இடத்தில் கடிந்து கொள்ள வேண்டியது அவசியமா?

இதே சிலர் நம்மைக் கடிந்து கொள்ளும் போது நாம் சும்மா இருக்கிறோமா?

''நாக்கு உள்ளவன் பிறர் நாக்கையும் சகித்துக் கொள்ள வேண்டும்'' என்றார் புத்தர்.

இங்குதான் அன்பு காண்பிக்க வேண்டும். அல்லது வேண்டாம் என்றெல்லாம் எதுவும் கிடையாது. உலகிலேயே தலைசிறந்த மொழி அன்பு என்னும் மொழிதான். நேசம் என்பது எல்லோரிடமும் பாராட்டுவது கடினம் என்றாலும் கடிய முகம் காட்டி கனியிருப்ப காய் கவரத் தேவையில்லையே. நம் நெஞ்சினில் கொந்தளிப்பு இருப்பினும் அது ஏன் உங்கள் எதிராளியை பாதிக்க வேண்டும்?

பிரச்சினை எங்கு இல்லை. சொன்னால் ஆச்சரியம். பிரச்னை குழந்தையைப் போன்றது. அதைக் கிள்ளி விட்டால் அழும். அரவணைத்தால் பேசாது தூங்கிப் போய்விடும். எல்லாவற்றிற்கும் மேலாக பேச்சை மருந்தைப் போன்று அளவோடு உபயோகித்தால் பயன்தரும். அளவுக்கு மீறினால், மனவருத்தம், பகை, இவைகள்தான் மிஞ்சும்.

எப்போதும் ஒரே வேடம் போட்டுக் கொண்டால் யாருக்கும் பிரச்னை அல்ல. அந்த வேடத்தில் அன்பு மட்டும் நிஜமாய், நிரந்தரமாய் இருக்கட்டும்.

— திருமாமகள்



தீபாவளிக்கு வடை, முறுக்கு, தேன்குழல் போன்ற பட்சணங்கள் செய்யும் போது மாவுடன் தேங்காய் எண்ணெயை விட்டுப் பிசைந்து, பிறகு வேறு எந்த எண்ணெயில் சுட்டாலும் தேங்காய் எண்ணெயில் செய்தது போலவே மணமாக, ருசியாக இருக்கும்.

— காயத்ரி பக்தவச்சலம்

**படித்துப் பிரமிக்கலாம்**

• [illegible]



# அவனுக்குக் கம்ப்யூட்டர் மூளையப்பா

"அரிது அரிது மானிடராய் பிறப்பது அரிது" என்று பாடிய ஔவையார் பாட்டுக்கு ஏற்ப மனிதன் தான் இவ்வுலகத்தின் பிரமிக்கத் தக்க விஷயமாகும். மனிதன் என்பது ஆண் பெண் இருபாலரையும் குறிக்கும் சொல்லாகக் கருத வேண்டுகிறேன்.

இருபதாம் நூற்றாண்டின் மிக உபயோகமான, பெரிய கண்டுபிடிப்பான கம்ப்யூட்டரை மனிதனுடன் ஒப்பிடுவது பல அறிவு ஜீவிகளின் வழக்கமாக உள்ளது. 'அவனுக்குக் கம்ப்யூட்டர் மூளையப்பா!' என்பார்கள். இது எவ்வளவு அபத்தம். மனிதனை கம்ப்யூட்டருடன் ஒப்பிடவே முடியாத அற்புதமானவன் அவன். ஆனால் கம்ப்யூட்டர் ஒருநாள் மனிதனை ஆளுமா? நமது இனத்தின் தலைவிதியை நிர்ணயிக்கப் போவது கம்ப்யூட்டரா என்ற கேள்விக்கு விடைகாண வேண்டிய கட்டத்தில் நாம் உள்ளோம்.

முதலில் மனிதனை அறிந்து கொள்வோம். மனிதனின் மூலாதாரமாக உள்ளது செல்கள் எனப்படும் மிகச் சிறிய உயிர்வாழ் பகுதியாகும். அந்தச் செல்லை பகுத்தால் வருவது ப்ரோட்டின் மற்றும் அமினோ அமிலங்கள். இவற்றை மேலும் ஆராய்ந்தால் அமினோ அமிலங்கள் நைட்ரோ கார்பன் மூலக்கூறுகள் ஆகும். "Man is a complex Hydrocarbon" என்கிறார் ஒரு விஞ்ஞானி. ஆனால் மனிதன் இதற்கும் மேலுள்ள ஒரு பொருளாவான். மனிதனின் ஒவ்வொரு இயக்கத்தையும் நம்மால் இரசாயன விதிகளைக் கொண்டு விளக்க முடியும். நமது நரம்பு மண்டலத்தை, நரம்பு வலைப் பின்னலை இன்னும் அறியவில்லை.

நினைவு, தூக்கம், பசி, இறப்பு, மனச்சாட்சி, அன்பு, பாசம் என்பவற்றை நமக்குத் தெரிந்த பௌதிக இரசாயன விதிகளால் விளக்க முடியவில்லை.

நமது செல்கள் குரோமோசோம் எனப்படும் மூலக் கூறுகளாக பிரித்தாலும் அவற்றின் செயல்பாடுகளை, விதிகளை அறிய பெரும் முயற்சி நடந்து கொண்டு இருக்கிறது. "ஜீனோம் ப்ராஜக்ட்" 2000 வருடத்தில் முடிவடையும் போது ஓரளவிற்கு புரிந்து கொள்ள முடியலாம் என்று நம்பப்படுகிறது.

மனித மூளை, நாளமில்லாச் சுரப்பிகள் நோய் எதிர்ப்பு சக்தி போன்றவையின் செயல்பாடுகள் ஓரளவிற்குத் தெரிய வந்துள்ளன. கற்றது கை மண்ணளவு. கல்லாதது உலகளவுதான். ஒரு மனிதன் பிறந்ததிலிருந்து தன் ஆயுட்காலம் வரை படித்தாலும் மனிதனை புரிந்து கொள்வது கடினம்தான். நமது செயல்பாட்டை எந்த ஒரு பொது விதியினாலும் அடக்க முடியாது.

கடவுள் என்னுள் இருக்கிறான். "அஹம் பிரம்மஸ்மி" நானே கடவுள் என்பது வேத வாக்கியமாகும். தன்னுள் இருக்கும் பிரம்மத்தை உண



ரும்போது மற்ற ஜீவராசிகளிடமும் கடவுள் இருப்பதை அறிய முடியும்.

அந்த நிலையில் ஞானம் பிறந்து அன்பு ஒன்றே ஆளுமை செலுத்தும் வழியாகும்.

கம்ப்யூட்டர் மனிதனால் உருவாக்கப்பட்ட ஒன்று. அதனால், இட்ட வேலைகளைச் செய்து முடிக்கும். வேகமாக கணக்கும் போட முடியும். கம்ப்யூட்டரின் ஞாபக சக்தி அதிகமாக இருப்பதாக தோன்றினாலும் மனிதனின் ஞாபக சக்தியை ஒப்பிடும்போது குறைவுதான். மீண்டும் மீண்டும் செய்யக் கூடிய வேலைக்கும் கடினமான வேலைக்கும் கம்ப்யூட்டரைப் பயன்படுத்த முடியும். ஆனால் அதற்கு தானாகக் கற்றுக் கொள்ளும் தன்மை, பகுத்தறிந்து பார்க்கும் தன்மை கிடையாது.

உதாரணத்திற்கு இந்தச் சிறுகதையைப் பார்ப்போம். ஒருவன்/(ஒருத்தி) ஒரு ஹோட்டலுக்குச் சென்று தோசை ஆர்டர் செய்கிறான். அதை கருக்கி கொடுத்து பணியாளர் கொண்டு வந்து கொடுத்தார். அவர் பணம் கொடுக்காமல் எழுந்து சென்று விட்டார்.



இந்தக் கதையில் மனிதன் தோசை சாப்பிட்டானா என்று ஒரு கம்ப்யூட்டரிடம் கேட்டால் பதில் வராது. ஆனால் ஐந்து வயது குழந்தை கூட மனிதன் தோசையைச் சாப்பிடவில்லை என்று கூறும்.

புரோக்ராம் செய்யப்படாத ஒன்றை கம்ப்யூட்டரால் சொல்ல முடியாது. ப்ரோகிராம் என்பது ஒரு ஆணைத் தொடர். அதை எழுதுவது மனிதன்தான். AI என்று சொல்லக் கூடிய ஆர்டிபிஷியல் இன்டெலிஜென்ஸ் பிரிவு நிபுணர்கள் இதை ஒத்துக் கொள்வதில்லை. AI யில் மிகப் பிரபலமான பிரிவு செஸ் விளையாடும் கம்ப்யூட்டர்களாகும். ஆனால் அவை கூட மிகப் பெரிய நினைவு சிப்களை (மெமரி பேக்-அப்) கொண்டு எல்லாவித சாத்தியக்கூறுகளையும் அலசி ஒரு முடிவை தேர்ந்தெடுக்கிறது. கம்ப்யூட்டருடன் செஸ் விளையாட்டு ஆடும்போது நாம் அதிகம் யோசிக்காமல் தடாலடியாக விளையாடினால் கம்ப்யூட்டர் களைத்துப் போகும் என்பது உறுதி.

கம்ப்யூட்டர்களுக்கு உணர்ச்சி கிடையாது. இருந்தால் நாம் அவற்றை switch off செய்யும்போதோ அல்லது பழுதடைந்து போனாலோ வருத்தப்படுமென்றோ மனிதனுக்கும் உயிரினங்களுக்கும் உள்ள சக்தியான இனப்பெருக்கமும் கம்ப்யூட்டரிடம் இல்லை. சொல்லப் போனால் ஆண் கம்ப்யூட்டர் பெண் கம்ப்யூட்டர் என்று கூட கிடையாது. அது ஒரு ஜடப் பொருளே, நமக்கு உதவியாக அல்லது கெடுதலாக இருக்கக்கூடிய ஒரு கருவி. அதைப் பயன்படுத்தும் முறையில்தான் அதன் உபயோகம் இருக்கிறது.

கம்ப்யூட்டர் என்று சொன்னால் இது வரை உள்ள இனிமேல் வரப்போகும் கருவிகளையும் சேர்த்தே ஆகும். இதை மிகவும் உயர்த்தி எழுதி பேசி வரும் அறிவுஜீவிகள் சமூகத்திற்குக் கெடுதலையே செய்கின்றனர்.

மனிதன் தனக்குக் கிடைத்துள்ள உடம்பும், மனமும் அவ்வளவு 'காஸ்ட்லி'யானது. மகத்தானது என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். நல்ல வழியில் போற்றிப் பாதுகாக்க வேண்டும். மனிதனின் செயல்பாடுகள் சிந்தனைகள் ஒரு விதியின் கீழ் அடக்க முடியவில்லை. மனிதனின் மனத்தைப் புரிந்து கொள்வது மிகக் கடினம். அல்லது முடியாது. ஒரு மனிதனை மற்றொரு மனிதனே புரிந்து கொள்ள முடியும். மனிதனுக்கு அடையாளமாக இருப்பது மனது ஆகும். மனத்தை பண்படுத்தத்தான் மதங்கள் உள்ளன. அதைத் திறம்படப் புரிந்து கொள்ளாமல் மதவெறி கொண்டு மற்றவர்களை வெறுப்பது நியாயமற்ற செயலாகும்.

இந்த உலகத்தில் ஒவ்வொரு மனிதனின் பின்னும் ஒரு உளவாளியை (police) போடுவது சாத்தியமாகுமா? அப்படியே நியமித்தாலும் அவர்களை கண்காணிப்பது எப்படி?

கட்டுப்பாட்டுடன், நேசத்துடன் மற்றவர்களையும் தன்னைப் போல் நடத்தினால் இந்த உலகில் ஏன் வரதட்சணை, பெண் எரிப்பு, தீண்டாமை போன்றவை தொடரப் போகின்றன?

மனிதன் தன் மகிமையை உணர்ந்து, தன்னைப் போல மற்றவர்களையும் உணர்ந்து நேசித்தால் இந்த உலகம் எத்தனை இன்பமாக இருக்கும்!

— சிவகுமார்



# இவர்கள் கொஞ்சம் வித்தியாசமாய் சிந்திக்கிறார்கள்!

'சதுர்முகி ப்ரொடக்ஷன்ஸ்' - பெயர் கொஞ்சம் புதுமையாய் வித்தியாசத்தோடு இல்லை?' பெயரில் மட்டுமல்ல, இந்த பேனரில் நிகழ்ச்சிகளை தயாரித்து அளித்து வரும் பெண்களும், அவர்களின் குறிக்கோள்களும்கூட கொஞ்சம் வித்தியாசமான வைகள்தான். 'Exclusive item's - வேண்டுவோருக்காக துணிகளைத் தயாரித்து விற்பதில் தொடங்கி, சிறிது சிறிதாக முன்னேறி தொடர் நிகழ்ச்சிகளை தொலைக்காட்சியில் தயாரித்து அளிப்பதுவரை திருமதி சாந்தி பலராமனும் திருமதி ராகினி (சதுர்முகி. ப்ரொடக்ஷன்ஸ் பங்குதாரர்கள்)யும் எதிலும் புதுமையாய் சிந்திருக்கிறார்கள். எப்படி.'

**திருமதி சாந்தி பலராமன்:**

"பொடிக்'கில் நாங்கள் வைத்திருந்த ரகங்களை, அதன் புதுமையைப் பார்த்த ஒரு பெண்மணி, எங்களை முதன்முதலில் NEPCக்கு அறிமுகப்படுத்தி வைக்க அதில் 'Fashion show' நிகழ்ச்சிகளை 30 வாரத்திற்கு நடத்தினோம். 'தலைப்புக்கேற்றபடி' வெறும் ஆடை அலங்கார நிகழ்ச்சியாக இல்லாமல் இந்தியாவில் இத்துறையில் ஈடுபட்டிருக்கும் பல பிரபலங்களை பேட்டி கண்டு தொகுத்தளித்தோம். அதற்கு நல்ல வரவேற்பு இருந்தது. அடுத்து 'அழகு - ஆரோக்கியம்' என்கிற தலைப்பில் வடக்கே ஷானாஸ் ஹுசைன் லிருந்து பல மெட்ரோபாலிடன் நகரில் இருக்கும் பிரபல அழகுக் கலை நிபுணர்களின் கருத்துக்களை ஆலோசனைகளை பெண்களுக்கு உதவும் வகையில் நிகழ்ச்சிகளைத் தந்தோம். தற்போது சன் டி.வி.யில் சமையல் கலையைப் பற்றி திருமதி. சந்திரி - பட்டுடன் (பிரபல சமையற் கலை நிபுணர்) நிகழ்ச்சிகளை வழங்கி வருகிறோம்.

ஆனால் ஆரம்பத்திலிருந்தே எங்களது அனைத்து நிகழ்ச்சிகளும் பெண்கள் சம்பந்தப்பட்டதாக, அவர்களின் முன்னேற்றத்திற்கு வழி வகுக்கக்கூடியதாய் இருக்கும்படி அமைவதில் நாங்கள் உறுதியாய் இருக்கிறோம்."

**திருமதி ராகினி:**

"அதுமட்டுமல்லாமல் எங்களது நிகழ்ச்சிகள் ஒரு முழுமையானதாக, பல செய்திகளை அளிக்கக் கூடியதாக, அவைகளில் பெண்கள் பயன் பெறும் வகையில் இருக்கும்படியாக பார்த்துக் கொண்டோம். இப்படி, மிகவும் பயனுள்ள செய்திகளைக் கூறுவதாக இருந்ததால் எங்கள் நிகழ்ச்சிக்கு தானாகவே ஒரு வரவேற்பு கிடைத்து விட்டது. எங்களது கொள்கைகளில் இன்னும் சில - காமிரா. மேனைத் தவிர இத் துறையில்

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள்: 'சைட் டிஷ்' கடைசி தேதி: 15.11.97

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

ஈடுபட்டிருக்கும் அனைவருமே பெண்கள்தான். பணம் வருகிறதே என்பதற்காக சமூக நன்மைக்குக் கேடு விளைவிக்கும் விளம்பரங்களை நாங்கள் கண்டிப்பாக ஏற்றுக் கொள்வதில்லை. அதே சமயத்தில் இலாபம் சிறிதளவு வந்தாலும் அதில் ஒரு பகுதியை 'ஸ்பாடிக்ஸ் ஸொஸைட்டி'க்கு அளிப்பதில் மன திருப்தி அடைகிறோம்."

தற்போது கைவசம் உள்ள ஐடியா ஏதாவது?

"நிறையவே இருக்கு. தொடர் நாடக நிகழ்ச்சியைத் தயாரிக்கும் வாய்ப்பு கிட்டியிருக்கிறது. பெரும்பாலும் அவை உண்மையான சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கும். வழக்கம் போல் பெண் 'சப்ஜெக்ட்'தான்!

இத்துறையில் உங்களைப் போன்று வர நினைக்கும் பெண்களுக்கு நீங்கள் கொடுக்கும் டிப்ஸ்?

"1. எடுத்துக் கொண்ட 'concept' ல் ஆணித்தரமாக இருக்க வேண்டும்.

2. கொள்கைகளை எதற்காகவும் விட்டுக் கொடுக்கக் கூடாது.

3. ஆரம்பத்திலேயே அகலக் கால் வைப்பது நல்லதல்ல.

இதற்கெல்லாம் மேலே, பெண்வாசகிகள் அதிகமுள்ள இப்பத்திரிகையின் மூலம் நாங்கள் கூற விரும்புவதெல்லாம்: இம்மாதிரி பெண்கள் முன்னேற்ற நிகழ்ச்சிகளை அதிகம் பாருங்கள். ஆதரவு தாருங்கள். ஏனெனில் டி.வி.காரர்கள், "பெண்களே சினிமா நிகழ்ச்சிகளைத்தான் அதிகம் விரும்புகிறார்கள். அதனால் சமையல் கலை நிகழ்ச்சியானாலும் ஏதாவது ஒரு சினிமா - பாட்டை இடையில் நுழைத்து விடுங்கள். அப்போதுதான் நிகழ்ச்சி களை கட்டும் என்கிறார்கள்."

இவர்களது அங்கலாய்ப்பு நியாயமானதுதான். முற்றுப்புள்ளி வைக்க பெண்களாகிய நாம்தான் முன் வர வேண்டும்.

— கீதா மோஹன்

பகர் சிவன், தேவ்நாத்.

பக். 128 விலை ரூ.21.00



## புக் ஷெல்ஃப்

### Thus Spake the Paramacharya

மிகப் பெரிய முயற்சி. மஹாஸ்வாமிகளின் அருள் வாக்குகளை இருநூற்றி நான்கு தலைப்புகளில் தொகுத்திருக்கிறார்கள். தவிரவும் பல சிந்தனையாளர்கள் தங்களுக்கு ஆசார்ய ஸ்வாமிகளோடு ஏற்பட்ட அனுபவங்களை மனமுருகிக் கூறியிருக்கிறார்கள். மஹா ஸ்வாமிகளுக்கு அளிக்கப்பட்டிருக்கும் மிகப் பெரிய காணிக்கை இந்த ஆங்கிலப் புத்தகம். ஆசிரியர் - ஏ. கணபதிராமன்.

பக்: 1089 விலை ரூ.450.00

(பதிப்பாளர் - நெல்லை பாலு. 1, மேலத் தெரு, கோபால சமுத்திரம், நெல்லை மாவட்டம் - 627 451)

### ஸ்ரீ மஹிஷாசுரமர்த்தினி ஸ்தோத்ரம்

ஸமஸ்க்ருதத்திலும், தமிழிலும் கொடுக்கப் பட்டுள்ளது. சரியாக உச்சரிக்க வேண்டி.

பக்.16 விலை ரூ.3.00

### ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாமம்

லலிதா ஸகஸ்ரநாமத்தின் பெருமைகளைச் சொல்லி, பூஜை செய்யும் விதத்தோடு நாமாவளிகள் கொடுக்கப்பட்டுள்ளன. பதிப்பாசிரியர் - கே. ராகவராம சாஸ்திரி.

பக்- 50 விலை - 10.00

(இரண்டும் ஸ்டார் பிரசுரம், த.பெ.எண் - 423, 72. பெரியதெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5)

### உதவும் உறவு

மூ. குப்புசாமி எழுதிய முழு நீள நாடகம். மனித உறவுகளில் உதவுதல் என்பது எப்படி தலையாய இடத்தில் சிறப்பு பெறுகிறது என்பதைக் கூறுகிறார்.

பக். 160 விலை ரூ.20.00

(ஜெயசக்தி பதிப்பகம், 51. பம்மல் நெடுஞ்சாலை, பம்மல், சென்னை - 75)

### வீட்டிலேயே காய்கறித் தோட்டம் அமைக்கும் முறைகள்

வீட்டுத் தோட்டம் பற்றிய சகல அம்சங்களையும் கூறி உதவு

### இனி எங்கும் அக்னி ஹோத்திரம் பிரமிடு மருத்துவம்

பிரமிடு இன்றும் மனிதனுக்கு ஓர் ஆச்சர்யம்தான். அது மனிதனுக்குத் தருகின்ற பலன்களையும், அதைவிட சிறப்பான அக்னி ஹோத்திரத்தின் பயன்களையும் விளக்கி வியப்புற வைக்கிறார் டாக்டர் எஸ். இருபனாலி.

பக்.150 விலை ரூ.30.00

(இரண்டும் - நர்மதா பதிப்பகம், 10/7 ராஜாபாதர் தெரு, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17)

### தெய்வச்சுடர் ஸ்ரீரமணர்

ஸ்ரீரமண மஹரிஷி ஸ்வாமிகளின் வரலாறு, மகிமை. ஆசிரியர் - முத்துச்செழியன்.

பக்-176 விலை ரூ. 30.00

### படித்தவர்கள் பல்வேறு துறைகளில் வேலைக்கு சேருவது எப்படி?

வேலை வாய்ப்புத் துறைகளைப் பற்றி நிறைய செய்திகளைத் தருபவர் சூரியநாத்.

பக்- 128 விலை ரூ.22.00

(இரண்டும் - கார்த்திகா பப்ளிகேஷன்ஸ், 18. தெற்கு பெருமாள் கோயில் மேலத் தெரு, வடபழனி, சென்னை - 26)

### சிறந்த இந்தியச் சிறுகதைகள்

புதுமைப்பித்தன், அப்பால் போன்றவர்களின் தலை சிறந்த கதைகள். தொகுப்பு - சிவலை இளமதி.

பக். 115 விலை ரூ. 25.00

(மணிமேகலைப் பிரசுரம், த.பெ.எண்.1447, 4. தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை-17)

### மாயப்பூக்கள்

சிறுவர்களுக்கான கலையான மாய ஜாலக்கதை. கௌதம நீலாம்பரன் கௌதம குமாராக எழுதியுள்ளார்.

பக்.118

விலை ரூ.30.00

(கங்கை புத்தக நிலையம், 13.

—— மங்கையர் மலர்

நீலநாராயண தெரு, தி.நகர், சென்னை - 17)

## துகில் வடிவமைப்புக் கலை

தமிழில் புதிய முயற்சியாக 'ஃபேப்ரிக் டிசைனிங்' எனப்படும் துணிகளின் வடிவமைப்பு முறையினை படங்களுடன் விளக்கியுள்ளார் ஆசிரியர் வி.கே. விஜயன். இத்துறையில் ஆர்வம் உள்ளவர்களுக்கு மிகவும் பயன்படக் கூடியது.

பக். 180 விலை ரூ. 120.00

## தைத்திரீயோபநிஷத்

ஸ்ரீ சங்கரபாஷ்யம், வித்யாரண்ய தீபிகை, ஸ்ரீரங்க ராமானுஜ பாஷ்யம் இவற்றைத் தமிழுரையுடன் தந்துள்ளனர். வேதத்தின் சிறப்புகளையும் உபநிடத விசேஷங்களையும் விளக்கமாகக் கூறுபவர் ப்ரம்ம ஸ்ரீ கடலங்குடி. நடேச சாஸ்திரிகள். தொகுப்பாசிரியர் - கேஎஸ். சரஸ்வதி.

பக். 393 விலை ரூ. 110.00

## மந்திரப் பிரச்னம்

இல்லற தர்மத்தைச் சார்ந்த விவாகம் முதல் இறுதி வரையிலான கர்மங்களின் சிறப்பு, அனுஷ்டிக்கும் முறை பற்றியது. தமிழுரை - கடலங்குடி நடேச சாஸ்திரிகள்.

பக் - 331 விலை ரூ.110.00

(இரண்டும் - கடலங்குடி பப்ளிகேஷன்ஸ், 38, நடேச அய்யர் தெரு, தி. நகர், சென்னை-17)

## நூறு வயது

சிறுகதைத் தொகுப்பு. அரியதாக அருமையாக எழுதும் ரா. பாலகிருஷ்ணனின் (பாணன்) சிறுகதைகள்.

பக்.351 விலை ரூ.30.00

## வெள்ளி நிலவே வினோதா

சோதனைக் குழாய் மூலம் பிறந்த குழந்தைகளைச் சுற்றிப் பின்னப்பட்ட சுவையான நாவல். ஆசிரியர் - ஆர்னிகா நாசர்.

பக்.225 விலை ரூ.45.00

(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13, நீலநாராயண தெரு, தி.நகர், சென்னை - 17)

## மனையடி சாஸ்திரம்

விளக்கப் படங்களுடன் எழுதியிருப்பவர் கோமல் தமிழமுதன்.

பக்.371 விலை ரூ.35.00

(விநாயகா பப்ளிகேஷன்ஸ், 201, தேனாம்பேட்டை டைம் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14)

## திருமணத்துக்குரிய பத்து பொருத்தங்கள் பார்ப்பது எப்படி?

ஆசிரியர்: ஸ்வாமி கமலானந்தாஜி தாஸ்

பக்.128 விலை ரூ. 25.00

(விசாலாட்சி நிலையம், 53, தேனாம்பேட்டை டைம் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14)

## சுவையான செட்டிநாட்டு சைவ சமையல்

100 வகைகள். ஆசிரியர் ராமமிரி ஆச்சி.

பக்.92. விலை ரூ.18.00

(பிரேமா நிலையம், 45, முத்து முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை - 14)

## பரிகாரம்

சிறுகதைத் தொகுப்பு. ஆசிரியர் - அடியற்கை ஹமீதா மைந்தன்.

பக். 120 விலை ரூ. 23.00

(கதீஜா ஹரீஃப் நூலகம், நூர்பா இல்லம், 2.36, மேலத்தெரு, பொதக்குடி - 614 109)

## இசை உலகின் இமயம் எம்.எஸ்.

எம்.எஸ். அவர்களின் வாழ்க்கை மற்றும் அரிய சாதனைகளைக் கூறுபவர் சாரதி.

பக். 196 விலை ரூ.40.00

## இலையுணவும், மருத்துவமும்

இயற்கை உணவின் சிறப்புக்களையும், நோயற்ற வாழ்விற்கு அதன் அவசியத்தையும் கூறுபவர் ந. இராம சுவாமிப் பிள்ளை

பக். 312 விலை ரூ.60.00

(இரண்டும் வானதி பதிப்பகம், 13, நீலநாராயண தெரு, தி.நகர், சென்னை - 17)

## கர்னாடக சங்கீதம், லோயர் க்ரேடு

சங்கீதத்தில் லோயர் க்ரேடு தேர்வுக்குரிய பாடங்கள், விளக்கம், வினாத்தாள், மாதிரி ப்ராக்டிகல் தேர்வு என அனைத்தும் உள்ளன. சங்கீதத் தேர்விற்குச் செல்லும் மாணவ மாணவியருக்கு பயன்படும். ஆசிரியர் கல்லிடைக்குறிச்சி ஏ. ஸுந்தரய்யர்.

பக். 264+72 விலை: ரூ.125.00

(கிரிகூசிக் புக்ஸ் பப்ளிஷர்ஸ், PB No.379 மைலாப்பூர் போஸ்ட் ஆபீஸ், சென்னை - 4)



# திருப்தியாக தீபாவளியைக் கொண்டாட...

பண்டிகைகள் கொண்டாட்டத்தை முன்னோடியாக நமக்கு வகுத்துக் கொடுத்ததன் முக்கிய நோக்கமே வருடம் முழுவதும் ஒரே மாதிரியான சூழலில் வாழ்க்கை சிக்கித் தவிக்காமலிருக்கவும், மனித நேயத்தை வளர்க்கவும், குழந்தைகளுடனான உறவை மேம்படுத்தவும்தான்.

ஆனால், தற்போது நாம் கொண்டாடும் முறையினில் இந்நோக்கங்கள் நிறைவேற்றப்படுகின்றனவா என்றால், முழுமையான அளவில் இல்லை என்பதுதான் பெரும்பாலோரின் பதிலாக இருக்கிறது. புதியதொரு கலாச்சார தாக்குதலுக்கு பண்டிகைகளும் பலியாகி வருகின்றன.

நாம் கொண்டாடுகிற பண்டிகைகளிலேயே பொருளாதாரம், ஆரவாரம், செயல்பாடுகள் போன்ற எல்லா அம்சங்களிலுமே மிகப் பெரிய முக்கியத்துவம் கொடுத்து கொண்டாடப் படுவது தீபாவளிப் பண்டிகையே. போனஸ், அட்வான்ஸ் போன்றவைகளுடன் தீபாவளிக்கு தொடர்பு ஏற்பட்டு விட்டதால், மிகுந்த எதிர்பார்ப்பை சாமானிய மக்களின் மனதில்கூட ஏற்படுத்தி விடுகிறது. சிறப்பு மலர்களை எல்லாம், அதுவும் பிரமாண்டமான பரிசுப் போட்டிகளுடன், வெளியிட்டு இலக்கிய உலகம்கூட இப் பண்டிகைக்கு முக்கியத்துவம் தந்து வருவது இதன் தனிச்சிறப்பு. இருந்தாலும் எல்லா பண்டிகைகளும் நமது கலாச்சாரத்தில் குழந்தைகளின் மகிழ்ச்சிக்கே முதன்மையான இடத்தைத் தந்துள்ளன. எனவே, உங்கள் குழந்தைகளின் மகிழ்ச்சியை மையமாகக் கொண்டே பண்டிகை நிகழ்ச்சிகளைத் திட்டமிடுங்கள். நமது பண்பாட்டுத் தொடர்ச்சிக்கும் இது அவசியமாகும்.

தீபாவளியைச் சிறப்பாக்கும் முக்கியமான மூன்று பொருட்கள் புத்தாடை, பட்டாசு, பட்சணம். இதில் பட்டாசு வெடி வகைகளுக்கும், புத்தாடை அணிகலன்களுக்கும் நாம் பணத்தை மட்டுமே செலவு செய்கிறோமே அன்றி நேரத்தை அல்ல. அதற்காகவும் நேரத்தை ஒதுக்க வேண்டும். தீபாவளிக் கொண்டாட்டத்தின் ஒரு அம்சமே இது. துணிமணிகள் எடுக்கும்போதும் சரி, பட்டாசுகள் வாங்கும்போதும் சரி குழந்தைகளையும் கூடவே அழைத்துச் செல்லுங்கள். தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்கள் என்றால் பரவாயில்லை. அவர்களைத் தவிர்ப்பாக





உளுத்தம் பருப்பை ஊற வைத்து இட்லிக்கு அரைப்பது போல் அரைத்து அதை சின்னச் சின்னதாக சீடை அளவு எடுத்து எண்ணெயில் பொரித்து அதை ஜீராப் பாகில் போட்டால் ஜாமூன் போல் குழந்தைகள் விரும்பிச் சாப்பிடுவார்கள்.

— ஜெ. காமாட்சி

கான சந்தர்ப்பங்களை எதிர்பார்க்காதீர்கள். அவர்களை அழைத்துச் செல்வதைத் தொல்லையாக நினைத்து அவஸ்தைப் படாமல், இன்பத் தொல்லையாக நினைத்து அனுபவியுங்கள். பிள்ளைகளையும் பங்கு பெறச் செய்வதன்மூலம் அவர்களின் எதிர்கால வாழ்க்கைக்குத் தேவையான பல பண்புகளை அறிவதற்கு நாம் துணை செய்தவர்களாகிறோம். பெற்றோர்கள் மட்டுமே இச் செயலில் ஈடுபடுவதென்பது சுவாரசியமில்லாமல் ஒரு ரொடீன் செயலாக அமைந்து விடும்.

அடுத்தது, தீபாவளி அன்று பலகாரங்கள் செய்வது. இதில் குடும்பத்தினர் அனைவரும், குழந்தைகள் தவிர, ஈடுபடுவது வேலையை சுலபமாக்குவதுடன் நேரத்தையும் மிச்சப்படுத்தும். அனைவரும் ஈடுபாட்டுடன் செயல்படும் போது அங்கு மகிழ்ச்சிக்கு குறைவிருக்குமா என்ன! தீபாவளியின் முதன்மையான நோக்கமே மகிழ்ச்சியும் மனிதநேயமும்தானே. அளவுக்கு அதிகமாக பட்சணங்கள் செய்வதையோ, அதிக நேரம் அந்த வேலையில் மட்டும் ஈடுபடுவதையோ தவிர்த்து விடுங்கள். இதனால் அலுப்பும், சலிப்பும் ஏற்பட்டு தீபாவளி அன்று 'அப்பாடா' என்று ஓய்வெடுக்கத்தான் தோன்றுமே தவிர பண்டிகைக் கொண்டாட்டங்களில் முழுமையாக உங்களை ஈடுபடுத்திக் கொள்ள முடியாது.

குழந்தைகளுடன் சேர்ந்து நாமும் பொழுதைக் கழிக்கும்போது அவர்களுக்கு உண்டாகும் திருப்தி இருக்கின்றதே, அதன் பலனை பிற்காலத்தில் நிச்சயம் நம்மால் உணர முடியும். அடுத்து, நண்பர்கள் உறவினர்கள் வீடுகளுக்குச் செல்லும்போது குழந்தைகளையும் உடன் அழைத்துச் சென்று வாழ்த்து தெரிவிப்பது, நமது இல்லம் தேடி வரும் நண்பர்களையும் உறவினர்களையும் வரவேற்று உபசரிக்கும்போது குழந்தைகளையும் அச்செயல்களில் பங்கு பெறச் செய்வது நற்பழக்கங்களை வளர்க்க உதவும். கொண்டாட்டங்களை நண்பர்கள் உறவினர்களுடன் மட்டும் நிறுத்திக் கொள்ளாதீர்கள். முடிந்தவரை உங்களுக்கு அருகே உள்ள அனாதை' இல்லங்களுக்குச் சென்று அங்குள்ள குழந்தைகளுடன் குறைந்த பட்சம் அரைமணி நேரமாவது தீபாவளியைக் கொண்டாட முயற்சி செய்யுங்கள். முடியாதவர்கள் ஏழைக் குழந்தைகள் ஒரு சிலருக்காவது பிள்ளைகளை விட்டுப் பட்சணங்களைக் கொடுத்தனுப்புங்கள்.

பட்டாசுகள் வெடிக்கும்போது கூடவே நீங்களும் இருங்கள். குழந்தைகளுக்கு இது பாதுகாப்பு மட்டுமல்லாது, நமது பங்கு அவர்களது உற்சாகத்தை இன்னும் அதிகப்படுத்தும். பாதுகாப்பு முறைகள் பற்றி முன்னமேயே அவர்களுக்குச் சொல்லிவிடுவது நல்லது. இந்த சமயங்களில் அக்கம்பக்கத்து வீட்டுக் குழந்தைகள் வேடிக்கை பார்க்க வந்தால், அவர்களிடமும் குழந்தைகளைவிட்டே ஒரு சில பட்டாசுகளைக் கொடுத்து கொளுத்தச் செய்யுங்கள். பாதுகாப்பானதும் ஆபத்தில்லாததுமான பட்டாசு வகைகளை மட்டுமே தேர்ந்தெடுத்து வாங்குவதில் மிகுந்த கவனமாக இருங்கள். இந்த விஷயத்தில் விட்டுக் கொடுப்பதென்பதே இருக்கக் கூடாது.

அதிகமாக ஒலி உள்ள அல்லது ஆபத்து ஏற்படுத்தும் பட்டாசுகள் வெடிப்பதை தவிருங்கள். இது கையாள்பவர்களை மட்டுமின்றி, ஒரு பாவமும் அறியாத உயிர்களையும் பாதிக்க வல்லது. பட்டாசுகள் வெடிக்கும்போது ஏற்படும் ஓசை கருவில் சிசுக்களின் செவிப்பறைகளைப் பாதித்து, கேட்கும் சக்தியையே இழக்க வைத்துவிடுமென்று ஆராய்ச்சியில் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், பட்டாசு சத்தம் கர்ப்பிணியால் தாங்கக்கூடிய அளவுக்கு இருக்கக்கூடும். ஆனால் வயிற்றிலுள்ள சிசுவால் அதைத் தாங்க முடியாது. குறிப்பாக, கர்ப்பிணிப் பெண்கள் உள்ள வீட்டினர் இதை கவனத்தில் கொண்டு தீபாவளிக்கு எச்சரிக்கையுடன் நடந்து கொள்வது நல்லது. மற்ற வகை நோயுள்ளவர்களுக்கும் இது தொல்லை.

அடுத்து இனிப்புகளை கடையில் வாங்கினாலும் சரி, நமது வீட்டில் செய்தாலும் சரி வண்ணங்களுக்கு அதிக முக்கியத்துவம் தர வேண்டாம். வண்ணங்களை ஆடைகளில் மட்டும் கண்டு மகிழுங்கள். உணவில் வேண்டாம். வண்ணத்துக்காக இனிப்புகளில் சேர்க்கப்படும் இரசாயனப் பொருட்கள் ரத்தக் கொதிப்பை அதிகப்படுத்துகின்றன என்பது உண்மை. மேலும், குழந்தைகளின் நலத்துக்கு இது மிகவும் கெடுதலாகும்.

இவற்றையெல்லாம் மனதில் கொண்டு திட்டமிட்டு தீபாவளியைக் கொண்டாடுங்கள். இன்றைக்கு மட்டுமல்ல, என்றைக்கும் உங்களுக்கு அது திருப்தியைக் கொடுக்கும்.

**— பூங்கோதை கிருஷ்ணராஜ்**

A UNIT OF
HARI
AGENCIES

# ஷாப்பிங்னா சும்மாவா ?






ஷாப்பிங்னா நிறைய அலையணும். நாலு கடைகள் ஏறிப் பார்த்து தரமானதா வாங்கணும். ஆனா, நான் புகழ் பெற்ற ஹரி ஏஜென்சிபோட அங்கமான ஹரிப்பிரியாவுக்கு போவேன். அது பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம். அங்கே சுரிதார்கள், பெட்டிகோட்டுகள், பேன்டுகள், பிராக்கள், நைட்டிகள், மாக்ஸிகள், கைக்குட்டைகள் அனைத்தும் கிடைக்குது.

சில கடைகளில் டிசைன் நல்லாயிருந்தா, நமக்கு பிடிச்ச கலர் இருக்காது. கலர் இருந்தா, தரமானதா இருக்காது. ஆனா, ஹரிப்பிரியாவுல என்னற்ற வண்ண வண்ண ஆடைகள் தரமாகவும், அதே சமயம் நியாயமான விலையிலும் இருக்கிறதால விட்டு வரவே மனசில்ல.




## ஹரிப்பிரியா

பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம்

111, முதல் மாடி, கச்சேரி சாலை,
சென்னை - 600 004. போன் : 4942368

# பட்சணம், பட்சணம்!

## தீபாவளி பட்சணங்கள்

இந்த மாத இம்மாத இல்லத்தரசி போட்டிக்கு தீபாவளி பட்சணங்கள் என அறிவிக்கப் பட்டவுடன் ஏகப்பட்ட பட்சண வகைகள் வந்து குவிந்து விட்டன. மிகவும் பரிசீலித்து சிலவற்றைத் தேர்ந்தெடுத்தோம். எனவே முதல் பரிசு, இரண்டாம் பரிசு என இல்லாமல் இங்கு பிரசுரிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு குறிப்பும் ரூ. 100/- பரிசு பெறுகிறது.

### தீபாவளி ஸ்பெஷல் ஸ்வீட்

இங்கு தரப்பட்டுள்ள எளிய தீபாவளி மருந்தை (ஸ்பெஷல் ஸ்வீட்) முதலில் சிறிது நெல்லிக்



காய் சைஸ் வாயில் போட்டுக் கொண்டு பின் எந்தப் பலகாரத்தையும் பயம் இல்லாமல் சாப்பிடலாம்.

இது பண்ணுவதும் எளிது. உடலுக்கும் நல்லது. பித்தம், வாயு, வயிற்றுப் பொருமல் முதலியன சொல்லிக் கொள்ளாமல் நம்மிடமிருந்து வெளியேறும். ஒவ்வொரு முறையும் இது இல்லாமல் நாங்கள் தீபாவளி கொண்டாடியதே இல்லை.

*தேவையான பொருட்கள்:*

தனியா - 1 கப்,
இஞ்சி - இரண்டு ரூபாய்க்கு,
சீரகம் - சிறிது,
வெல்லம் - 200 கிராம்,
நெய் - 2 டீ ஸ்பூன்.

*செய்முறை:*

இஞ்சியை தோல் சீவி சிறிதாக நறுக்கி வைக்கவும். தனியாவை ½ மணி நேரம் தண்ணீரில் ஊறப் போடவும். வெல்லத்தைப் பொடி பண்ணி வைக்கவும்.

அரை மணி கழித்து ஊறிய தனியா, நறுக்கிய இஞ்சி, சீரகம் சிறிது சேர்த்து மிக்ஸியில்



நன்கு விழுதாக அரைத்துக் கொள்ளவும். பின் அடுப்பில் வாணலியை ஏற்றி பொடி செய்த வெல்லத்தைப் போட்டுக் கரைந்ததும், அரைத்து வைத்துள்ள விழுதைப் போட்டு 2 ஸ்பூன் நெய்யையும் விட்டு நன்கு கிளறிக் கொண்டே வரவும். அடுப்பை ஸிம்மில் வைக்கவும். நன்கு கெட்டியாக வாணலியில் ஒட்டாமல் வந்தவுடன் இறக்கி, ஆறியவுடன் பாட்டிலில் எடுத்து வைக்கவும்.

- வி. கிருஷ்ணவேணி, கல்கத்தா - 13.

### (பாதாம் இல்லாத) பாதாம் அல்வா!

தீபாவளிக்கு (அதுவும் தலை தீபாவளி என்றால்) - பாதாம் அல்வா செய்தால் அசத்தலாகத்தான் இருக்கும்! ஆனால் பாதாம் பருப்பின் விலை! 'அதெல்லாம் மறந்துடுங்க' ஒரு பருப்பு கூட வேண்டாம்! அதே ருசியுடன் செய்யலாமே!

*தேவையான பொருட்கள் :*

பாசிப்பருப்பு - 1 கப்
முந்திரி பருப்பு - 25 கிராம்
பால் - 1½ கப்

சீனி - 2½.
நெய் - ¾ முதல் 1 கப் வரை.
பாதம் எஸன்ஸ் - ஒரு சில துளிகள்.

*செய்முறை :*

முந்திரியை சற்று செதில் செதிலாக பால் தெளித்து அரைத்துக் கொள்ளுங்கள்.

சுத்தம் செய்த பாசிப் பருப்பை களைந்து, பாலும் ஜலமும் கலந்து மிகக் குழைவாக வேக வைக்கவும்.

ஆறியதும் -

ஒரு வலை ஜலன் வடிகட்டி அல்லது சல்லடையில் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு

கரண்டியின் அடிப்பாகத்தால் தேய்த்தால் கண்டென்ஸ்ட் மில்க் மாதிரி கெட்டியான குழைவான பால் கிடைக்கும். வெந்த பருப்பு கெட்டியாக இருந்தால் மேலும் சிறிது பால் விட்டு வடிகட்டியில் மசிக்கவும். ஒரு சிறு பருப்புத் துகள்கூட இருக்கக் கூடாது என்பது மிக முக்கியம்.

இத்துடன் முந்திரி விழுதும் ஒரே ஒரு துளி உப்பும் கலந்து கொண்ட பின் -

ஒரு நல்ல அடிகனமான வாயகன்ற பாத்திரத்தில் (வெண்கலம் (அ) காப்பர் பாட்டம் நல்லது)

சீனியைப் போட்டு சிறிது ஜலம் விட்டு, அடுப்பில் கொதிக்க விடவும்.



(ஒரு கை ஜலமும் பாலுமாக தெளித்தால் சீனியிலிருக்கும் அழுக்கு பிரிந்து விடும். கரண்டியால் எடுத்து விடவும்)

கம்பிப் பாகு வர ஆரம்பித்ததும், கலந்து வைத்திருக்கும் பருப்புக் கலவையை அதில் ஊற்றி கைவிடாமல் கிளறவும். சேர்ந்து வரும்போது

கொஞ்சம் கொஞ்சமாக நெய் விட்டுக் கிளறிக் கொண்டே இருக்கவும். நெய் முழுவதும் விட்டு விடவும். சிறிது நேரத்தில் விட்ட நெய் பிரிந்து வெளியே வர ஆரம்பிக்கும். இப்போது அல்வா ரெடி! பாதாம் எஸன்ஸை விட்டு ஒரு கிளறு கிளறி, இறக்கி பதம் பார்த்து சற்று கெட்டி. வேறு ஒரு பாத்திரத்திற்கு (அ) தாம்பாளத்திற்கு மாற்றி விடவும். அவ்வளவே!

வேறு எந்த வாசனைப் பொருட்களோ, நிறமோ சேர்க்க வேண்டாம். நெய் மட்டும் நல்ல நெய்யாக இருக்க வேண்டும்.

ருசி மட்டுமல்ல, நிறம், வாசம், மென்மை யாவுமே பாதம் அல்வாவை ஒத்திருக்கும். ஆனால் ஒரிஜனலுக்கு ஆகும் செலவில் நாலில் ஒரு பங்கு கூட ஆகாது. கனிசமாகவும் இருக்கும். இனிப்பு அதிகம் தேவைப்படுபவர்கள் சீனியை அதிகரித்துக் கொள்ளவும்.

மற்றும்

இதையே - நெய்யைத் தவிர்த்து பாலை அதிகரித்து, 50 கி முந்திரி விழுதுடன் நன்கு கொதிக்க வைத்து, நெய்யில் முந்திரி திராட்சை வறுத்துப் போட்டால் பாயசம். சீனி பார்த்துப் போடவும்.

நெய்யே சேர்க்காமல் இன்னும் அதிகமாக பாலும், சீனியும் சேர்த்து கொதிக்க வைத்து எஸன்ஸ் சேர்த்து நீர்க்க வைத்தால் கீர்.

- என். பட்டம்மா, திருச்சி - 6.



**மைசூர்பாகு செய்யும் போது பக்குவம் தவறி விட்டால் கொத்துக் கொண்டே இருக்கும். அப்போது குங்குமப்பூ எஸ்ஸென்ஸ், முந்திரி பருப்புத் தூள், பாதாம் பருப்போ அல்லது எஸ்ஸென்ஸோ சேர்த்துக் கிளறி உடனே நெய் தடவிய தட்டில் கொட்டி ஆறவைக்க வேண்டும். துண்டுகளாக்கினாலும் நன்றாக இருக்கும். இது பாதாம்பாக்!**

**- பிரேமாராவ்**

## புதிய உக்காரை

*தேவையான பொருட்கள் :*

கடலைப் பருப்பு - 100 கிராம்
பாசிப்பருப்பு - 50 கிராம்
து. பருப்பு - 50 கிராம்
அரிசி - 50 கிராம்
வெல்லம் - 250 கிராம்
ஏலப் பொடி 3 சிட்டிகை
நெய் - 100 கிராம்



அடர்ந்த நிறம் கொண்ட துணிகளுக்குக் கஞ்சி போடும்போது அவற்றை உள்பக்கம் வெளியில் இருக்குமாறு திருப்பி கஞ்சியில் நனைக்கவும். இவ்வாறு செய்தால் துணிகளின் நேர்ப்பக்கத்தில் கஞ்சி அடையாளம் கோடுகளாகவோ கறைகளாகவோ தெரியாமல் இருக்கும்.

– உஷா ராமதுரை

*செய்முறை :*

இப்பருப்புகளை எண்ணெய் விடாமல் தனித்தனியாகச் சிவக்க வறுக்கவும். அரிசியை இலேசாக வறுத்தால் போதுமானது. பிறகு எல்லாவற்றையும் ஒன்றாகத் தண்ணீரில் 2 மணி நேரம் போல் ஊறவைக்கவும். ஊறிய



தும், நீர் இன்றி மையாக அரைக்கவும். வெல்லத்தை ஒரு சிறு கரண்டி நீர் ஊற்றிப் பாகு காய்ச்சவும். பாகு முற்றியதும் அரைத்த கலவையை அதனுடன் போட்டு கரண்டியால் நன்கு கிளறவும். அடுப்புத் தழல் சன்னமாக இருக்க வேண்டும். ஏலப் பொடியைத் தூவி நெய்யையும் ஊற்றி அடி பிடிக்காமல் கிளறவும். நெய் உதிர்ந்சப்பட்ட பிறகு முந்திரிப் பருப்பை நெய்யில் வறுத்துப் போட்டு கலந்து இறக்கவும். அல்லது பாகு காய்ச்சாமல் வெல்லத்தையும் ஊறவைத்தவற்றோடு சேர்த்து அரைத்து நெய்யைச் சூடுசெய்து அதில் கலந்து கிளறி வெந்ததும் ஏலப்பொடி, முந்திரிப் பருப்புகளைப் போட்டு இறக்கியும் பரிமாறலாம். இது தனியான சுவையுடன் இருக்கும்.

– ஜோதிர்லதா கிரிஜா,
சென்னை - 101.

## அவதார பட்சணம்

சகோதரிகளே, தீபாவளிக்கு விதவிதமான பலகாரங்கள் செய்ய வேண்டும் சுலபமாகவும் இருக்க வேண்டும். இதோ என்னுடைய அனுபவம். 4 பங்கு புழுங்கல் அரிசிக்கு 1 பங்கு பச்சை கடலை மாவும், 1 பங்கு வறுத்த கடலை மாவும் தேவை.

உங்களுக்குத் தேவையான அளவில் புழுங்கல் அரிசியை எடுத்துக் கொண்டு, 2 மணி நேரம் தண்ணீரில் ஊறவைத்து பின், கிரைண்டரில் நைஸாகவும், கெட்டியாகவும் அரைத்துக் கொள்ளவும். அரிசிக்குத் தகுந்த அளவில் வறுத்த கடலை மாவு, பச்சை கடலை மாவில், ஒரு கப் எண்ணெயைப் புகை வர காய்ச்சி ஊற்றி கலந்து கொள்ளவும். புழுங்கல் அரிசி மாவு, கடலை மாவு, வறுத்த கடலை மாவுடன் தேவையான அளவு உப்பு, சமையல் சோடா சேர்த்து, ஒரு கப் டால்டாவும் சேர்த்து கெட்டியாக பிசைந்து கொள்ளவும். இப்பொழுது மாவு ரெடி. சிறிதளவு மாவில் பெருங்காயம், சீரகம், எள் சேர்த்து முறுக்குப் பிழியலாம். சிறிதளவு மாவில், மிளகாய்த் தூள், பூண்டு (அரைத்தது) சேர்த்து ரிப்பன் பட்டை செய்யலாம். சிறிதளவு மாவில் வேர்க்கடலை, வறுத்த கடலை, எள் சேர்த்து நிப்பட் (தட்டை) செய்யலாம். சிறிதளவு மாவில் தண்ணீர் சேர்த்து கரைத்து முத்து முத்தாக காராபூந்தி செய்யலாம். சிறிதளவு மாவில், தேங்காய்த் துருவல், எள், மிளகாய்த்தூள் சேர்த்து சீடையாக உருட்டி போடலாம். 6 இன் ஒன் மாதிரி, எத்தனைவிதம் செய்யலாம் பாருங்கள்.

– புஷ்பா பிரகாஷ், பெங்களூர் - 43.

## த்ரீ இன் ஒன் ஸ்வீட்

இந்த ஸ்வீட் பால்கோவாவின் மணமும், தேங்காய் பர்பியின் ருசியும், மைசூர் பாகு போன்று வாயில் போட்டாலே கரையும் தன்மையும் உடையது.

*தேவையான பொருட்கள்:*
கடலை மாவு - 1 டம்ளர்,
பால் - 1½ டம்ளர்,
தேங்காய் அரைத்தது - ¾ டம்ளர்,
நெய் - ¾ டம்ளர்,

டால்டா - ¼ டம்ளர்,
சீனி - 2½ டம்ளர்,
சிறிது சோடா உப்பு,
நிலக்கடலை ½ டம்ளர்,
முந்திரி (சீவியது),
ஏலக்காய் எஸென்ஸ்.

*செய்முறை:*

நிலக்கடலை பருப்பை தோல் நீக்கி, தேங்காய் துருவலுடன் ¼ டம்ளர் பால் விட்டு, 2 ஸ்பூன் சீனி போட்டு மைய அரைக்கவும். டால்டாவை உருக்கி, நெய்யை சேர்க்கவும். கடலை மாவை கட்டியில்லாமல் லேசாக வறுக்கவும். பின்னர் கடலை மாவை பாலில் சேர்த்துக் கையினால் கரைக்கவும். அதில் சீனியைப் போட்டுக் கரைத்துக் கொள்ளவும். இக் கலவையில் தேங்காய், நிலக்கடலை அரைத்தவைகளையும், நெய், டால்டாவையும் ஒரு சிட்டிகை சோடா உப்பையும் சேர்த்து கரண்டியினால் கலக்கவும். அடுப்பில் அடிகனமான பாத்திரத்தில் இக் கலவையை ஊற்றி, அடுப்பை நிதானமாக எரியவிட்டுக் கிளறவும். பாத்திரத்தில் ஒட்டாமல் சேர்ந்து வரும்போது, ஏலக்காய் எஸென்ஸ் விட்டு நெய் தடவிய தட்டில் பரவலாக ஊற்றவும். சூடு இருக்கும்போதே முந்திரி சீவியதை தூவி அலங்கரிக்கவும். நன்கு ஆறியதும் டைமண்டு வடிவில் துண்டுகள் போடவும்.

- என். பொன்னி, தஞ்சை - 7.

## முள்ளுக் கிரீடம்

*தேவையான பொருட்கள் :*

4 கப் பச்சரிசி, 1 கப் கடலை பருப்பு, 1 கப் பாசிப் பருப்பு, பருப்புகளை மட்டும் வாசனை வரும் வரை வறுத்து, ஆற வைத்து அரிசியோடு சேர்த்து, மாவாக்க வேண்டும்.

உப்பு, வெண்ணெய், பெருங்காயம், வெள்ளை எள் சேர்த்துப் பிசைந்து மனோ கப்பு அச்சில் போட்டு பிழிய வேண்டும். தேங்காய்ப் பால் விட்டும் மாவைப் பிசையலாம். வாசனையாக இருக்கும்.

ரீபைண்ட் ஆயில் உபயோகிக்கவும்.

## BAMBINO BALLS

8 பங்கு பச்சரிசி, 1 பங்கு பாசிப் பருப்பு. பாசிப் பருப்பை மட்டும் வாசனை வரும்வரை வறுத்து, ஆறியபின், அரிசியையும் சேர்த்து மிஷினில் கொடுத்து அரைக்கவும்.



**முறுக்கு வகைகளை, ஆரம்பத்திலேயே தண்ணீர் கலந்து பிசையாமல் வெண்ணெய் உப்பு மற்றும் எல்லா சாமான்களையும் போட்டு நன்றாகக் கலக்கவும். இந்த உதிரான மாவை ருசி பார்த்துப் பிறகு நீர் கலந்து பிசைந்தால் அதிகம் ஊறாமலும் அளவான உப்பு, கார ருசியுடனும் இருக்கும்.**

**- பிரேமாராவ்**

உப்பு போடாமல், தண்ணீர் மட்டும் விட்டு மாவைப் பிசைந்து, தேன்குழல் அச்சில் போட்டு 'ரீபைண்ட்' எண்ணெயில் பிழிய வேண்டும். ஆறிய பின் சிறு, சிறு தூளாக செய்ய வேண்டும்.

3 பங்கு தூளுக்கு 1 பங்கு வெல்லம் என்று கணக்கிட்டு, வெல்லத்தைப் பாகு செய்து கொண்டு, தேன்குழலைப் போட்டு, அதனுடன் பல்லு, பல்லாகக் கீறிய தேங்காய் சேர்த்து சின்னச் சின்ன உருண்டைகளாகப் பிடிக்கவும். சின்னக் குழந்தைகள் என்ன பெரியவர்களே 'இன்னும், இன்னும் கொடு' என்று கேட்டு வாங்கி சாப்பிடுவர்.





## மோகன லட்டு

நீர் விட்டு, பம்பாய் ரவையை கெட்டியாகப் பிசைந்து பூரிகள் இட்டு நெய்யும், ரீஃபைண்ட் ஆயிலுமாக சேர்த்து, அதில் பொரித்து எடுக்கவும்.

பூரி ஆறிய பிறகு மிக்ஸியில் போட்டு பொடி செய்து கொள்ளவும்.

தேவையான அளவு அஸ்காவை பொடி செய்து இரண்டையும் சேர்த்து, ஏலக்காய்ப் பொடி போட்டு, உருண்டைகளாகப் பிடிக்கவும்.

– இந்திரா சந்திரன், திருச்சி - 1.



துவண்டு போயிருக்கும் பட்டு அல்லது பிரின்டெட் பட்டுப் புடவைகளுக்கு புத்துயிரூட்ட அரை பக்கெட் குளிர்ந்த நீரில் 1 டீஸ்பூன் சாதாரண கோந்து சேர்த்துக் கலக்கவும். துவைத்த புடவையை இந்த நீரில் அமிழ்த்தி எடுத்து உலர்த்தவும். இந்த முறைப்படி நனைத்து உலர்த்தினால் பளபளப்பாக இருக்கும்.

– உஷா ராமதுரை

## வெண்ணெய் அப்பம்

*தேவையான பொருட்கள்:*

வெண்ணெய் - 100 கிராம்,

பச்சரிசியை ஊறவைத்து இடித்த சலித்த மாவு - 200 கிராம்,

பச்சை பருப்பை லேசாக வறுத்து, வேக வைத்து அம்மியில் பொடித்த மாவு 200 கிராம்,

இடித்து சலித்த ஜீனி 500 கிராம்,

டால்டா (அல்லது) O.K ஆயில் 500 மில்லி,

வறுத்த இடித்த முந்திரி பருப்பு மாவு 100 கிராம்.

*செய்முறை:*

வெண்ணெய், பச்சரிசி மாவு, பாசிப் பருப்பு மாவு மூன்றையும் நன்றாகப் பிசைந்து கொண்டு இலையில் நெய் தடவி பூரி போல் தட்டி அதன் உள் இடித்த ஜீனி 1 ஸ்பூன் மற்றும் முந்திரி பருப்பு மாவு ½ ஸ்பூன் வைத்து மடித்து ஓரம் ஒட்டி வைத்துக் கொள்ளவும். இவ்வாறாக முறையே எல்லா மாவையும் அப்பம் செய்யவும். பின் அடுப்பில் எண்ணெய் சட்டியில் டால்டா (அல்லது) ஓ.கே. ஆயில் வைத்து மிதமான தீயில் போட்டு எடுத்து அதன் மேல் இடித்த ஜீனியை லேசாக தூவி உடையாமல் எடுத்து வைக்கவும். இதுவே வெண்ணெய் அப்பம்.

– பி. லலிதா, சீர்காழி - 10.

## லவங் லதிகா!

*தேவையான பொருட்கள்:*

சுத்தப்படுத்திய கெட்டியான அவல் ½ கப், சன்ன பேணி ரவை ¼ கப், மைதா ½ கப், துளி உப்புப் பொடி, நறுக்கிய பாதாம், பிஸ்தா, முந்திரி, கிஸ்மிஸ் வகைகள் தலா 10 கிராம், சர்க்கரைப் பொடி 100 கிராம், தேங்காய்ப் பூ 2 டீஸ்பூன், ஜாதிக்காய்ப் பொடி ¼ டீ ஸ்பூன், பச்சைக் கற்பூரம் 1 சிட்டிகை, ஏலப்பொடி ½ டீ ஸ்பூன், கேசரி பவுடர் சிறிதளவு, கோவா 200 கிராம், நெய் 4 டீஸ்பூன், ரீஃபைண்ட் ஆயில் ½ லிட்டர், சர்க்கரை 200 கிராம், கிராம்பு சுமார் 25.

*செய்முறை:*

முதலில் வெறும் வாணலியில் அவல், ரவை இரண்டையும் லேசாக மணம் வர வறுத்து மிக்ஸியில் பட்டு போல் பொடித்துக் கொண்டபின், மைதாவையும், இதில் சேர்த்துத் துளி உப்பு சேர்த்து 2 டீஸ்பூன் நெய் சேர்த்து ஒத்தாற் போல் பிசைந்து கொண்டு மிருதுவான மாவு ரெடியானவுடன் ஒரு ஈரமான மஸ்லின் துணியால் உலராமல் மூடி வைக்கவும். பாக்கி 2 டீஸ்பூன் நெய்யை வாணலியில் வைத்து இதில் கிராம்பு (லவங்கம்) பொரித்து எடுத்துத் தனியே வைத்த பின்பு இதே நெய்யுடன் நறுக்கிய டிரை ஃப்ரூட்ஸ், 100 கிராம் சர்க்கரைப் பொடி, தேங்காய்ப் பூ, ஏலப் பொடி.



கோவா எல்லாம் ஒத்தாற்போல வருமாறு பூரணத்தை ரெடி பண்ணிக் கொள்ளலாம். கோவாவில் நெய்ப் பசை மிகவும் இருப்பதால் தனியே நெய் தேவையில்லை. சர்க்கரைப் பொடியும் இருப்பதால் இவற்றில் ஈரத் தன்மைக்கேற்ப எல்லாமாகப் பூரணம் பிசைந்தவுடன் திரண்டு வந்து விடும் என்பதே இதன் ஸ்பெஷாலிட்டி!

அடுத்து, பிசைந்து வைத்த மாவைத் திரட்டிப் பூரியாக இட்டுக் கொண்டு, இதில் பூரணத்தையும் வைத்து மடித்துப் பட்டையாக ஆக்கி, (ரிஸ்ட்வாட்ச் ஸ்ட்ராப் போல்) மடித்து அப்படியே இரண்டு ஓரங்களையும் வளைவாக சேர்த்து இரண்டையும் இணைத்து 2 கிராம்புகளைக் குத்திப் பொருத்தி விடவும். அழுங்காமல் ஒவ்வொன்றாகப் பண்ணி ரெடியாக்கிய பின்பு, ஆயிலில் பொன்னிறமாகப் பொரித்து எடுத்தவுடன், ரெடியாக உள்ள 200 கிராம் சர்க்கரையைக் கம்பிப்பாகாக ஆக்கி இதில் கேசரி பவுடர், ஜாதிக்காய், பச்சைக் கற்பூரம் சேர்த்து சூடாக இருக்கும் போதே 'லவங் லதிகா'க்களை மூழ்கப் போட்டு நன்கு எல்லாப் புறங்களிலும் ஊறியவுடன் எடுத்துத் தாம்பாளத்தில் அடுக்கவும்.

– லக்ஷ்மி ப்ரியா,
பெங்களூர் – 5.



## மைதா மிக்ஸர் (அ) ஒயிட் மிக்ஸர்

முதலில் ஒரு கிலோ மைதா மாவு எடுத்துக் கொண்டு, சலித்து எடுத்து சுத்தம் செய்து, ஆவியில் வேகவைக்க வேண்டும். மைதாவில் தண்ணீர் எதுவும் சேர்க்காமல் ஆவியில் வேக விட வேண்டும். (இட்லி தட்டில் அல்லது பெரிய பாத்திரத்தில் துணியில் மூட்டை கட்டி வைத்தும் அல்லது புட்டு மேக்கரில் போட்டு கூட ஆவியில் வேகவிடலாம்)

ஒரு பத்து நிமிடம் ஆவியில் வைத்து எடுத்து மைதாவை ஆற விட்டு மீண்டும் ஒருமுறை சலித்து எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும். இப்போது எல்லாவிதமான பட்சணங்கள் செய்வதற்கும், வளைந்து கொடுக்கும் மாவு ரெடி!

வெந்த மைதா மாவில் அரை கிலோ எடுத்து, தேவையான அளவு உப்பு சேர்த்து தண்ணீர் விட்டு, கெட்டியாக அதே சமயம் இளகலாக இருக்கும்படி பிசைந்து எடுத்துக் கொண்டு, ஓமப் பொடி அச்சில், எண்ணெயில் பிழிந்து, ஓமப் பொடி தயார் செய்து கொள்ள வேண்டும். வெள்ளைவெளேர் ஓமப் பொடி கிடைக்கும்.

மீதமுள்ள அரை கிலோ மாவில் முக்கால் பாகம் எடுத்துக்கொண்டு, உப்பு, சிறிது மிளகாய்ப் பொடி சேர்த்து சிட்டிகை சோடா மாவு சேர்த்து, பூந்தி மாவிற்குக் கலப்பது போல் மாவை கரைத்து எடுத்துக் கொண்டு, அடுப்பில் காய்ந்து கொண்டிருக்கும் எண்ணெயில் பூந்தி கரண்டியில் ஊற்றி பூந்தி போட்டு எடுக்க, வெண் முத்துக்கள் போன்ற முத்து முத்துக்களான பூந்தி கிடைக்கும்.

அடுத்து, மீதமுள்ள மாவில் தேவையான அளவு உப்பு, சிறிது மிளகாய்ப் பொடி சேர்த்து, ஒரு டேபிள் ஸ்பூன் அரிசி மாவு, ஒரு டேபிள் ஸ்பூன் பொட்டுக்கடலை மாவு கலந்து, பூந்தி மாவிற்குக் கரைப்பதைவிட சற்று திக்காக் கரைத்து, பூந்தி கரண்டியில் தேய்த்து விட்டால் (காய்ந்து கொண்டிருக்கும் எண்ணெயில்) கார்ன் ஃப்ளேக்ஸ் போன்று மைதா ஃப்ளேக்ஸ் கிடைக்கும். இவற்றை அரித்து எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

சிறிது முந்திரி பருப்புகள் எடுத்து ஒன்றிரண்டாக உடைத்து எடுத்துக் கொண்டு,



பாதுஷா, சந்திரகலா, சூரியகலா போன்ற இனிப்புகள் தயாரிக்கும் போது சோடா, டால்டா இரண்டுடனும் கெட்டியான புளிப்புத் தயிரும் போட்டுப் பிசைந்து விட்டால் பதம் பதமாக மிருதுவாக சர்க்கரைப் பாகில் ஊறி ருசியாக இருக்கும்.

– பிரேமாராவ்





எந்தத் துணிகளையும் (அதாவது வண்ணத் துணிகள்) முதல் தடவை துவைக்கும்போது சோப் போடாமல் அலசி உலர்த்த வேண்டும். அவ்வாறு நனைப்பது உப்பு நீரில் நனைத்து உலர்த்தினால் சாயம் கொட்டாது. ஒவ்வொரு முறையும் வண்ணத் துணிகளை துவைக்கும்போது உப்புக் கலந்த நீரில் நனைத்து சோப்பும் போட்டுத் துவைத்தால் துணிகள் சாயம் போய் பொலிவிழக்காமல் இருக்கும்.

– உஷா ராமதுரை

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

சிறிது நெய்யில் வறுத்து எடுத்து உப்பு காரம் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

இப்போது தயாரித்து வைத்துள்ள ஓமப் பொடி, பூந்தி, மைதா ஃபிளேக்ஸ் (வில்லைகள்) வறுத்த முந்திரி எல்லாம் ஒன்றாகக் கலந்து சிறிதளவு கருவேப்பிலை வறுத்து எடுத்து கலந்து வைத்துக் கொண்டால் - சுவையான மைதா மிக்ஸர் கிடைக்கும். இதில் மேலும் சுவைக்காக ஊறவைத்த உலர்ந்த பட்டாணி, பயறு வகைகள் (காரமணி, பாசிப்பயறு) வெள்ளை கண்டல் கடலை இவற்றைக் காய்ந்து கொண்டிருக்கும் எண்ணெயில் பொரித்து எடுத்து உப்பு, காரம் சேர்த்து தயாரித்து வைத்துள்ள 'மிக்ஸரில் கலந்து வைத்துக் கொள்ள பார்ப்பதற்கும், சுவைப் பதற்கும் மிகவும் சுவையாக இருக்கும். வெள்ளை வெளேரென்று 'மைதா மிக்ஸர்' அல்லது 'ஒயிட் மிக்ஸர்'.

இதே போன்று, நீர் விடாமல் ஆவியில் வேகவைத்து எடுத்து வைத்துக் கொண்ட மைதா மாவில் முறுக்கு செய்யும் போது, அரை கிலோ மைதா மாவிற்கு 100 கிராம் அளவு பொட்டுக் கடலை மாவு சேர்த்து எள், ஓமம் சேர்த்து உப்பு சேர்த்து பிசைந்து முறுக்கு (மூள்) அச்சில் வைத்து முறுக்கு பிழிந்தால் சுவை யான மைதா முறுக்கு கிடைக்கும்.

இதே மைதா மாவில் பெருங்கா யம் சிறிது, உப்பு தேவை யான அளவு சேர்த்து தேன்குழல் அச்சில் பிழிந்தும் தேன்குழல் செய்யலாம்.

ஆவியில் வெந்த மைதா மாவு டன் அரை கிலோ மாவுடன் 50 கிராம் அளவு அரிசி மாவு, அதே 50 கிராம் அளவு பொட்டுக் கடலை மாவு, உப்பு, மிளகாய்ப் பொடி சேர்த்து கெட்டியாக பிசைந்து அதனுடன், சிறிதளவு பொட்டுக் கடலை, தோல் நீக்கிய வேர்க்கடலை எல்லாம் சேர்த்துப் பிசைந்து தட்டையாகத் தட்டி எண் ணெயில் பொரித்து எடுத்தால் சுவையான 'தட்டை' கிடைக்கும்.

– கி. பூங்கோதை, சென்னை - 78.



## பதிர்பேணி

*தேவையானவை:*
மைதா மாவு ½ கிலோ
வெண்ணெய் - 200 கிராம்,
அரிசி மாவு - 100 கிராம்,
சர்க்கரை - 150 கிராம்,
ஏலக்காய் - 10.

*செய்யும் முறை*

மைதா மாவை சலித்துக் கொண்டு, கொஞ்சம் டால்டாவை நல்ல சூடாக்கி அதில் விட்டு நன்றாகத் தேய்க்கவும். பிறகு சப்பாத் திக்குப் பிசைவது போல் பிசைந்து ஒரு மணி ஊறவைக்கவும். வெண்ணெயை அரிசி மாவில்விட்டு இரண்டும் நன்றாகக் கலந்து எடுத்து வைக்கவும்.

பிறகு பிசைந்து வைத்திருக்கிற மாவில் 4 சப்பாத்திகள் செய்து கொள்ளவும். வெண் ணெயும் மாவும் 'மிக்ஸ்' ஆனதை எடுத்துக் கொண்டு ஒன்றின்மேல் ஒன்றாக நான்கு சப்பாத்திகளிலும் நன்கு தடவவும். அழுத்தி நன்றாக நான்கையும் சுருட்டி, கத்தியினால் நான்கு அல்லது ஐந்தாக வெட்டவும். பிறகு கத்தியினால் துண்டு செய்த பக்கம் மாவை

திருப்பி வைத்து பூரி அளவுக்கு இட்டு திரான மாக டால்டாவை சூடு செய்தபின் போட்டு எடுக்கவும். ஏலக்காய்கள், சர்க்கரை இரண்டையும் நைஸாக பொடி செய்து பொரித்து எடுத்த பேணியில் இரு பக்கமும் நன்கு தூவவும்.

சுவை மிக்க இதை கண்ட காய்ந்த பாலில் போட்டும் சாப்பிட்டால் இன்னும் ருசியாக இருக்கும்.

கவனமாக, துண்டமாக்கிய பக்கம் மாவை திருப்பிக் கொண்டு இட்டால்தான் பதிர் பதிராக வரும்.

– லக்ஷ்மி ராகவன்,
பம்பாய் - 77.

## சுருள் போளி

*தேவையான பொருட்கள்:*
மைதா - 2 கப்,
சீனி - 1½ கப்,
பொட்டுக்கடலை - 1 கப்,
ஏலக்காய் - 7 (தேவையானவை)
எண்ணெய் பொரிக்க போதுமான அளவு.

*செய்முறை :*

முதலில் மைதாவை சலித்து சிறிது உப்பு கலந்த நீர் விட்டு சப்பாத்தி மாவு போல பிசையவும். 1 மணி நேரம் மூடி வைக்கவும். சீனியையும், பொட்டுக்கடலையையும் தனித் தனியே மிக்ஸியில் பொடித்து, சலித்து ஸ்பூனால் நன்கு கலக்கவும். (3:1) மைதாவை எலுமிச்சையளவு உருண்டைகளாக்கி சிறிது மாவைத் தொட்டு மெல்லியதாக வட்டமாக, சப்பாத்தி அளவுக்கு இடவும். நான்கு நான்காக இடவும். காயவிடக் கூடாது. 4 அப்பளங்களையும் ஒவ்வொன்றாக எண்ணெ வைக் காய வைத்து போட்டு, ஒருமுறை திருப்பி விட்டு உடனே எடுத்து பொட்டுக் கடலை சனட குறுக்குவாட்டில் ஸ்பூனால் நீளமாக வைத்து சுருட்டவும். பேப்பரில் வைத்து நன்கு ஆறிய பின் டப்பாவில் வைக்க வேண்டும். அப்பளம் ஒரே சீராக இட வேண்டும். நடுவில் மிக மெல்லியதாக இருந்தால் பொரித்தவுடன் சுருட்டும்போது உடைந்து விடும். 10



நாட்கள் வரை சுவை கெடாமல் இருக்கும்.

– ஏ. சசிகலா, குஜராத்.

## காரம்
## – ரே – இன் – ஓன்

*தேவையான பொருட்கள்:*
புழுங்கலரிசி - 2 ஆழாக்கு,
கடலை மாவு - ½ ஆழாக்கு,
பொட்டுக்கடலை - ½ ஆழாக்கு,
வெண்ணெய் (அ) டால்டா - 25 கிராம்,
இஞ்சி - 1 துண்டு,
பூண்டு - 6 பற்கள்,
பச்சை மிளகாய் - 10
கொத்துமல்லித் தழை - சிறிது,
பெருங்காயம் - 1 துண்டு,
எள் - 1 டீஸ்பூன்,
சீரகம் - 1 டீஸ்பூன்,
உப்பு - தேவையான அளவு,
பொரிக்க எண்ணெய் - 200 கிராம்

*செய்முறை:*

புழுங்கலரிசியை ஊறவைத்து கழுவி மிக்ஸி (அ) கிரைண்டரில் நைஸாக, கெட்டியாக அரைத்தெடுக்கவும். அரிசி மாவுடன், கடலை மாவு, பொட்டுக்கடலை மாவு, வெண்ணெய், உப்பு சேர்த்து பிசைந்து இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் கொள்ளவும்.

இஞ்சி, பூண்டு, மிளகாய், கொத்துமல்லித் தழை ஆகியவற்றை மிக்ஸியில் நைஸாக அரைத்து ஒரு பாதி மாவுடன் கலக்கவும். பூண்டு வாசனை பிடிக்காதவர்கள், அதற்குப் பதில் பெருங்காயம் சேர்த்துக் கொள்ளலாம். வாணலியில் எண்ணெய் விட்டு காய்ந்ததும் நாடா முறுக்கு அச்சில் போட்டு பிழியவும். பொன்னிறமாக வெந்ததும் அரித்தெடுக்கவும்.

மறுபாதி மாவுடன், பெருங்காயத் தூள், எள், சீரகம் சேர்த்து பிசைந்து மாவை முள்ளு முறுக்கு அச்சில் போட்டு எண்ணெய் காய்ந்ததும் பிழியவும். பொன்னிறமாக வெந்ததும் எடுக்கவும். இந்த இரண்டு காரங்களும் கரகரப்பாக, வாசனையாக வாயில் போட்டதும் கரையும்.

– பி. நளினாதேவி,
திண்டுக்கல்-1.



**மிக்சர் சில சமயம் உப்பு வேறு காரம் வேறு என்று ஒன்றுக்கொன்று ஒட்டாமல் தாமரை இலை நீர் என நிற்கும். உப்பு, காரம், வேர்க்கடலை, அவல், பொட்டுக்கடலையுடன் சேர்த்து ஒத்தாற் போல் இருக்க 2 ஸ்பூன் எண்ணெயைச் சேர்த்துப் பிசிறுங்கள். உப்பு, காரம் கலந்து நன்றாக இருக்கும் மிக்சர்.**

**— லக்ஷ்மி ஸ்ரீநிவாசன்.**

---

வாளை 'வாங்கோ, போங்கோ'ங்கறோம். புருஷனை மரியாதையாக் கூப்பிட்டா என்ன குறைஞ்சு போயிடும்!"

"ஏன் ஆன்ட்டீ.. எங்க மாமியார் ஏதாவது சொன்னாங்களா?"

"சேச்சே.. ஏதோ மனசுல பட்டது. சொன்னேன்.. சந்திரனுக்குக் கிரகணம் மாதிரி.. உனக்கெதுக்கு இந்த கறைன்னு நெனைச்சேன்.. அதைவிடு. என் குழந்தைகள் என்னை நீ, வா, போங்கறா.. அது எப்படி வந்தது? என் கணவர், மாமியார், மாமனார், நாத்தனார் எல்லாரும் என்னைக் கூப்பிட்ட பழக்கம். உங்க வீட்டிலே மச்சினர்கள் சின்ன நாத்தனார்கள் எல்லாரும் உங்க மாமியாரை 'வாங்கோ, தரேளா'ன்னு மரியாதையாப் பேசின பழக்கம். சரூ, முகேஷ், சுரேஷ் எல்லாரும் கோமுவை அப்படியே கூப்பிடறா.. நாளைக்கு உன் குழந்தைகள் முகேஷை ஒருமையாய் அழைத்தால் அதுவும் விசேஷங்களில் உனக்குத் தலைகுனிவாய் இருக்காதா? 'நீ மட்டும் கூப்பிடலாமா'ன்னு குழந்தைகள் மழலையில் கேட்கும் போது நீ தடுமாற மாட்டியா? முள் செடிகளை முளையிலேயே கிள்ளுவது நல்லது. கோமு சரூவிடம் 'உங்கண்ணாவைக் கூப்பிடு' என்று சொல்லியிருந்தால் சரூவுக்குக் கூட முகேஷைப் பெயர் சொல்லிக் கூப்பிடும் பழக்கம் வந்திருக்காது.

"முகேஷைக் கூப்பிடு.. டேய், முகேஷ்.." என்ற கோமுவின் பழக்கம் சரூவிடம் ஒட்டிக் கொண்டு விட்டது. 'தொட்டில் பழக்கம்..' என்று தெரியாமலா சொல்கிறார்கள். நான் வரேன் ஸ்வேதா.. கதையை சுவாரஸ்யமாக் கேட்கிறவங்களுக்கு நாம ரொம்ப இடைஞ்சல் பண்றோம். நான் வரேன்" நான் விடைபெற்றுக் கொண்டேன். •

ஸ்வேதா மாறி விடுவாள் என்று அப்போதே தெரியும். ஆனாலும் கோமு வந்து, 'என்ன மாயமோ!' என்று பெருமைப் பட்டுக் கொண்டபோது, 'நல்ல சமூக சேவை' என்று எனக்கே முதுகு தட்டிக் கொண்டேன்.

இதைப் போல் நேரம் காலம் பார்த்து அவரவர் வீட்டிலுள்ள பெரியவர்களே செய்யக் கூடாதா?

இந்தக் கேள்விக்கு பதில் ஒரு இளைய சமுதாயப் பெண் சொன்னாள்.

"அவர்கள் டீவியின் எல்லாச் சானலிலும் நெளிவாகப் பொருந்தி இருக்கிறார்கள்! புராணம் படிக்க ஏது நேரம்? எங்களோடு பேசத்தான் பேரக் குழந்தைகளைச் சமாளிக்கத்தான் ஏது நேரம்!"

அன்றைக்கு கோமு வரும்போதே, "சமாசாரம் தெரியுமோ" என்றபடிதான் வந்தாள்.

"சொன்னால் தெரிஞ்சுக்கறேன்; முதல்லே உட்காரு" என்று ஃபேனைப் போட்டு விட்டு சோபாவில் உட்கார்ந்தேன்.

கோமுவின் மூத்த பெண் சரூவைக் கொடுத்த இடத்தில் மாமியார், நாத்தனார்கள் பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். சரூ கஷ்டப்பட்டாலும் வெட்டிக் கொள்ள வில்லை. சமீபத்தில் சரூவின் மச்சினனுக்குக் கல்யாணம் நடந்தது.

குடும்பத்தில் ஆண்கள் சாப்பிடாமல் குக்கர் திறக்கக் கூடாது. சூடு ஆறிவிடுமாம்.

'உண்டிச் சுருங்குதல் பெண்டிர்க்கழகு' சிரித்துக் கொண்டே சொல்வாள், சரூவின் மாமியார். 'கொடி இடை' எப்படிக் கிடைக்கும்?' இடை உடுக்காவிட்டா அண்ணாவுக்குப் பிடிக்காது; கொஞ்ச நாளில் பழக்கமாயிடும்' என்பாளாம் நாத்தி. பாவம்.. சுதந்திரமாய் வளர்ந்த பெண்..

அப்போதெல்லாம் சொல்வேன்:

"பொறுத்துக்கோ சரூ.. காலம் இப்படியே போகாது! சினிமாவிலெல்லாம் பார்க்கறமே.. வில்லி மாதிரி ஒருத்தி வருவா பாரு.. இவா கொட்டத்தை அடக்க" என்பேன்.

கடைசியிலே வந்தே விட்டாளா.. நான் ஆர்வத்தோடு கோமு முகத்தைப் பார்க்க, "சரூ மச்சினன் சங்கரன் இருக்கானே! மகா சமர்த்து" என்ற பீடிகையோடு தொடங்கினாள்.

"முன்னாலேயே மாற்றலுக்கு அப்ளை பண்ணி கல்யாணமாய் ஒரு மாசத்துலே திருச்சி போயிட்டான். இங்கே அப்பா வீடு.. அங்கே அவன் வீடாச்சே.. பிள்ளையோட இருக்கணும்னு அப்பா அம்மா போயிருக்கா.. ஆனா ஒண்ணு.. அவனும் வேலை பார்க்க

# மனநிறைவு தரும் சமூக சேவை!



அமைதியான குடும்பம். வசதியான சூழ்நிலை. நல்ல பதவியினை வகிக்கும் கணவரின் அந்தஸ்து. செல்வம் ஆகிய பிள்ளைகளைக் கொண்டால் அநேக பெண்மணிகள் வாழ்வின் அனைத்து சுகங்களும் கிடைத்து விட்டன என்று பெருமிதமாக நடந்து கொள்வதே சகஜம். ஆனால் இவற்றிற்கு அப்பால் ஏழை பொது மக்களுக்குக் கிடைக்க வேண்டிய சில அன்றாடத் தேவைகளுக்காகப் பாடுபடுவதில் கிடைக்கும் சுகமும், நிம்மதியும் இவற்றிற்கும் மேல் நிறைவைத் தருகின்றன என்கிறார் திருமதி. ஜெயா ராமகிருஷ்ணன். திருமதி. சரோஜினி வரதப்பாவின் தலைமையில் இயங்கி வரும் விமன்ஸ் இந்தியன் அசோசியேஷனில் பொருளாளராக பதவி வகிக்கிறார் இவர்.

திருச்சியில் பி.ஹெச்.இ.எல். கம்பெனியில் மெடீரியல்ஸ் மேனேஜராக ராமகிருஷ்ணன் பணிபுரிந்து கொண்டிருந்த சமயத்தில் திருச்சி அருகே உள்ள மன்னார்புரம் என்ற கிராமத்தில் உள்ள கண் பார்வை இழந்தோரின் மறுவாழ்வு நிலையத்திற்கு தீபாவளி இனிப்புகளை வழங்கச் சென்ற ஜெயாவிற்கு அவர்களது நிலைமையைக் கண்டு மனம் வருந்தியது. இவர்களுக்கு ஏதேனும் செய்ய வேண்டுமென்ற உந்துதலில் பி.ஹெச்.இ.எல். மகளிர் சங்கம் மூலம் உள்பாவாடைகள் தைத்து விற்க ஏற்பாடு செய்தார். பிறகு சில காலத்தில் ராமகிருஷ்ணன் எக்சிக்யூடிவ் டைரக்டரானதும், 'அறிவாலயம்' என்ற மனவளர்ச்சி குன்றியவர்களின் மையம் ஜெயாவின் தலைமைப் பொறுப்பிற்குக் கைமாறியது. பத்து வருடங்களாக இம் மையத்தில் உள்ள குழந்தைகளின் நலனுக்காக பாடுபட்டார். பி.ஹெச்.இ.எல். போன்ற பெரிய அலுவலகத்தில் உள்ள கணக்கிலடங்காத எண்ணிக்கையில் உள்ள தொலைபேசிகளை சுத்தம் செய்யும் பொறுப்பின் ஒரு பகுதியை மனவளர்ச்சி குன்றிய சிறுவர்களைக் கொண்டு செய்யச் செய்தார் ஜெயா. முதலில் இது சாத்தியமா எனக் கேலி செய்தவர்கள் கூட பிறகு வியக்கும்வண்ணம், அக் குழந்தைகளுக்கு பயிற்சி அளித்து பணி செய்யத் தூண்டியதால், அவர்களின் பெற்றோர்களுக்கு மிக மகிழ்வைத் தந்தது.

கணவரின் வேலை நிமித்தம் புதுதில்லிக்கு மாற்றலாகி சென்றதும், அந்த ஊரிலும் மனவளர்ச்சி குறைந்த குழந்தைகளுக்கு உதவ முயன்ற போது, அங்கு உள்ள சூழ்நிலைகள் மனத்திற்கு நிறைவைத் தரவில்லை. அப்போது முப்பது முதல் நாற்பது தமிழ் பெண்மணிகள் இணைந்து 'வெல்வெட் சாரிடி கிளப்' என்ற சங்கத்தைத் தொடங்கினர். இச் சங்கம் மூலமே பொருளாதார அடிப்படையில் பின்தங்கிய குழந்தைகளின் படிப்பு, ஆரோக்கியம் முதலியவற்றைக் கவனிக்கத் தொடங்கினர். தொழுநோயால் பாதிக்கப்பட்டோர், கால் இழந்தோர் போன்றவர்களுக்குத் தேவையான சக்கர நாற்காலி, ஊன்றுகோல்கள் போன்றவற்றை பதவியில் இருந்த பாராளுமன்ற உறுப்பினர்களின் உதவியோடு வாங்கித் தந்தார்.

திடீரென ஒருநாள் ராஷ்டிரபதி பவனில் இருந்து தொலைபேசி மூலம் அழைப்பு வந்தது. அப்போது ஜனாதிபதியாக இருந்த திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்களின் மகள் திருமதி. பத்மா இவரின் பொது சேவைகளைக் கேள்விப்பட்டு, இவருடன் இணைந்து புது தில்லியிலிருந்து சற்று தொலைவில் உள்ள ஷாதரா என்ற இடத்தில் உள்ள பிச்சைக்காரர்கள் மறுவாழ்வு நிலையத்தில் உள்ள தொழுநோயாளிகளுக்கு உதவ திட்டமிட்டிருந்தார். இருவரும் இணைந்து ஒரு குழந்தைகள் காப்பகத்தை இவ்விடத்தில் தொடங்கினார்கள். பெரியவர்களை மெழுகுவர்த்திகளை உற்பத்தி செய்து பணம் ஈட்ட ஊக்குவித்தனர்.

இன்றும் தொடர்ந்து நடக்கும் இந்த சிறுதொழிலில் செய்யப்படும் மெழுகுவர்த்திகளை ஐந்து நட்சத்திர ஹோட்டல்களுக்கு விற்பனை செய்கின்றனர்.

புதுடில்லியில் இருந்து சென்னைக்கு மாற்றலானதும் தொடர்ந்து பொது சேவை செய்யும் ஆவலில் ஜெயா, சரோஜினி வரதப்பனை அணுகினார். உடனே ஸ்ரீநிவாஸ காந்தி நிலையத்தின் ஒரு அங்கத்தினராக சேர்த்துக் கொள்ளப்பட்டார். இந்தியாவின் ஜனத்தொகை ப்ராஜெக்டின் (Indian Population Project-V) தலைவி திடீரென காலமடைந்து விட்டதால் அப் பொறுப்பும் இவருக்குத் தரப்பட்டது. இதன் மூலம் ஏழு முதல் எட்டு குடிசை வாரியங்களுக்கு வீட்டுக்கு வீடு சென்று குடும்பக் கட்டுப்பாட்டை பிரசாரம் செய்து, தடுப்பூசிகளை சரிவர போட்டுக் கொள்ளச் செய்யும் பொறுப்பு இவரது தலைமையில் இயங்கத் தொடங்கிற்று. அங்குள்ள பத்தாம் வகுப்பு வரை படித்த பெண்களுக்கு இவரது துணையால், சாந்தி தியேட்டர் அருகில் உள்ள Tamilnadu advanced Technical Training -ல் சேர அனுமதி கிடைத்தது. இவர்களின் பொருளாதார வசதிக் குறைவினால் இவர்களுக்கு 50 சதவிகித தள்ளுபடி கட்டணத்தில் இடம்தரப்பட்டது. அதிலும் பாதித் தொகையை ரோட்டரி சங்கங்கள் மூலம் ஜெயா இவர்களுக்கு வாங்கித் தரவே, இப் பெண்கள் ரூ 1800/- கட்ட வேண்டிய இடத்தில் ரூ 450/- கட்டி தொழிற்கல்வி கற்று வெளியேறியுள்ளனர்.

சென்னையில் இந்திரா நகரில் உள்ள மது அருந்தியவர்களின் புனர்வாழ்வு நிலையத்துடன் தொடர்பு கொண்டு குடிசைப் பகுதிகளுக்குச் சென்று மது அருந்துவதில் ஏற்படும் தீமைகளை எடுத்துரைக்கிறார். இதனால் பயன் அடைந்தவர்களையே பேசச் சொல்லி, பலரை மதுப்பழக்கத்தில் இருந்து விடுவிக்க வேண்டுமென்பதே இவரது ஆவல். கையில் காசு அல்லது பழைய பொருட்களைக் கொடுத்து உதவி செய்வதால் அவர்கள் நிலை முன்னேற்றமடையாது. நல்ல வேலைகளில் அவர்களை ஈடுபடுத்தி பொருள் ஈட்ட முற்படுத்த வேண்டும் என்பதே இவரது கொள்கை. இந்த அடிப்படையில் குடிசையில் உள்ள பெண்மணிகளைக் கொண்டு பினாயில் தயாரிக்கும் பயிற்சியைக் கற்று தந்து, தயாரித்து பள்ளிகளுக்கு விற்பனை செய்கிறார்.

அம்முறையில், சென்னை பி.எஸ். சீனியர் செகண்டரி பள்ளியின் தலைமை ஆசிரியை திருமதி. அலமேலுவை சந்தித்தபோது, அவரது மற்றொரு பள்ளி பெரும்பாக்கம் என்ற கிராமத்தில் இயங்குவது தெரியவந்தது. அவரது உதவியுடன் இக்கிராமத்தில் உள்ள பெண்மணிகளுக்கும் உதவுகிறார். உணவு என்பது சத்தானதாக இருக்க வேண்டுமென்பதை கிராம மக்களுக்கு எளிய வகையில் எடுத்துரைக்க, சமையல் போட்டி, பேச்சுப் போட்டி, ஆரோக்கியமான குழந்தையைத் தேர்ந்தெடுக்கும் போட்டி ஆகியவற்றை, Food and nutrition board-ன் உதவியுடன் நடத்தியுள்ளார். கனரா வங்கியின் துணையுடன் இவர்களது சிறுதொழில்களுக்குப் பொருளுதவி செய்ய முற்பட்டுள்ளார். இவை அனைத்தையும் தனிப்பட்ட முறையில் ஆருத்ரா என்ற டிரஸ்ட் அமைத்து நடத்துகிறார். செஞ்சிலுவை சங்கத்திலும் உறுப்பினராகி அவர்களுக்கும் உதவி செய்கிறார்.

இதைத் தவிர (Women's Indian association) சங்கத்தின் ஐம்பது குழந்தைகளின் காப்பகங்களில் முப்பது இவரது தலைமை மேற்பார்வையில் இயங்குகிறது. நூறு இடங்களில் பள்ளி சாரா கல்வி நிலையங்களும், வேலைக்குச் செல்லும் பெண்களின் ஹாஸ்டல் ஒன்றும் இவரது மேற்பார்வையில் இயங்குகின்றன.

பொதுநல சேவையில் வாழ்வின் பெரும் பகுதியைச் செலவிடும் திருமதி. ஜெயா ராமகிருஷ்ணன் தன்னைப் போல் பல முதிய பெண்மணிகளை அங்கத்தினர்களாகக் கொண்ட W.I.A. சங்கத்தில் இளையசமுதாயத்தினர் பங்குகொள்ளாதிருப்பதற்காக மனம் வருந்துகிறார்.

"இன்று அரசாங்கத்தில் இத்தகைய சங்கங்களுக்கு, பொதுநல சேவைக்கு அளிக்கும் மான்யம் மிகக் குறைவே. அதனால் இதில் சேவை செய்வோர்க்குப் பொருளுதவியோ, சம்பளமோ தர இயலவில்லை. இதனால் இளைய சமுதாயத்தினர் அங்கத்தினராக சேர்ந்தாலும், கௌரவ பணியாளர்களாக தொடர்ந்து செய்ய இயலாமல் போய்விடுகிறது. இந்நிலை மாற அரசாங்கம் மான்யத்தை உயர்த்தித் தர வேண்டும். திருமதி. சரோஜினி வரதப்பனின் நேர்மையையும் சேவையையும் கண்டு எங்களை ஆதரிப்பவர்கள் பலர். இவற்றைப் புரிந்து கொண்டு சங்கத்திற்கு உழைக்க இளையசமுதாயத்தினர் முன்வர வேண்டும்" என்கிறார் திருமதி. ஜெயா ராமகிருஷ்ணன்.

பேட்டி : **ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்**

படம் : **ராஜு நாராயணன்**

**செய்து முடிக்கப்பட்ட மாபெரும் சாதனைகள் அனைத்தும் செய்ய முடியாதவைகள் என்று முதலில் பலரால் நிராகரிக்கப்பட்டவைகள்தான். – கார்லைல். தகவல் : கு. சாந்தி**

**மங்கையர்மலர் & ஜெய்மாஹரி மேரேஜ் சர்வீஸஸ் இணைந்து வழங்கும்....**

# மறக்க முடியாத திருமணம்

என் திருமணம் 1951ஆம் ஆண்டு மே மாதம் 19 அன்று சென்னையில் நடப்பதாக இருந்தது. நாங்கள் கல்கத்தாவில் வசித்து வந்தோம். அங்கிருந்து நாங்கள் என் கல்யாணத்திற்காக மே 10 அன்று கிளம்பினோம். கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு ரயிலில் பயணம் செய்யும்பொழுது வால்டேர் ஸ்டேஷன் வரும். வண்டி அங்கு நின்றபொழுது நிறைய பிரயாணிகள் நாங்கள் பிரயாணம் செய்யும் ஏ.ஸி. வகுப்பில் ஏறினர். திரும்பிப் பார்த்தால் எங்கள் எல்லாருக்கும் ஆச்சரியம். காரணம் அங்கு வந்தது திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமியும் அவரது கணவர் திரு சதாசிவமும், மற்றும் சிலருடன் வந்தனர். எங்கள் எதிரே உட்கார்ந்தனர். அவர்கள் அங்கு ஒரு கச்சேரிக்கு வந்திருந்ததாகவும், சென்னை திரும்புவதாகவும் கூறினர். எங்களுடன் ஒரு முழு நாள் ஒரு பந்தாவும் இல்லாமல் வெகு நாட்களாக எங்களுக்குத் தெரிந்தவர்கள் போல எங்களுடன் பேசிக் கொண்டும், நாங்கள் எடுத்துச் சென்ற சாப்பாட்டை மிகவும் ருசித்துச் சாப்பிட்டும் வந்தனர்.

நாங்கள் ஊருக்குப் போகும் காரணம் கூறி, அவர்களுக்குத் திருமணத்திற்கு அழைப்பு விடுத்தோம். அவர்களும் மிகவும் சந்தோஷப்பட்டு கல்யாணத்திற்கு நிச்சயம் வருவதாக வாக்குக் கொடுத்தனர். சென்னை சென்ட்ரலில் இறங்கியதும் (மறுநாள்) என்னிடம் உன் கணவர் எப்படி இருக்கிறார் என்று பார்ப்பதற்காகவே நிச்சயம் வருவேன் என்று கூறினார். நான் பரவசமானேன். இதன்பிறகு கல்யாண ஏற்பாட்டில் எல்லாம் மறந்து போனோம். கல்யாண நாளும் வந்தது. முகூர்த்த நேரம் சரியாக தாலி கட்டும் நேரம் ஒரே சலசலப்பு. ஏனெனில் அங்கு வந்து இறங்கியது திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமியும் அவர் கணவர் திரு. சதாசிவமும். எல்லோருக்கும் ஆச்சரியம் எங்களுக்கோ இன்ப அதிர்ச்சி. பெண் தரப்பினர், பையன் வீட்டுக்கார உறவினர்களோ என்று வியக்க, பையன் தரப்பினர், பெண் வீட்டுக்கு மிகவும் தெரிந்தவர்களோ என்று நினைக்க எல்லாரும் என்னையும் என் தாய் தந்தையையும் மொய்த்துக் கொண்டனர். அந்த நேரம் என் வாழ்க்கையில் மறக்க முடியாத நேரம். தான் ஒரு கச்சேரிக்கு போய்க் கொண்டு இருப்பதாகவும் வழியில் என்னைப் பார்க்க வந்ததாகவும் கூறி ஐந்து நிமிடங்கள் இருந்தார்.



பரிசளிப்பவர் - ஜெயராமன், ஜெய்மாஹரியின் சகோதரி லலிதா வெங்கடாசலம்

என் கணவரைப் பார்த்து, "உனக்கு ஏத்த மாப்பிள்ளையாக இருக்கிறார். வாழ்வில் நீ எல்லா நிறைவும் பெற்று வாழ்வாயாக" என்று என்னை ஆசீர்வதித்தார். நான் அவருடன் எடுத்துக் கொண்ட போட்டோவும், வீடியோ காஸெட்டும் என் வாழ்வின் மிகப் பெரிய அன்பளிப்பாக போற்றிக் காக்கிறேன். அவருடைய ஆசீர்வாதம் தான் எனக்குக் கிடைத்த மிகப் பெரிய வரப் பிரசாதம். இதுதான் என் வாழ்க்கையில் மறக்க முடியாத திருமணம் - என்னுடைய திருமணம்.

— சாவித்ரி விஸ்வநாதன், மும்பை.

# சக்தி சோயா பைட்

## அனைவருக்கும் இன்றியமையாதது

## ஏனெனில் இதில் 50% புரதச்சத்து உள்ளது

சோயாவில் இருக்கும்
முழுமையான புரதம், விட்டமின்
மற்றும் மினரல் சக்திகளை
இழக்காமல் எக்ஸ்ட்ரூசன்
முறையில் தயாரிக்கப்படும்
சோயா உருண்டைகள்தான்
சக்தி சோயா பைட்.
சக்தி சோயா பைட் கொழுப்பு
சத்து அற்றது. உடலின்
கொலஸ்டிரால் அளவை
கட்டுப்படுத்த வல்லது.




200 கிராம்
பாக்கெட்
ரூ 22.00
மட்டுமே

**சக்தி சோயாஸ்**

(சக்தி சுகர்ஸ் லிமிடெட்டின் அங்கம்)

180, ரேஸ்கோர்ஸ், கோயமுத்தூர் 641 018. போன்: 214421, 214422 டெலக்ஸ்: 27328.

உலகத்திலேயே அதிக புரதச்சத்துள்ள உணவு



பெண்கள் இன்று பல துறைகளிலும் முன்னேறி விட்டார்கள். பைலட்டில் இருந்து Sea - Going Warship வரைக்கும் இன்று பெண்கள் உலகமாக மாறி வருகிறது. விளையாட்டுத் துறையில் பெண்கள் கொத்தடிமைகளாக கட்டாயமாக உறுதியாக இல்லை என்பது முற்றிலும் உண்மை. மற்ற எந்தத் துறையில் இருப்பவர்களைக் காட்டிலும் பெண் வீராங்கனைகள் சுதந்திரமாகவும், சமுதாயத்தின் முழு ஒத்துழைப்புடன் வெற்றி நடை போட்டு வருகின்றார்கள். இன்று வேலைக்குச் செல்லும் அனைத்து தரப்பு பெண்களுக்கு உண்டாகும் சிறு சிறு பிரச்சனைகள் இவர்களுக்கு இல்லை என்றே கூறலாம்.

விளையாட்டுத் துறையில் பெண்கள் மிக நன்றாக நடத்தப்படுகின்றார்கள் என்பதுதான் சரி. இத்துறையில் வேறு வேறு விளையாட்டுப் போட்டிகளில் பங்கேற்கும் பெண் வீராங்கனைகளிடம் கருத்து கேட்ட பொழுது, ஸ்போர்ட்ஸில் பெண்கள் என்பதால் தனிச் சலுகைகள் கிடையாது. பயிற்சியும் ஆண் வீரர்களுடனேயே கடுமையாக செய்கிறோம். ஆண்களுக்குக் கிடைக்கும் பயிற்சிப் பளு (Training Load) எந்தக் காரணத்தைக் கொண்டும் பெண்களுக்காகக் குறைக்கப்படுவதில்லை. அதே போல பயிற்சி முகாம்களில் (Coaching camps) ஆண், பெண் இருபாலருக்கும் சரிசமமான சலுகைகளை அரசாங்கம் அளிக்கிறது.



நம் நாட்டில் குறிப்பாக பெண்கள் விளையாட்டுத் துறையில் சந்திக்கும் மிக முக்கியமான பிரச்சனை, அவர்கள் உடுத்தும் விளையாட்டு ஆடைகள் (Sports wear) ஆகும். கோலாகலமாகக் கொண்டாடும் இந்த 50 வது சுதந்திர ஆண்டில் எத்தனையோ சாதனைகளை நாம் நிகழ்த்திக் கொண்டிருந்தாலும், வட இந்திய மாநிலங்களில் உள்ள பெண்களை விட நம் தென்னிந்திய சமூகத்திலேயே பெண்கள் Shorts, Mini skirts அணிந்து விளையாடச் செல்வதை மக்கள், குறிப்பாக பெண்களே அதை ஆதரிப்பது இல்லை என்பது வேதனைக்குரிய விஷயம். விளையாட்டுத் துறையில் என் கணவர் இருந்தும் என் இரு பெண் குழந்தைகள் விளையாடச் செல்லும் போது துவக்கத்தில், பெண் குழந்தைகள் கால் தெரிவது போல உடையும், முடி ஒட்ட வெட்டிக் கொண்டும் நடப்பதா என்று பலர் என் குழந்தைகளைப் பார்த்து கேலி செய்துள்ளார்கள். ஆரம்பத்தில் குழந்தைகளுக்கு இது கஷ்டமாக இருக்கும். ஆனால் பெற்றோர்களாகிய நாம்தான் அவர்களை உற்சாகப்படுத்த

# விளையாட்டுத் துறையில்



வேண்டும். எந்த விளையாட்டை விளையாடுகிறோமோ அந்தந்த விளையாட்டுக்கேற்ப உடை அணிவது மிக முக்கியம். குறைவாக முடிவைத்துக் கொள்வது பெண் வீராங்கனைகளுக்கு வசதியாக இருக்கும்.

அடுத்து மக்களிடையே உள்ள மற்றுமொரு பொதுவான கருத்து: பெண்கள் தொடர்ந்து கடுமையான விளையாட்டுப் பயிற்சியில் ஈடுபடுவதால் அவர்கள் கடுமையான தோற்றமுடையவர்களாக இருப்பார்கள் என்பது. இதை முற்றிலும் ஏற்றுக் கொள்ள முடியாது. பல வருடங்களாக கடும் பயிற்சியை மேற்கொண்டு இன்று ஆசிய மற்றும் உலக அளவில் இந்தியாவின் புகழ் நாட்டும் இந்தியப் பெண் வீராங்கனைகள், மற்ற சாதாரணப் பெண்களைப் போலவே இருக்கின்றார்கள். உதாரணமாக ஷைனி வில்சன், நிருபமா வைத்தியநாதன், அமுதா என குறிப்பிடலாம். எனவே விளையாட்டுப் பயிற்சிகளில் தொடர்ந்து கலந்து கொண்டால் பெண்களின் அழகு குறைந்து விடும் என்ற தவறான அனுமானத்தை விட்டுவிட்டு குழந்தைகளை நேரிடையாக விளையாட அனுமதியுங்கள். உலக அளவில் எடுத்துக் கொண்டால், பல விளையாட்டுகளில் பங்கெடுக்கும் வீராங்கனைகளையும், ஏன் இந்தியாவின் கிரிக்கெட், கூடைப்பந்து, கைப்பந்து, நீச்சல், ஹாக்கி, பேட்மிண்டன், டென்னிஸ், டேபிள் டென்னிஸ் போட்டிகளில் கலந்து கொள்ளும் பெண் வீராங்கனைகள் பெண்மைக்குரிய அனைத்து லட்சணங்களோடு இதர பெண்கள் போலவே உள்ளார்கள் என உதாரணத்துடன் கூறிக் கொண்டே போகலாம்.

இனி விளையாட்டுப் பயிற்சியின் போது பெண் குழந்தைகளுக்கு அடி பட்டு விட்டால் பின்னாளில் மிக மிக கஷ்டம் அதனால் பெண்கள் வீட்டுக்குள்ளேயே அமர்ந்து விளையாடினால் போதும் என்று கூறும் தாய்மார்கள் பலர் என்பது நாமறிந்த ஒன்றே. முன்பு பயிற்சிகள் அதிகம் விஞ்ஞான பூர்வமாக இருந்ததில்லை. ஆனால் தற்பொழுது மிகுந்த திறமை வாய்ந்த சிறப்புப் பயிற்சி பெற்ற பயிற்சியாளர்கள் Sports medicine ஐ பற்றி நல்ல அறிவு உள்ளவர்களாக இருப்பதால்

• உமா நடராஜன்



# வீராங்கனைகள்

**Supplement to Mangayar Malar November '97**



விளையாட்டுத் துறையில் Sports injuries வராமல் நல்ல fitness உடன் பயிற்சி அளிக்கின்றார்கள். கடுமையான உழைப்பினாலோ, அல்லது போட்டிகளில் ஏற்படும் சிறு சிறு காயங்கள், தசைகளிலோ, எலும்பு இணைப்புகளிலோ வரும் போது விளையாட்டுத் துறையில் ஸ்பெஷலிஸ்ட் மருத்துவர்களைக் கொண்டு உடனுக்குடன் கவனிக்கப்பட்டு சரி செய்யப்படுகிறது. அதனால் பெற்றோர்கள் தைரியமாக பெண் குழந்தைகளை விளையாட்டுத் துறைக்கு அனுப்பலாம்.

முன்பு விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெறும் வீராங்கனைகளுக்கு, ஆண் வீரர்களைக் காட்டிலும் பரிசுத் தொகை மிகக் குறைவாகவே இருந்து வந்தது. ஆனால் அது தற்போது மாறி பெண்களுக்கும் சரிசமமாக பரிசுத் தொகைகள் ஏறக்குறைய எல்லா விளையாட்டுப் போட்டிகளிலும் வந்து கொண்டிருக்கும் மாற்றம் பெண்களை மேலும் உற்சாகப்படுத்துகிறது. அதே சமயம் இந்தியாவில் இதுவரை பரிசுகள், பணமுடிப்புகள், விருதுகளை முதலியவை பெற்ற விளையாட்டு வீரர்களில் பெண் வீராங்கனைகளே அதிகம் பெற்று உள்ளனர். இதனால் முன்னைக் காட்டிலும் விளையாட்டுத் துறையில் பெண்களின் ஈடுபாடு அதிகமாகிறது என்பது தெரிகிறது. இருப்பினும் மக்கள் தொகையோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது இது மிக மிகக் குறைவே.

கட்டுரையின் மேலே குறிப்பிட்டபடி எந்த ஒரு பழக்க வழக்கமானாலும், சரி அது உணவாகட்டும், உடையாகட்டும், படிப்பாகட்டும், விளையாட்டாகட்டும், இளம்வயது குழந்தைப் பருவத்தில் இருந்தே வாழ்க்கையின் ஒரு அங்கமாக மாற்றிக் கொள்வதால் பிற்காலத்தில் வளர்ந்து வரும் காலகட்டத்தில் அதைக் கூச்சமாகவோ, மற்றவர்களுக்காக பயந்து ஒதுக்கியோ, தள்ளியோ, தாழ்வு மனப்பான்மையோ அடையமாட்டார்கள்.

விளையாட்டுத் துறையில் இந்தியப் பெண்களுக்கு ஒரு ஒளிமயமான எதிர்காலம் காத்திருக்கிறது. எனவே சகோதரிகளே! கொத்தடிமை என்றொரு வார்த்தையே விளையாட்டுத் துறையில் கிடையாது. பெண்களின் துணிவும், கடின உழைப்பும், விடாமுயற்சியும், என்னால் முடியும் என்ற தன்னம்பிக்கையும் இந்தியப் பெண்களை விளையாட்டுத் துறையில் உலக அளவில் வெற்றி நடைபோட உதவும்.

— உமா நாகராஜன்



# என்றும் ஒளிவீசிடும் எழில்மிகு படைப்பு - அது
# என்டைஸ் தரும் தனிச்சிறப்பு





என்டைஸ் தீபாவளி கலெக்ஷன்.
ஒவ்வொன்றும் வண்ணத்தில் நெய்த
வாழ்த்துக் கவிதை. உங்களுக்காக.
உங்கள் குடும்பத்திற்காக.

**10% தள்ளுபடி**
15.09.97 முதல்
29.10.97 வரை

**என்டைஸ்**

சிறந்த துணி ரகங்கள், சரியான விலை

நேஷனல்
டெக்ஸ்டைல்
கார்ப்பொரேஷன்

# உங்கள் குழந்தையின் தனிமையை மதியுங்கள்



ருவர் அறைக்குள் இருந்து, கதவு தாழ்ப்பாள் போடாமல் இருந்தாலும், இன்னொருவர் அந்த அறைக்குள் நுழைவதற்கு முன்னால் கதவைத் தட்டி 'உள்ளே வரலாமா?' என்று கேட்கவேண்டியது இங்கிதம். உள்ளே இருப்பது குழந்தையாக (விவரம்புரியும் வயதுள்ள) இருந்தாலும், 'உள்ளே வரலாமா?' என்று கேட்ட பிறகே நுழைய வேண்டும். இந்த வழக்கம் ஒருவரின் தனிமை மதிக்கப்படுகிறது என்பதைச் சுட்டிக் காட்டுகிறது.

ஒரு குழந்தை திடீரென்று தான் தனித்து விடப்பட வேண்டும் என்பதில் சிரத்தை காட்டி தான் தனியாக இருக்க விரும்புவதாகவும், அறைக்குள் யாரும் வர வேண்டாம் என்றும் சற்றுக் கோபத்துடன் கூறும்போது, பெற்றோருக்கு இது விசித்திரமாகப் படலாம். இச்செய்கை, இயற்கையானது என்பதால் பெற்றோர் கவலைப்பட வேண்டியதில்லை.

குழந்தையைப் பொறுத்தவரையில் தனித்து இருப்பது (Privacy) என்பது, சூட்சுமமான, சிக்கல் நிறைந்த ஒன்றாகும். குறிப்பாக, தற்காலத்தில் குடும்பங்கள், கூட்டுக் குடும்பங்களாக ஃபிளாட்டுகளில் வசிக்கும்போது இது மிகவும் பிரச்னையாகிறது. தாங்கள் நடந்து கொள்ளும் விதங்கள் ஒப்புக் கொள் ளப்படவேண்டும், தமக்கு அதிக சுதந்திரம் வேண்டும் என்ற குழந்தைகளின் தேவைகள் நடுத்தர பெற்றோருக்கு அந்நியமானதாகத் தோன்றலாம். தனக்கு தனிமை வேண்டும் என்று கேட்பது, குழந்தைக்கு "நான் நானேதான் என்று பெற்றோருக்குக் கூறும் ஒரு வழியாக அமைகிறது என்கிறார் குழந்தை வைத்திய நிபுணர் ஒருவர்.

தனிமையை, உணர்ச்சிபூர்வமான தனிமை (Privacy of Feelings), உடல்ரீதியான தனிமை (Bodily Privacy) காலரீதியான தனிமை (Private Time) என்று மூன்று வகையாகப் பிரிக்கலாம். உணர்ச்சிகளுக்கும், எண்ணங்களுக்கும் தனிமை வேண்டும் என்பது தற்காலத்திய கருத்தாகும்.

எல்.கே.ஜி., யு.கே.ஜி. பருவத்தினருக்குக் கூட தனிமை தேவைப்படுகிறது. இப்பருவத்தில், தாங்கள் இரகசியமான விஷயங்களை இரகசியமாக வைத்துக் கொள்ள முடியும் என்பதைப் புரிந்து கொள்கிறார்கள். இரகசியங்களை, இரகசியங்களாக வைத்துக் கொள்ளும் ஆற்றல் தம்மிடம் இருக்கிறது என்று புரிந்து விட்ட நிலையில் தம் நண்பர்களிடம் (அ) பெற்றோரிடம் காதோடு



காதோடு கிசுகிசுப்பதையும் - சங்கேத மொழியைப் பயன்படுத்துவதையும் வழக்கமாகக் கொள்கிறார்கள். குழந்தைகளுக்கு ஐந்து வயதாகி விட்ட நிலையில், தங்கள் உடலை வேறொருவர் பார்க்கக் கூடாது என்ற எண்ணம் தோன்றுகிறது.

மற்றவர்களுக்குத் தனிமை தேவைப்படும் என்பது எல்.கே.ஜி. (அ) யு.கே.ஜி. பருவத்தினரின், ஏன், சற்று வயதான குழந்தைகளின் அறிவுக்கு எட்டாத ஒன்றாகும். தமக்குத் தனிமை தேவைப்படுவது போல, மற்றவருக்கும் தனிமை தேவைப்படும் என்று பெரியவர்கள் புரிந்து கொள்ளக்கூடும். ஆனால் குழந்தையின் சிந்தனை இந்த ரீதியில் ஓடலாம் - 'என் தனிமை எனக்குத் தேவை. அந்த சமயம் என்னைச் சுற்றி இருப்பவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள எனக்கு உரிமை உண்டு' என்ற ரீதியில் குழந்தையின் சிந்தனை ஓடலாம் என்று மனோதத்துவ நிபுணர் ஒருவர் கூறுகிறார். இக்குழந்தைகள் வயது வந்தவர்களாக ஆகும்போது மட்டுமே, மற்றவர்களின் தனிமையை மதிக்கக் கற்றுக் கொள்ள முடியும்.

டீன் ஏஜ் பருவத்தின் ஆரம்ப காலத்தில் தனிமை வேண்டும் என்ற உணர்வு மிக அதிகமாகிறது. டீன் ஏஜினர், தன் புதிய எண்ணங்களைப் பரீட்சித்துப் பார்க்க தனிமை பெரிதும் உதவுகிறது. எடுத்துக்காட்டாக, ஒரு புதிய பாட்டைப் பாடும் போது, புதிய ஹேர்ஸ்டைல் செய்து கொள்ளும்போது, புதிதாக வகுப்பில் சேர்ந்துள்ள மாணவியிடம் எப்படிப் பேசுவது போன்றவற்றை ஒத்திகை பார்க்கும்போது, தம்மை மற்றவர்கள் பார்க்கக் கூடாது என்ற நிலையில் டீன் ஏஜினருக்குத் தனிமை தேவைப் படுகிறது.

குழந்தையின் தனிமையை மதிப்பதால், குழந்தையைப் பற்றிய எல்லா விஷயங்களையும் பெற்றோர் அறிந்து கொள்ள முடியாது என்பதாக அர்த்தமில்லை. குழந்தைக்கு வேண்டிய தனிமையை பெரியவர்களாகிய நாம் மதித்து அனுமதிக்கவில்லை என்றால் குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் இடையே ஒரு பிணைப்பு ஏற்படாது. எந்தக் குழந்தைகளின் பெற்றோர், தம் குழந்தைகளின் தனிமையை மதிப்பதில்லையோ, அப்படிப்பட்ட குழந்தைகள் போதை மருந்துகளுக்கு அடிமையாகலாம் (அ) வேண்டாத்தகாத உறவு கொள்ளலாம் என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள்.

பெற்றோர்களே, உங்களுக்குச் சில குறிப்புகள் - குழந்தைகள் உட்பட எல்லோரும் சேர்ந்து சாப்பிடுவதை அன்றாட வழக்கமாகக் கொள்ளுங்கள். இது ஒவ்வொருவரும், மற்றவர் என்ன உணர்கிறார்கள், செய்கிறார்கள் என்று அறிந்து கொள்ள மிகவும் உதவியாக இருக்கும். நாம் எங்கு சென்றாலும், பெற்றோரிடம் மீண்டும் வருவதற்கு ஆவலாக இருக்கும் ரீதியில் வீட்டின் சூழல் இருக்குமப்படி பார்த்துக் கொள்வது, பெற்றோரின் பொறுப்பு, கடமையும் கூட. குழந்தைக்கு எந்தெந்த



வழிகளில் தனிமையை அளிக்க முடியும் என்பது பற்றிச் சிந்தியுங்கள். இரண்டு குழந்தைகள், ஒரு படுக்கையறையைப் பகிர்ந்து கொள்ளும் போது, ஒரு குறிப்பிட்ட நேரத்தில், ஒவ்வொரு குழந்தையும், தனிமையாக அப்படுக்கை அறையில் இருக்கக்கூடிய வகையில் சில வழிமுறைகளை ஏற்படுத்திக் கொடுங்கள்.

வயது வந்த ஒரு பெண் (அ) ஆண், எப்போதும் மிக நீண்ட நேரம் தனிமையில் இருக்க வேண்டும் என்று விரும்பினால், இவர்களை, இவர்களுக்குத் தெரியாமல், சற்றுக் கவனமாகக் கண்காணிக்கவும். அவர்களுடைய, நடத்தை, நண்பர்கள் போன்றவற்றில் எந்தவித மாறுதலும் இல்லையென்றால் கவலைப்பட வேண்டாம்.

ஒருவருடைய தனிமையை மற்றவர் மதிப்பது மாசு/கூச்சல்/நெருக்கடி நிறைந்த இந்த உலகில் ஒருவருக்குத் தேவையாகும் இடத்தையும், நேரத்தையும் கொடுக்கவல்லது என்பதை நாம் எல்லோரும் நினைவில் கொள்ள வேண்டும்.

- ராஜி

# கொலைகாரியா? தேவதையா?

உலகின் பல்வேறு நாடுகளில் ஏற்பட்ட புரட்சிகளில் குறிப்பிடத்தக்கவை, ரஷ்யப் புரட்சியும் பிரெஞ்சுப் புரட்சியுமாகும். புகழ்பெற்ற பிரெஞ்சுப் புரட்சி யிலே எழுதப்படாத காவியத் தலைவியாக விளங்கினாள் - ஒரு பெண். 'தேவதை சார்லட்டி' என்று பலராலும் 'கொலைகாரி சார்லட்டி' என்று சிலராலும் அழைக்கப்பட்டாள். பிரான்ஸ் தேசத்து மக்களின் நல்வாழ்வுக்காக உயிர்த் தியாகம் செய்து கில்லட்டனில் ஏறினாள்.

ஒரு ஜூலை மாதத்து வெப்பமான நாள். கேயனிலிருந்து பாரிசுக்குச் செல்ல ஒரு கோச் காத்திருந்தது. அந்தக் கோச் வண்டியில் பாரிஸுக்குச் செல்ல மிக அழகான உயரமான ஒரு பெண் அமர்ந்திருந்தாள். ஒரு இளைஞன் கோச்சின் அருகே வந்தான். அந்த அழகியைப் பார்த்துச் சிரித்தபடியே கூறினான் : "குடியரசு ஆதரவாளர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதை உயர்குடிப் பிறப்பான இந்த அழகி பார்க்கப் போகிறாள் போலிருக்கிறது!"

"பிரெஞ்சுக் குடிமகனே! இன்று என்னை நீ புரிந்து கொள்ளாமல் என்னைப் பற்றித் தவறாக மதிப்பிடுகிறாய். விரைவிலேயே என்னை நீ தெரிந்து கொள்வாய்!" என்றாள் அந்த அழகி முகத்தில் சிரிப்பே இல்லாமல்.

அவள் - அந்த அழகி தான் சார்லட்டி கார்டே. ஒரு பிரபுவின் மகள். ஆனால் அந்தப் பிரபு செல்வந்தரல்ல. நார்மன் குடும்பத்தைச் சேர்ந்தவர். கவலை தோய்ந்த அவள் முகத்தை அவளுடைய புன்சிரிப்பு பிரகாசிக்கச் செய்யும். மாசு மருவற்ற சிவந்த மேனி. கருஞ் செம்பு நிறக் கூந்தல் சுருள் சுருளாக. அவளுடைய இந்த அழகில் வியந்து சொக்கிப் போய் நின்றான் இளைஞன். அவளோ கனவுலகில் மிதந்து கொண்டிருந்தாள்.



இருபத்தி நாலு வயதான மங்கையின் நெஞ்சத்திலே நிறைந்திருக்கும் காதல் - ஆனால் இவள் உள்ளமும் உடலும் ஒரு குறிக்கோளினால் நிறைக்கப்பட்டிருந்தது. அவள் பாரிசுக்குச் செல்வது குடியரசு ஆதரவாளர்களைச் சந்திக்க அல்ல. ஒரே ஒரு குடியரசு ஆதரவாளனை - புரட்சிக்காரனைச் சந்திக்கவே. அவன் பெயர் ஜீன் பால் மாரட்.

பிரெஞ்சுப் புரட்சியின் தொடக்கக் காலத்தில் - 1793ல் அவளும் கூட குடியரசு ஆதரவாளராகத்தான் இருந்தாள். ஆனால் குடியரசின் அவளுடைய கருத்து மாரட்டிடமிருந்து வேறுபட்டிருந்தது. கௌரவமான குடும்பத்தில் பிறந்து, கான்வென்டில் கல்வி கற்று, வெளியுலக அனுபவங்கள் ஏதுமின்றி ஒரு மாகாணத்தின் நகரில் வாழ்ந்து வந்த அவள், புராதன கிரேக்கத்தின் பொன்னெழுத்துக்களாலான குடியரசுகளைப் பற்றிய புத்தகங்களைப் புரட்டி அதில் ஈடுபட்டாள். குடியரசு என்பது மக்களை, வீரர்களும் கவிஞர்களும் தத்துவ ஞானிகளும் கொண்டதோர் குழுதான் ஆள வேண்டும் என்று கருதினாள். அத்தகையதோர் ஒளிமயமான பண்டைய கிரேக்கக் குடியரசைப் பற்றிய கனவு மீண்டும் பிரான்ஸ் நாட்டில் நிஜமாக வேண்டும் என விரும்பினாள்.

பாரிஸிலிருந்து வெளியாகும் செய்தித்தாள்களில், அப்போது அதிகாரத்திலுள்ள ஜிராண்டின்ஸ் (Girondins) களின் சொற்பொழிவுகளைப் படித்தபோது அதீனியர்களும் ஸ்பார்ட்டன்களும் மறுபிறவி எடுத்து பிரான்ஸ் நாட்டை வெற்றிப் பாதையில் அழைத்துச் செல்ல வந்திருப்பதாகப் பூரித்துப் போனாள். தன் கனவுகள் - ஆசைகள் - விருப்பங்கள் நிறைவேறப் போகும் தருணம் வந்து விட்டது என்று கருதினாள். தன்னைப் போலவே அவர்களும் (ஜிராண்டின்ஸ்) பொற்காலக் கனவு காண்பவர்கள் - உயர்ந்த எண்ணங்களும், சிறந்த குறிக்கோளும் கொண்ட அவர்களுடைய பேச்சில் புளகாங்கிதம் அடைந்தாள் சார்லட்டி. ஆனால் ஜீன் பால் மாரட் இவர்களிலிருந்து மாறுபட்டவன் 'அடிமைச் சங்கிலி, மக்களின் நியாயமான மலர் வளையம்' என்றெல்லாம் நாகரீகமற்றுக் கொச்சை

**சாந்தா மூர்த்தி**



யாகப் பேசுகிறவன் - ஒரு வெறியன்.

மக்கள் தங்களைத் தாங்களே ஆள்வதற்குத் தகுதியுடையவர்களாக இன்னும் ஆகவில்லை. அந்தத் தகுதியடைந்த பிறகு அவர்களுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று கருதினார்கள் ஜிராண்டின்ஸ்கள். ஆனால் மாரட்டு அதுவரை காத்திருக்க விரும்பவில்லை. வன்முறையில் ஈடுபட்டு ரத்தம் சிந்தி சுதந்திரத்தைப் பறித்துக் கொள்ளுமாறு மக்களைத் தூண்டினான். மாரட்டுவின் குறிக்கோள் குடியரசின் கதவைக் காலால் உதைத்து கொந்தளித்து நிற்கும் கும்பல்கள் கூட்டத்துக்குத் திறந்து விட்டான். இதனால் அவள் எண்ணத்தில் மாரட் ஒரு கொடிய அரக்கனாகவே தோன்றினான்.

மாரட் அப்படியொன்றும் திகைப்பூட்டும் தோற்றமுடையவனல்ல. ஒடிசலான உருவம். சின்ன மனிதன்தான். அழுக்கான பச்சை நிறக் கோட் அணிந்திருப்பான். ஒரு புதிய குடியரசுக்குத் தேவை நூறு பேச்சாளர்கள் அல்ல. ஒரே ஒரு தலைவனே என்ற கருத்துடையவன் மாரட். ஆகவே ஜிராண்டின்ஸ்களுக்கு எதிராக பாரிஸ் நகர மக்களை உசுப்பி விட்டான். மக்களைப் பலிகடாவாக்கிய மாரட், அவர்களில் சிலர் கொலைக்களத்துக்குச் சென்றபோது, "பின்னால் ஆயிரக்கணக்கானவர்கள் பலியாவதை விட இப்போது சிலர் மரணத்தைத் தழுவுவது நல்லதே" என்றான்.

ஆனால் பலர் பாரிஸ் நகரிலிருந்து வெளியேறித் தப்பி ஓடினார்கள். அப்படிப்பட்டவர்களில் சிலர் கேயன் நகரில் தஞ்சம் புகுந்தனர். சார்லட்டி அந்த அகதிகளின் கதைகளைக் கேட்டாள், பேசினாள். அவர்கள் மனநிலையைப் புரிந்து கொண்டாள். நேர்மையான, தேசபக்தர்கள் - மாரட் போன்ற ராட்சதனின் செயல்களினால் எப்படி அவதிப்படுகிறார்கள் என்பதை அறிந்தபோது அவள் உள்ளம் கொதித்தது. பாரிஸ் அகதிகளில் ஒருவன் கூறினான் : "ஏதாவது அற்புதம் நிகழாவிட்டால், புதிதாக ஒரு ஜோன் ஆஃப் ஆர்க் தோன்றாவிட்டால் பிரான்ஸ் அழியத் தான் போகிறது!"




அன்றிரவு நெடுநேரம் தன் அறையில் சார்லட்டி தூங்காமல் தன்னந்தனியாக, பிரான்ஸைக் காப்பாற்றக்கூடிய அந்த அற்புதத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தாள். "மாரட் மறைந்து போனால்! மாரட் இல்லாமல் செய்து விட்டால்!" அவள் தனக்குத்தானே கூறிக் கொண்டாள் - "பிரான்ஸ் தேசமே அழிவதற்குப் பதில் ஒரு மனிதன் இறப்பது எவ்வளவோ மேல்" இந்த முடிவில் அவள் உடல் அதிர்ந்தது. அவள் இளகிய மனம் கொண்டவள், மென்மையானவள், அறியாமல் கூட தீங்கிழைக்காத ஒரு வண்டை மிதிக்காதவள்.

ஆனால் மாரட் ஒரு தீங்கிழைக்காத வண்டல்லவே. கிரேக்கப் புராணக் கதைகளில் வரும் - கணக்கற்ற மனித உயிர்களை பலியாகக் கேட்கும் பயங்கர ராட்சத மிருகத்தைப் போன்றவனாயிற்றே மாரட். தனது கொடுமையான அதிகாரத்துக்குப் பிரான்ஸையே பலியாக்கப் பார்க்கிறானே.

குழம்பும் மனம் தெளிவடைய சார்லட்டி பைபிளை எடுத்துப் படிக்கலானாள். அதில் ஜூடித்தின் கதையை - ஹோலோஃபெர்னஸ் என்ற கொடுங்கோலனைக் கொன்ற ஜூடித்தின் கதையைப் படித்தாள். ஜூடித் கொன்றது ஒரு உயிரை- ஒரே ஒரு உயிரை. தன் நாட்டை அழிவிலிருந்து காப்பாற்றுவதற்காக அதற்கு அற்புதம் நிகழத் தேவைப்படவில்லை. ஜோன் ஆஃப் ஆர்க்கும் அதை முடிக்க வர வேண்டி இருக்கவில்லை. தேவைப்பட்டதெல்லாம் ஒரு பெண் - தைரியசாலியான ஒரு பெண். ஓர் உயிருக்கு மற்றோர் உயிரை விலையாகக் கொடுக்கும் தீரமான ஒரு பெண்!

இரண்டு நாட்களுக்குப் பிறகு—

பாரிஸ் செல்லும் கோச் வண்டியில் அமர்ந்திருந்த சார்லட்டியை காதல் பொங்கும் விழிகளுடன் ஒரு ஜிராண்டின் வாலிபன் வழியனுப்ப வந்திருந்தான். அவன் கூறிய ஒரு விஷயத்துக்குப் பதிலளித்தாள் சார்லட்டி. "...விரைவிலேயே நான் யார் என்பதை நீ அறிவாய்!"

அந்த வாலிபனின் ஆர்வமான பதிலைக் கேட்க முடியாமலேயே கோச் வேகம் கூட்டிக் கிளம்பி விட்டது. அந்த வாலிபன் கூறியது இதுதான் "என் தேவதையே! நீயாரென்பதை

# அன்பளியுங்கள்
# ஒரு அருமையான
# கிச்சன் கலெக்‌ஷன்

அனைத்தும் சட்டென்று அன்பளிக்கக் கூடிய
கவர்ச்சிகரமான, கச்சிதமான, ஒரே பெட்டியில்.



- தவா
- ஃப்ரை பேன்
- சாஸ் பேன்
- கடாய்
- அப்பம் பேன்
- அலுமினியம் மூடி
- ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மூடி

பிரீமியர் நான்-ஸ்டிக் கிச்சன் கலெக்‌ஷன் ஒரு அற்புதமான அன்பளிப்புப் பொருள். இதிலுள்ள நான்-ஸ்டிக் பொருட்கள் நீடித்து உழைப்பதால், உங்களின் இந்த அன்பளிப்பு பல வருடங்களுக்கு போற்றப்படும்.

பிரீமியர் கலெக்‌ஷனை திருமணங்களில், ஆண்டு விழாக்களில், பிறந்த நாள் கொண்டாட்டங்களில், பண்டிகைகளில் மற்றும் ஊழியர்களின் ஊக்கமாகவும் பரிசளிக்கலாம்.



# Premier

*Non-Stick Kitchen Collection*

PREMIER MARKETING, "Ankur Manor", 182, Poonamallee High Road, Kilpauk, Chennai - 600 010. India. Phone: 8231300 / 8231400. Fax: 91-44-8231500.

நான் முன்பே அறிந்தவள்தான்."

**பா**ரீஸில், குடியிருப்பதற்கு - அகஸ்டின் என்னுமிடத்தில் ஒரு அமைதியான ஹோட்டலில் தங்கினாள் சார்லட்டி. பேனாவும் மசியும் தன் அறைக்கு அனுப்புமாறு கூறினாள். அவை வந்ததும் பிரான்ஸ் நாட்டு மக்களுக்கு ஓர் உரையாற்றலை எழுதினாள்.

"மகிழ்ச்சி இழந்த மக்களே! பொதுநலனுக்கு இல்லாமல் தன் நலனுக்காகப் பாடுபடும் போக்கிரிகளை நீ எவ்வளவு காலம் சகித்துக் கொண்டிருக்கப் போகிறாய்? பாழான பிரான்ஸின் இடிபாடுகளின் மீது அவர்கள் கொடுங்கோலாட்சி நடத்த நீ எத்தனை நாள் அனுமதிக்கப் போகிறாய்? ஓ! என் தேசமே! உன் அவல நிலையைப் பார்த்து என் இதயம் வெடிக்கிறது. உனக்கு அளிக்க என்னிடமிருப்பது என் வாழ்க்கை மட்டுமே. அதை நான் விருப்பமுடன் உனக்களிப்பதில் பெருமை கொள்ளுகிறேன்..."

ஜூலை 13-ம் நாள் அதிகாலையில் சார்லட்டி அரண்மனைத் தோட்டத்துக்குப் போனாள். அங்கு அமர்ந்து அமைதியாக செய்தித்தாளைப் படித்தாள். பிறகு ஒரு வாடகை கோச் வண்டியை அழைத்து அதில் ஏறிக் கொண்டாள். கோச் வண்டியோட்டியிடம் மாராட்டின் வீட்டுக்குப் போகும்படி கூறினாள்.

மாராட்டின் வீட்டுக் கதவை ஒரு பெண் திறந்தாள். சோம்பேறித்தனமான துப்புரவற்ற அவள் வெடுக்கெனக் கூறினாள். "என் கணவர் யாரையும் காண விரும்பவில்லை. அவர் உடல்நிலை மோசமாக இருக்கிறது." சார்லட்டி அவள் கூற்றை நம்பவில்லை. தான் அவசியம் மாராட்டைச் சந்தித்தேயாக வேண்டும் என்று வற்புறுத்தினாள். மிக முக்கியமான தகவல் ஒன்றை அவரிடம் தெரிவிக்க வேண்டும் என்றாள். அப்போது உள்ளே இருந்து ஓர் ஆணின் குரல் கேட்டது -

"என்னைக் காண விரும்பும் அது யார், சிம்மோனி? அந்தப் பெண்ணை உள்ளே அனுப்பு."

வழிமறித்து நின்ற இல்லத்தரசி, வேண்டா வெறுப்புடன் ஒதுங்கி வழிவிட்டு, மற்றொரு கதவைத் திறந்து சார்லட்டியை உள்ளே போகும்படி கூறினாள். அந்த அறையில்தான் மாரட் இருந்தான். மாராட்டின் மனைவி சற்று நேரம் தயங்கி அருகே நின்றபடி ஆர்வமுடன் உள்ளே நடக்கும் பேச்சைக் கேட்க நின்றாள். கௌரவமும் உயர்குடிப் பிறப்புமான பெண்கள் மாராட்டைக் காண வர மாட்டார்கள். ஆகவே சார்லட்டியின் வருகையினால் இனம்புரியாத ஏதோ ஒரு உணர்வு அவளிடம் ஏற்பட்டது. பிறகு தோளைக் குலுக்கியபடி அந்த நினைவை உதறி விட்டு சமையலறையை நோக்கிச் சென்றாள் அவள்.

கால் மணி நேரத்துக்குப் பிறகு மறுபடி கணவனின் அறைப் பக்கம் வந்தாள் - கணவன் ஏன் அப்படிக் கத்தினான் என்பதை அறிய மூடிய கதவின் கைப்பிடியைத் திருகி கதவைத் திறந்தாள். அங்கு அவள் கண்ட காட்சி - அவளையும் கூக்குரலிட வைத்தது. அலறியபடியே திறந்த ஜன்னல் வழியாக வெறிக் கூச்சலிட்டு எல்லாரையும் அழைத்தாள்.

"மாரட் கொலை செய்யப்பட்டார்! மாரட் இறந்து விட்டார்!"

**சா**ர்லட்டியைக் கைது செய்து அப்பே சிறையில் (Abby Prison) அடைத்தார்கள். கைது செய்யப்பட்டபோது கசங்கிய தன் ஆடையை சீர்செய்தபடி, நாட்டைக் காப்பாற்றி விட்டோம் என்ற நினைப்பில், மகிழ்ச்சியும் திருப்தியும் பூத்த முகத்துடன் காணப்பட்டாள். ஜெயிலரின் மனைவி அவளுக்காகக்

ஸ்னானப் பவுடர் தயாரிக்கும்
போது சிறிது குப்பைமேனி இலைகளையும்
காயவைத்து இடித்து சேர்த்துக் கொள்ளவும். எந்தவித
தோல் நோய்களும் நெருங்காது.
- ஜே. நிர்மலா

"என் வீட்டு டெலிவிஷனை தூசி இல்லாமல் வைத்திருப்பது எப்போதுமே மிகவும் சிரமமாயிருந்தது...



**MUMBAI : PRABHADEVI:** BHUPESH GUPTA BHAVAN, 85 SAYANI ROAD, PRABHADE
MUMBAI 400 025. TEL: 4301725, 4301718. **MADRAS** : TEL: 4348328, 434830

நீதிபதிகளின் முன்னால் எப்படித் தலை நிமிர்ந்து நின்று கொண்டிருந்தானோ அதே போல, பாரீஸ் மக்களின் மத்தியில் கம்பீரமாக தலைநிமிர்ந்து அந்த வண்டியில் நின்றபடி போவதையே விரும்பினான்.

கொலையாளி மரண தண்டனை விதிக்கப் பட்ட எத்தனையோ பேரைப் பார்த்திருக் கிறான். ஆனால் இவனைப் போல அவன் இதுவரை பார்த்ததில்லை. அவனிடம் மரண பீதி காணப்படாதது மட்டுமல்ல, அவன் கண் களிலும் உதட்டிலும் அதிசயமானதோர் சோபையையும் கண்களில் புதிய ஒளியையும் கண்டான். வேறு யாரிடமும் இவற்றை அவன் பார்த்ததில்லை.

ஆரம்பத்தில் பாரீஸ் மக்கள் - அழுக்கும், கந்தலும், தூய்மையற்ற, மட்டமான குண முடைய மக்கள் - மாராட்டைத் தங்கள் தெய் வமாக மதிக்கும் மக்கள் - கொலைக்களத்துக்கு வண்டியில் நின்றபடி போகும் சார்லட்டியை பார்த்து இழிவாகப் பேசினார்கள். கற்களை யும், கண்டதையும் அவன் மீது வீசி எறிந்தார் கள். சார்லட்டி இவை எதனாலும் பாதிக்கப் படாமல், அதே நிமிர்ந்த நிலையில் முறுவல் மாறாத முகத்துடன் சென்றான்.

நாகரிகமிக்க செயின் ஹானோர் பகுதி வழியாக அவனுடைய வண்டி சென்றபோது, அருவெறுப்பான கூச்சல் அடங்கிப் போயிற்று. இங்கும் அங்குமாக சில முஷ்டிகள் உயர்ந்தன. ஆபாசமான வசைமொழிகள் ஒலித்தன. அதே போல ஆங்காங்கே தடுப்பை மீறிச் சில தலை கள் எழும்பி அவனைப் பாராட்டி வார்த் தைகளை உதிர்த்தன. ஒருவன் காவலர்களின் கட்டுப்பாட்டை உடைத்துக் கொண்டு, மலர்கள் விற்கும் வண்டியிலிருந்து கொத்தாக ஒரு மலர்ச் செண்டைப் பறித்து அதை சார் லட்டியின் பாதங்களில் வீசி மகிழ்ந்தான். இளம் மாணவன் அவனை, வானுலகிலிருந்து பூவுலகுக்கு இறங்கி வந்துள்ள தேவதையாக எண்ணிப் பூரித்துப் போனான்.

ஒரு சமயம் கொலையாளி அவன் களைப் பினால் பெருமூச்செறிவதாகக் கருதி, "நெடுந் தொலைவுப் பயணம் இது இல்லையா?" என்றான்.

"பரவாயில்லை. நாம் முடிவை அடைந்து விடுவோம்" என்றான் அமைதியாக சார்லட்டி.

முடிவு... முடிவில் தூக்குமேடையைச் சூழ்ந்து நின்ற கூட்டத்தில் பெரும் அமைதி நிலவியது...

தூக்குமேடையில் (தலை வெட்டும் பொறி யான கில்லட்டின்) மற்றோர் இளைஞனும் மரணத்தின் வாயிலில் நுழைய நின்று கொண் டிருந்தான். அவன் செய்த குற்றம் தன் காதல் தேவதையான சார்லட்டியைப் பாராட்டி கவிதை இயற்றியது. உயிர் பறிக்கும் வேளை நெருங்கியபோது அந்த வாலிபன் உரக்கக் கத்தி னான், "சார்லட்டி, காரேட்! எனக் காகக் காத்திரு. நானும் வருகிறேன்!"

கொலைகாரி சார்லட்டி - தேவதை சார்லட்டி! - இவற்றில் எது அவள்?

சில வருடங்களுக்குப் பிறகு ஒரு பிரெஞ்சுக் கவி இந்த வினாவிற்கு விடையளித்து அவனைப் பற்றிய தன் கவிதை ஒன்றுக்கு இப்படித் தலைப்பிட்டார்.

படுகொலையின் தேவதை - The Angel of the Assassination.







ஒரு வாளி தண்ணீரில் வீட்டில் மலரும் பூக்களைப் போட்டு வைத்து மறுநாளில் அதே தண்ணீரை உபயோகித்து பள்ளி செல்லும் குழந்தைகளை குளிப்பாட்டிப் பாருங்கள். ஜோராக அவர்கள் மீது இருந்து அழகிய வாசனை வரும். பெண்கள் முகத்துக்கு இந்தத் தண்ணீரை உபயோகித்து முகம் கழுவினால் முகம் புத்துணர்வு பெறும்.

— ஜே. நிர்மலா

# இந்த மாதம் எப்படி?



## மேஷ ராசி :

*அசுவினி, பரணி, கிருத்திகை 1-ஆம் பாதம்.*

நீங்கள் சம்பந்தப்பட்ட வழக்கு ஒன்றில் உங்களுக்கு வெற்றி கிடைக்கும். அது உங்கள் உத்தியோக சம்பந்தமாகவும் இருக்கலாம். அல்லது முன்னோர்களின் சொத்து விவகாரமாகவும் இருக்கலாம். அரசியல்வாதிகளுக்கு நல்லதொரு வாய்ப்பு காத்திருக்கிறது. குழந்தைகளின் கல்வி உடல்நிலை இவை திருப்திகரமாக இருக்கும். விழா ஒன்றில் உங்களுக்கு வஸ்திரமும் தனலாபமும் கிடைக்கும். எனவே இந்த மாதத்தில் மனமகிழ்ச்சிக்குக் குறைவிருக்காது. கேதுவும் புதனும் உங்களுக்கு உகந்ததைக் கொடுப்பார்கள். அதுபோலவே சுக்கிரனும் குடும்பத்தில் சுபகாரியம் நடக்க உதவுவார். புது முயற்சிகளைச் செய்வதற்கு இது உகந்த நேரமல்ல. விரய சனி வீண் விவகாரத்தை உண்டாக்கும் வாய்ப்புடன் வலம் வருகிறார். இடமாற்றத்தைக் கூடத் தரலாம். கவனத்துடனும், நம்பிக்கையுடனும் செய்யும் எந்தச் செயலும் வீணாவதில்லை. எனவே ஆத்மார்த்தமாக ஆறுமுகனையும், ஆதவனையும் தொழுங்கள். அனைத்தும் நல்லபடியே நடக்கும். ஏழரை சனியின் பிடியில் இருப்பதால் நள சரித்திரத்தையும் விநாயக புராணத்தையும் படிப்பது நல்லது.



## ரிஷப ராசி :

*கிருத்திகை 2, 3, 4 -ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.*

குடும்ப வாழ்க்கையில் அமைதியும் மன மகிழ்ச்சியும் குறைவின்றி இருக்கும். மாதத்தின் முற்பகுதியில் தனலாபத்திற்கு வாய்ப்பு உண்டு. தாய்மாமன் வகையிலோ அல்லது தந்தையுடன் கூடப் பிறந்த சகோதரிகளின் வகையிலோ ஏற்படும் ஒரு நிகழ்ச்சி உங்கள் மனதைச் சற்று பாதிக்கும். இந்த ராசியில் பிறந்து திருமணத்திற்குக் காத்து நிற்பவர்களுக்கும் பெற்றோர்கள் முழு மனதுடன் முயற்சி செய்தால் கட்டாயம் திருமணம் நடந்து விடும். உத்தியோகத்திற்காக விண்ணப்பித்துள்ளவர்களுக்கும் புதுத்தொழில் ஒன்றை ஆரம்பிக்கத் தயாராக இருப்பவர்களுக்கும் காலம் கனிந்து வந்துள்ளது. நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் எடுத்த நீண்டகால திட்டமொன்றில் மிகுந்த மன அலைச்சலையும், உடல் உழைப்பையும் நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறீர்கள். எனினும் எந்த விதத்திலேயும் உங்கள் பக்கம் வெற்றி கிடைக்கும். ஆனால் நிதி விஷயத்தில் சற்று நிதானம் தேவை. மாத மத்தியில் உடல்நிலை பாதிக்கப்படலாம். அதுவும் உணவு விஷயத்தில் காலந்தவறாமை கட்டாயம் கடைபிடிக்க வேண்டும். ஏனெனில்

**1997 November 1997**

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| 30 | | | | | | 1 |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |



பட்சணத்திற்கு கடலை மாவு காய வெய்யில் இல்லை என்ற கவலை வேண்டாம். வாணலியை நன்கு சூடாக்கி கேஸை நிறுத்தவும். (இல்லாவிட்டால் பருப்பு கலர் மாறி விடும்.) பின் கடலை பருப்பை அதில் ஐந்து நிமிடம் பிரட்டி மிஷினில் அரைக்கவும்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாசன்.

வேளை தவறிய உணவு தூக்கமின்மை இவை உங்கள் உடலை பாதிக்கலாம். மற்றபடி நன்மை கூடுதலாக நடக்கக்கூடிய மாதமாக இருக்கும். உங்கள் ராசியைத்தான் குரு பார்க்கிறாரே! பின் என்ன கவலையை விடுங்கள்.



## மிதுன ராசி :

*மிருகசீரிஷம் 3, 4 – ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர் பூசம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

சற்று தேக்க நிலையைக் காட்டுகின்ற மாதமே! எதிலும், எங்கும், எப்பொழுதும் போல வேகமாகக் காரியங்களைச் சாதிக்க முடியாத நிலைதான். எனினும் ராகுவும் புதனும் பலமாகச் சஞ்சரிப்பதால் எதிலும் நிதானத்தோடு கையாண்டு முயன்றால் எதிர் பார்த்த பலனை அடைய முடியும். உங்களுக்குச் சாதகமாக இராசிநாதனாகிய புதனும் ராகுவும் இருப்பதால் நீங்களும் உங்களது அறிவாற்றலையும், அனுபவத்தையும் பயன்படுத்தி உங்களது உத்தியோக நிலையிலும், குடும்பச் சூழ்நிலையிலும், பழகும் பழக்கத்திலும் வார்த்தையிலும், பிரச்சினைகளைக் கையாளும் முறையிலும் நேர்த்தியான சிந்தனை, நிதானம் இவைகளைக் கடைப்பிடித்து எதிர்பாராத வெற்றிகளையும் உத்தியோக உயர்வினையும் தொழிலில் இலாபத்தையும் சம்பாதிக்க முடியும். குழந்தைகளை அட்டகாசமான பாத்தத்துடன் கூடிய கண்டிப்பைக் காட்டாமல் அனுசரணையும் அன்பையும் காட்டி உற்சாகமூட்டுங்கள். தாம்பத்திய உறவிலும் கூட மாத முற்பகுதியில் சில பிரச்சினைகள் உருவாகலாம். கோர்ட் விவகாரங்களில் கூட வாய்தா வாங்கலாம். இந்தச் சூழ்நிலையிலும் பதவி உயர்வு ஒன்று உங்களை நாடிவர இருக்கிறது. அதன் காரணமாக இடம் மாற்றமானாலும் கவலைப் படாது ஏற்கலாம். அரசியல்வாதிகளுக்குத் திரிசங்கு சொர்க்கம்தான். ஏனெனில் பெரியதொரு மாற்றம் ஏற்பட இருக்கும் இச் சமயத்தில் எந்தப் பக்கம் இருப்பது என்பதைப் பற்றிய சந்தேக நிலை ஏற்படலாம்.



## கடக ராசி :

*புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

மாதத்தின் முற்பகுதி சாதகமாக இருக்கும். அதன் காரணமாக சுபநிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளுதல், வஸ்திரலாபம், தொழிலில் லாபம் என நல்ல நிலை தெரிந்தாலும், பிற்பகுதியில் சற்று சிரமத்தைத் தரும் சூழ்நிலையிலேயே பெரும்பாலான கிரகங்களின் சஞ்சாரம் அமைந்துள்ளது. அதனால் சற்று எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். ஒரு பெண்ணின் காரணமாக மனோவியாகூலம் ஏற்படலாம். வீண் வம்புகளும் வரலாம். எனவே நாகாப்பது நல்லது. வெளியூர்ப் பிரயாணம் ஒன்றுக்கு வாய்ப்பு இருக்கிறது. அதே சமயம் பொருள் இழப்பு அல்லது ஏமாறுதல் போன்ற சம்பவங்களால் தன நஷ்டம் ஏற்படலாம். இப்படிப்பட்ட சமயங்களில் சற்று மனோதைரியத்துடனும், எச்சரிக்கையுடனும் இருப்பது நல்லது. அவசியமற்ற பிரயாணங்களைத் தவிர்ப்பதும், அலட்சியப் போக்கைக் கைவிடுவதும் நல்லது. மாணவ மாணவிகள் தங்கள் உடைமைகளைக் கவனமுடன் பாதுகாப்பதுடன், முன்பின் அறிமுகமில்லாதவர்களின் எந்த வகை சொல்லையும் கேளாமல் இருப்பது நல்லது. குருவுக்கும் சூரியனுக்கும் அர்ச்சனை செய்யலாம். குழந்தைகளுக்கு கணபதியின் கதைகளைக் கூறலாம். இராசிக்குக் குரு பார்வை இருப்பதால் விபரீதமாக ஏதும் நடந்துவிடாது.



## சிம்ம ராசி :

*மகம், பூரம், உத்திரம் 1 – ஆம் பாதம்.*

மாதத்தின் முற்பகுதியில் உங்கள் முயற்சியில் வெற்றி உண்டு. இந்த ராசிக்காரர்களில் குரு சந்திர யோகம் பெற்றவர்களாக இருப்பவர்களுக்கு அஷ்டமத்துச் சனியோ, கேது ராகு போன்ற கிரகங்களோ கோட்சார ரீதியாக சிரமத்தைத்

தர நியாயமில்லை. எதிர்வரும் குரு பெயர்ச்சிக்குப் பிறகு நல்லதொரு நிலையே ஏற்படும். குரு தனுசுவில் இருப்பவர்களுக்கு வழக்கு விவகாரங்கள் ஏற்பட்டாலும் முடிவில் இவர்களுக்கே வெற்றி கிடைக்கும். தற்போதுள்ள எத்தகைய குழப்பமும், பொருளாதார நெருக்கடியும் நான்காம் இடத்தில் நன்கு சஞ்சாரம் செய்யும் புதனின் அருளால் சரியாகிவிடும். அத்துடன் சுக்கிர செவ்வாய் சேர்க்கை இந்த இராசிக்கு யோகத்தைத் தரக்கூடிய நிலைமை ஏற்படுத்தும். எனவே எத்தகைய மன இறுக்கத்தையும், குழப்பத்தையும், வம்பு வழக்குகளையும் பொறாமையால் ஏற்படும் ஏச்சு பேச்சுக்களையும் மேற்படி கிரக சேர்க்கைகள் முறியடிக்கும். தொழிலில் போட்டிகள் குறையும். அதே சமயம் அவசியமற்ற சில எதிர்ப்புகள் ஏற்பட்டாலும் கவலை வேண்டாம். ஆத்மார்த்தமான இறையுணர்வுகள் உள்ளவர்கள் எதற்கும் கவலைப்படத் தேவையில்லை. டிசம்பருக்குப் பிறகு அஷ்டமத்துச் சனியும், கும்பத்திலிருந்து குருபார்வை பெற இருக்கும் உங்கள் ராசிக்கு உபத்திரவங்களைத் தர மாட்டார். எனவே கவலையை விடுத்துக் கடமையைச் செய்து கொண்டிருங்கள். அரசியல்வாதிகள், அரசுப் பணியாளர்கள் போன்றவர்களில் சிலர் சோதனைகளுக்கு ஆளாகி இருப்பினும் அடுத்துவரும் மாதங்களில் அவர்கள் பலவிதங்களில் மனநிம்மதி பெறுமளவிற்கு இறையருள் கிடைக்கும். கார்த்தவீர்யார்ஜுனஜபம் ஹோமம் செய்வது மிகவும் நல்லது. ஒருமுறை நட்சேச பிருந்தாவனம் எனும் பாப்பாரப்பட்டி ஸ்ரீராகவேந்திரர் சன்னதிக்குச் சென்று வாருங்கள்; பிறகு பாருங்கள் உங்கள் நிலை எப்படி என்று!



## கன்னி ராசி :

*உத்திரம் 2, 3, 4 – ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 – ஆம் பாதங்கள்.*

இந்த மாதம் அரசிடமிருந்து ஏதாவது விளக்கம் கேட்டு கடிதம் வரலாம். இது விஷயத்தில் சற்றுக் கெடுபிடி ஏற்பட்டு பயமும் உண்டாகலாம். எனினும் 6ல் இடத்தில் உள்ள கேது அபயம் கொடுப்பார். அதை ராகு தடுப்பார். ஆயினும் குரு தனது பார்வையில் கருணையும் அளித்து, அமைதியையும் உண்டாக்குவார். ஆகவே மேற்படி விஷயம் உங்கள் காதுக்கு எட்டாமலே கூட அது அப்படியே மறைந்துவிடும். எனவே தைரியமாக இருங்கள். பாம்புக் கிரகங்களையும், குருவையும் மறக்காமல் வேண்டுங்கள். அத்துடன் உங்களுக்கு உரியதைப் பெற்றுத்தர மாதம் பூராவும் சுக்கிரனும் மாத இறுதியில் சூரியனும் ஆவன செய்வார்கள். 7ல் உள்ள பரிவர்த்தனை பெற்ற சனி எப்போதும் போல தாம்பத்திய உறவை தாமரை இலைத் தண்ணீராக ஒட்டியும் ஒட்டாமலும் இருக்கச் செய்வார். எதிர்வரும் குருபெயர்ச்சிக்குப் பின் நிலைமை சரியாகும். சுக்கிரனால் சுகமுண்டு. எனவே குடும்பத்தில் உள்ள சிக்கல் தீரும். அது கணவன் மனைவியிடையே உள்ள ஊடலாகவும் இருக்கலாம். அல்லது பெற்றோர்களுடனான கருத்து மாறுபாடாகவும் இருக்கலாம். இந்த மாதத்தில் இந்த இராசியில் பிறக்கும் குழந்தைகளுக்கு குறிப்பாக தனுசு மற்றும் மீன லக்கினத்தில் பிறக்கும் குழந்தைகளுக்குப் பிரபல ராஜயோகம் ஏற்படும். சிவ வழிபாடு சில சிக்கலான பிரச்னைகளைத் தீர்க்க உதவும். சிவமாலை புஜங்கஸ்தோத்திரத்தை ஒருமைப்பட்ட மனதுடன் படித்து வாருங்கள்.



## துலா ராசி :

*சித்திரை 3, 4 – ஆம் பாதங்கள், ஸ்வாதி, விசாகம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

செவ்வாய், சுக்கிரன், ராகு ஆகியவர்கள் உதவுவார்கள். மற்ற கிரகங்கள் உதவும் நிலை



தீபாவளி மருந்து செய்யத் தெரியாவிட்டால் என்ன? ஓமம், சுக்கு இரண்டும் வறுத்துப் பொடி செய்து, வெல்லமும், தேனும் சேர்த்து, ஒரு உருண்டை சாப்பிட்டால், எத்தனை பக்ஷணம் சாப்பிட்டாலும் ஜீரணம் ஆகிவிடும். வயிற்றுக் கோளாறு வராது. குழந்தைகளுக்கு ஓம வாட்டர் கொடுக்கலாம்.

– ஆர். பார்வதி

யில் இல்லை. மற்றபடி நன்மைகள் குறைவாக நடக்கக்கூடிய மாதமாகத்தான் இருக்கும். 5-ல் உள்ள கேதுவால் மனைவியின் உடல்நிலை பாதிக்கப்படலாம். நீண்ட கால வழக்கு ஒன்றில் சாதகமான சூழ்நிலை உருவாகியுள்ளது. அதனால் அரசு சம்பந்தப்பட்ட விதி முறைகள் உங்களுக்கு ஆதரவாக மாறி, உரிய பயன் உங்களுக்கு வரும் வாய்ப்பு உண்டு. ஆறாம் இடத்தில் உள்ள சனி தொழிலில் அல்லது உங்களது அன்றாடப் பணிகளில் எதிர் பார்ப்பதற்கு மேலாக தனலாபம் வரும்படி செய்யலாம். டிசம்பருக்கு மேல் மேலும் நன்மையை எதிர்பார்க்கலாம். குரு அப்போது உங்களுக்குச் சாதகமாக சஞ்சரிப்பார். நீண்ட தூரப் பிரயாணங்களுக்கும் வாய்ப்புள்ளது. மற்றபடி ஏற்றத்தாழ்வுகள் உள்ள மாதமே. அதனால் ஆஞ்சநேயர் ஸ்லோகங்களையும், ஆதித்ய ஹிருதயத்தையும் படிப்பது நல்லது.



## விருச்சிக ராசி :

*விசாகம் 4 – ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

சுக்கிரன் ஒருவரே உதவும் நிலையில் உலா வருகிறார். மற்ற கிரகங்கள் அனைத்துமே சரியாக சஞ்சரிக்கவில்லை. எனவே புதிய முயற்சிகள் ஏதும் செய்யாதீர்கள். எதுவும் வெற்றி பெற்று தரும் என எதிர்பார்க்க முடியவில்லை. வழக்குகளை தள்ளிப்போடுவது நல்லது. வேலைக்குச் செல்லும் பெண்கள் எச்சரிக்கையுடன் செயல்படுங்கள். தவறு செய்துவிட்டுத் தடுமாறும் நிலை தோன்றுகிறது. பங்கு மார்க்கெட், லாட்டரி போன்றவற்றில் ஈடுபாடு உள்ளவர்கள் சிறிது காலம் அவற்றை நினைத்துக் கூடப் பார்க்காமல் இருப்பது நல்லது. எச்சரிக்கையுடன் பொருள்களைப் பாதுகாப்பது. வீட்டை யார் பாதுகாப்பிலாவது விட்டுவிட்டு வெளியூர் செல்லும் பழக்கம் வைத்துக் கொள்ளுதல் போன்றவை அவசியம். பயப்படும்படியாக விபரீதமாக ஏதும் நடந்திடாது என்றாலும் வீண் அலைச்சலுக்கு இடம் தர வேண்டாமே என எச்சரிக்கைத் தரப்படுகிறது. மழையில் நனையாமல் பார்த்துக் கொள்ளவும். சுக்கிரன் சுபகாரியம் ஒன்றுக்கு உதவுகிறார். மாதத்தின் பிற்பகுதியில் கடைசி வாரத்தில் செவ்வாய் நிலம் ஒன்று வாங்க உதவலாம். அது கட்டின வீடாகக் கூட இருக்கலாம். ஸ்ரீசுப்ரமணியருக்கும் கணபதிக்கும் நவக் கிரகங்களுக்கும் ஒருநாள் அர்ச்சனை செய்யுங்கள்.



## தனுசு ராசி :

*மூலம், பூராடம், உத்திராடம் 1 – ஆம் பாதம்.*

மாத ஆரம்பத்தில் சூரியனால் அரசுப் பணியில் சேருவீர்கள் அல்லது பதவி உயர்வு பெறுவீர்கள். வீடு வாங்கும் யோகம் உண்டு. எதிர்பாராத நிலையில் வெளிநாட்டுப் பிரயாணமும் ஏற்படலாம். எனினும் ராசிநாதன் பரிவர்த்தனை காரணமாக நீச பங்க ராஜயோகத்தைத் தர இருப்பதால் கவலை தேவையில்லை. மூன்றாமிடத்து கேதுவால் முருகனது அருள் கிடைக்கும். கணபதியும் உதவுவார். எனவே மேற்படி தெய்வங்களுக்கு அர்ச்சனை செய்யலாம். உங்கள் ஊரில் ஏதேனும் பெரிய கோயில்கள் இருப்பின் அதன் பிரகாரத்தைத் தூய்மைப் படுத்துவது கூட நல்லதொரு பரிகாரமே. மற்றபடி நல்லதொரு மாதமே. 5-ல் உள்ள சனி பரிவர்த்தனை பெற்றுள்ளதால் பாதகம் ஏதும் செய்ய மாட்டார். இருப்பினும் குழந்தைகளின் கல்வி விஷயத்தில் நன்கு கவனம் செலுத்துவது நல்லது. துணி வகைகள், ரசாயனப் பொருட்

பாதுஷா மற்றும் பாம்பே காஜா செய்து மேலே உலர்ந்த கலர் கொப்பரையை தூவுவர். எப்போதும் இது உதிர்ந்து விடுகிறது. இதைவிட சர்க்கரைப் பாகில் கொப்பரையைப் போட்டு கிளறியபின் அதில் பாதுஷா, காஜா, தொக்கல் இவற்றைத் தோய்த்துப் போட கொப்பரை ஸ்வீட்டின் எல்லாப்புறமும் ஒட்டிக் கொண்டு மிகவும் அழகாக இருக்கும்.

- லக்ஷ்மி,



எந்த கார பட்சணம் செய்யும் முன் (மொத்த அளவு அரை படி எனில்) 2 கரண்டி நெய் சூடாக்கி அதில் துளி சோடா உப்பு. பின் தேவையான உப்புப் போட்டு நன்கு குழைத்து நுரைவரும் வரை தாம்பாளத்தில் தேய்க்கவும். பின் மாவு போட்டு பிசைந்து செய்ய அபார ருசியுடன் அமையும் பட்சணம்.

- லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்



கள், வாசனைத் திரவியங்கள் ஆகியவற்றை வியாபாரம் செய்பவர்களுக்கு நல்லதொரு காலகட்டம். அதே சமயம் செவ்வாய் மாதக் கடைசியில இந்த இராசியைச் சேர்ந்த காவல் துறை, நிர்வாகப் துறையினர்க்கும் பதவி உயர்வைத் தரலாம். அங்கு துணிச்சலான செயலுக்கும் பாராட்டும் பரிசும் கூடப் பெற்றுத் தரலாம்.

## மகர ராசி :



*உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 -ஆம் பாதங்கள்.*

சுக்கிரனாலும், சனியினாலும் சுகமுண்டு: லாபமுண்டு. நோயினின்றும் நிவாரணம் உண்டு. புதன் மிகச் சிறந்த முறையில் இலாபத்தில் சஞ்சரிப்பதால் சகல காரியங்களிலும் வெற்றி உண்டு. தொழிலில் ஏறுமுகம் - உத்தியோகத்தில் பதவி உயர்வு என பலவிதத்திலும் நன்மை உண்டு. சில மாதங்களாகவே மகர ராசி நேயர்களுக்கு முகராசி குறைவாகவே இருந்ததுடன் பல்வேறு விதமான வேதனைகளை அடைந்திருந்த நிலையில் இம்மாதம் ஒரு திருப்புமுனையாக அமைந்துள்ளதைக் காணலாம். சூரியன் அரசியல் துறையில் உள்ளவர்களுக்கும் அரசுத் துறையினருக்கும் ஆக்கப்பூர்வமாகச் செயல்பட்டு லாபத்தைப் பெற அருள்புரிவார். கலைத்துறையினர்க்கு இருந்த சிரமங்கள் குறையும். என்றும் பாம்புக் கிரகங்களும் குருவும் சாதகமாக இல்லை என்றாலும் இராசிநாதன் பலமாகச் சஞ்சரிப்பதால் எல்லாம் நல்லதாகவே முடியும். பிரயாணங்கள், மற்றும் தொழில் சம்பந்தமான பேரங்கள் அனைத்தும் இலாபத்துடனேயே இயங்க வேண்டும். ஆனால் நம்பிக்கையுடன் செயலாற்ற வேண்டியது அவசியம். நடந்ததை மறந்து நல்லதொரு இறைவுணர்வுடனும் அசை

யாத நம்பிக்கையுடனும் உழைப்பவர்கள் கட்டாயம் வெற்றியடைவார்கள். வெளிநாட்டுப் பிரயாணம் ஒன்றுக்கு வாய்ப்பு உண்டு. பயன்படுத்திக் கொள்ளுங்கள். அரசமரத்து நாகருக்கும், ஆற்றங்கரை அம்மனுக்கும் அர்ச்சனை செய்யுங்கள். ரோகதோஷம் விலகும். உங்கள் கிரகத்தில் சந்தோஷம் நிலவும்.

## கும்ப ராசி :



*அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.*

இதுவரை இருந்த இழுபறி நிலையும் ஏழரை சனியின் பிடியின் ஆதிக்கமும், மற்ற கிரகங்களின் சஞ்சாரத்தால் ஏற்பட்டிருந்த தடைகளும் உங்களை விட்டு மெல்ல மெல்ல விலகுகிறது என்பதை உணர்வீர்கள். இனி எடுக்கும் செயலில் வெற்றி கிடைக்கும். சாதகமான சூழ்நிலைக்கும் பங்கம் விளைவிக்கும் கிரகங்கள் ராகுவும் கேதுவும் என்பதால் அவர்களுடைய தோஷம் நீங்க முறையே துர்க்கைக்கும், விநாயகர்க்கும் அபிஷேக ஆராதனை செய்யுங்கள். குரு 12ல் இருந்தாலும் பரிவர்த்தனைக் காரணமாகப் பலவீனத்தை உண்டாக்க மாட்டார். அதற்கு மாறாக ஆறாவது இடமான கடகத்தை அதாவது உங்களது ஜென்ம ராசியைச் சுட்டிக்காட்டுகின்ற சந்திரனது வீட்டை குரு பார்ப்பதால் நோய் விலகி, எதிரிகள் அடங்கி, கடனும் தீர்ந்து நல்லதொரு நிலை உங்களுக்கு ஏற்படும். அஷ்டமஸ்தானத்தையும் சுகஸ்தானத்தையும் கூட குரு பார்ப்பதாலும் அவ்விடங்கள் சுத்தமாக இருப்பதாலும் நன்மை அதிகமாக நடக்க வேண்டும். எதிர்பாராத தனலாபத்தைச் சந்திரன் உச்சம், ஆட்சி பெறும் தினங்களில் அடைவீர்கள். உங்கள் குழந்தைகளுக்கு உரியவரான குரு நீச்சமும் பெற்றுள்ளதால் அக்குழந்தைகளின் பலவீனத்தைப் பலர் முன் எடுத்துக் கூறாமல்

# குடும்பதலைவிகளின் சரியான தேர்வு செப் மாஸ்டர்








கணவர் ஆபிஸ் போக வேண்டும். குழந்தைகளை ஸ்கூலுக்கு அனுப்ப வேண்டும். இந்த அவசரத்தில் பலகையை தேடி, எண்ணெயை எடுத்து ஒவ்வொன்றாய் தேய்த்து கொண்டிருந்தால் முடியுமா. ஒரு குடும்பத் தலைவி என்ற முறையில் என்னுடைய சிறந்த தேர்வு செப்மாஸ்டர் தான்.

# chefmaster™

**INSTANT CHAPATHI MAKER**



SALEM STEEL CUPS



MOULDED ISI POWER CORDS



IMPORTED THERMOSTAT

Manufactured by:

**PREMIER MACHINE TOOLS**

Regd. office : 84-A, Vinayakar Street, Sivananda Colony, Coimbatore - 641 012., Tel: 0422-436833. Fax : 0422 - 439389, INDIA.

**Distributores :**

Madras : **M/s. Sha Taraji Ramlal & Sons.,** 388, Mint Street, Madras - 600 079 Phone : 518558

Coimbatore : **M/s. Hi-Tech Engineers,** 150, 5th Street, Gandhipuram, Coimbatore - 641 012 Phone : 430584

Madurai : **M/s. Anitha Marketing Agencies,** 36, Lakshmipuram 3rd Street, Madurai - 625 001., Ph : 620076

*Distributors required for all major cities of Tamil Nadu, Andhra Pradesh and Karnataka*

# நமது முதல் பெண்மணி



ஸ்ரீமதி விமலா சர்மாவிற்கு அடுத்தபடியாக பாரதத்தில் முதல் பெண்மணியாக டெல்லி ராஷ்டிரபதிபவனில் குடி வந்துள்ள திருமதி உஷா நாராயணனைப் பற்றி இதுவரை அதிகமாக எந்தச் செய்தியும் வெளி வரவில்லை. (புகைப் படங்கள் கூட) பர்மா தேசத்தில் பிறந்து வளர்ந்து பட்டம் பெற்ற இவர் அடக்கமும் அமைதியும் ஒருங்கே பெற்றவர்.

மா டின்ட் டின்ட் (மணி போசை போலிருக்கிறதல்லவா!) என்பதுதான் ஸ்ரீமதி நாராயணனின் திருமணத்திற்கு முந்திய பர்மீஸ் பெயர். பர்மாவில் பட்டதாரிப் படிப்பை முடித்துக் கொண்டு ரங்கூன் யூனிவர்சிடியில் சிறப்பு ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். சமூக சேவையில் மேல் படிப்பு படிக்க இந்தியா வந்தார். டெல்லியில் சிறுவருக்குக் குற்றவாளிகள் துறையில் சிறப்புப் பட்டம் வாங்கிய பின் இரண்டு வருடங்களில் பர்மா திரும்பினார்.

ரங்கூன் ஒய்.எம்.சி.ஏ.வின் கலாசாரக் காரியதரிசியாக இருந்த பொழுதுதான் அவருக்கும் திரு. நாராயணனுக்கும் அறிமுகம் ஏற்பட்டது. அதுவே நாளடைவில் காதலாகிக் கல்யாணத்தில் முடிந்தது.

57 வருடங்களுக்கு மேல் ஆகும் இந்தக் காதல் கல்யாணத்தின் துவக்கம் மிகச் சுவையானது.

ஒய்.எம்.சி.ஏ.வில் இருந்த மா டின்ட் டின்ட்க்கு இந்திய தூதரகத்தில் (பர்மாவில்) பணி புரியும் நாராயணனை கூட்டங்களில் பேச, பல முறை அழைக்க வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது. இந்த சந்திப்புகள் நாளடைவில் காதலாக மாறி வந்து. திரு. நாராயணன் ரங்கூனிலிருந்து சிறிது காலத்திற்கு ஜப்பானுக்கு மாற்றப்பட்டார். ஜப்பானிலிருந்து இந்தியா வந்த அவர் இந்தியப் பிரதமராக இருந்த நேருவின் ஆசியைப் பெற்று (என்னை மணந்து கொள்) Marry me என்ற இரண்டு வார்த்தைகளில் தனது கல்யாணத்திற்கான விருப்பத்தை Ma விற்குத் தந்தியில் அனுப்பினார்.

ஆடம்பரமற்ற கல்யாணத்திற்குப் பிறகு மா டின்ட் டின்ட் திருமதி உஷா நாராயணன் ஆனார். கணவருடன் டிப்ளோமேட்டின் மனைவியாக டோக்கியோ சென்றார்.

தனது ஒரே சகோதரனையும் உலக யுத்தத்தில் இழந்தார். 1984ல் நோய் வாய்ப் பட்டிருந்த அன்னையைக் காண ஒருமுறை பர்மா சென்றார். அதற்குப் பிறகு அவர் கணவரின் நாடான இந்தியாவையே தனது சொந்த நாடாக ஏற்றுக் கொண்டார்.

இந்தத் தம்பதிகளுக்கு சித்ரா, அம்ருதா என்று இரண்டு பெண்கள். இருவரும் படிப்பும், கல்யாணமும் முடிந்து வெளிநாட்டில் வசிக்கிறார்கள். இவர்களும் கலப்புத் திருமணம் தான் செய்து கொண்டுள்ளனர்.

உத்யோக ஓய்வு பெற்றபின் திரு. நாராயணன் கேரளாவிலுள்ள ஒத்தப்பாலத்திலிருந்து பார்லிமெண்டிற்குப் போட்டியிட்டார். ஒத்தப்பாலம் அவரது பிறந்த ஊர். உடனிருந்த திருமதி நாராயணன் அப் பகுதி பெண்களின் மேம்பாட்டிற்குத் தேவையான பல சமூக சேவைகளைச் செய்தார். தனது இளமைக் காலம் முதலே பெண்களின் முன்னேற்றத்திற்காகவும், சிறுவர், சிறுமியரின் நல்வாழ்விற்காகவும் செயல்படுவதையே விரும்பினார்.

தன் கணவர் உதவி ஜனாதிபதியாக இருந்த பொழுது அடக்கமாகவும், கச்சிதமாகவும் நடந்து கொண்ட இவருக்கு பாரதத்தின் முதல் பெண்மணியாக, ஜனாதிபதியின் மனைவியாகத் திகழ்வது மிகச் சுவையான காரியமே ஆகும். அப் பதவியை ரொம்பப் பயனுள்ளதாகத்தான் செய்வார்.

— பிரேமா நரசிம்மன்

# தடம் மாறி

காலையில் கணவர் ராசாங்கம் அலுவலகத்துக்குப் புறப்பட்டுச் சென்ற பின்னர் பூஜையை முடித்து விட்டு உணவருந்த இருந்த நேரத்தில் தபால்காரரிடமிருந்து குரல் கேட்டுத் தபாலைப் பெற்று வந்து படிக்கத் தொடங்கினார் யசோதா அம்மாள்.

கடிதத்தைப் படிக்கப் படிக்கத் தலைசுற்றியது அவருக்கு. குமட்டல் வருவது போலிருந்தது. படித்து முடித்தவுடன் கண்ணீர் அருவியாகப் பாயத் தொடங்கியது. பக்கத்திலிருந்த ஜன்னல் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு சாய்ந்தார். குமுறி அழத் தொடங்கினார். பின்னர் சோபாவில் போய் உட்கார்ந்தார். உடலெல்லாம் வியர்த்துக் கொட்டியது. எழுந்து சென்று ப்ரிட்ஜைத் திறந்து குளிர்ந்த நீரைக் குடித்து அதைக் கொண்டே முகத்தையும் கழுவினார். காலையில் குழைத்து இடப்பட்ட திருநீறும் குங்குமப் பொட்டும் அழிந்து விட்டதையும் கவனிக்கவில்லை. இன்னும் பதட்டம் அடங்கவில்லை. வெறிகொண்டவர்போல் பீரோவைத் திறந்து சீராக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பட்டுப் புடவைகளைக் கீழே தள்ளினார். ஆசையுடன் மடித்து வைக்கப்பட்டிருந்த விலையுயர்ந்த புடவைகள் அவரது தற்போதைய மனநிலையை வெளியிடுவது போல் கீழே சிதறிக் கிடந்தன.

இவற்றை யாருக்காவது தானமாக வழங்கி விட்டாலென்ன? அதற்கும் மனம் ஒப்பவில்லை. திரும்பவும் அவற்றை பீரோவுக்குள் தள்ளினார். இவற்றை மீண்டும் உடுத்திக் கொள்வதில்லை என்று முடிவு செய்து கொண்டார். அவற்றை என்ன செய்வது என்பதைப் பிறகு யோசிக்கலாம். சோபாவில் படுத்துச் சற்றுக் கண்ணயர முயற்சி செய்தார். இம்மாதிரி மிகத் தேவையான நேரங்களில்தான் தூக்கம் கைகொடுப்பதில்லை. கடிதத்தில் காணப்பட்ட சொற்கள் ஒவ்வொன்றும் சாட்டையாக அவரைக் குத்திப் புண்ணாக்கிக் கொண்டிருந்தன. "கடவுளே! இப்படி ஒரு தண்டனை எனக்குத் தேவைதானா?" மறுபுறம் "ஏன் தேவையில்லை?" என்று மனச்சாட்சி உறுத்தியது. மனச்சாட்சி மிக வலுவாக இருப்பவர்களுக்கும் சுத்தமாக இல்லாதவர்களுக்கும் கவலை கிடையாது. முன்னவர்கள் நேர்பாதையிலிருந்து சற்றும் பிறழ மாட்டார்கள். பின்னவர்கள் விலங்குகளுக்குச் சமமானவர்கள். அவர்களுக்கு மனச்சாட்சி என்று ஒன்று இல்லாததால் எந்தவிதத்திலும் பாதிப்பு இல்லை. இடைப்பட்ட பல்வேறு நிலைகளிலுள்ளவர்களுக்குத்தான் சிரமங்கள். அவ்வப்போது ஏற்படும் தூண்டல்களைத் தூண்டில் என்று கண்டு அறவே ஒதுக்கும் மனவலிமையும் இருக்காது. தடம் மாறிய பின் தங்களது செயல்களுக்கு நியாயம் கற்பிக்கும் முயற்சியில் வெற்றி காணவும் இயலாது.

டெலிபோன் மணி அடித்தது. ஒருவேளை அவனாக இருக்குமோ? கடிதம் எழுதிச் சித்திரவதை செய்தது போதாதென்று டெலிபோனிலும் தகாத சொற்களைப் பயன்படுத்த எண்ணியுள்ளானோ? டெலிபோனை எடுக்காமல் விட்டு விட்டார். சோபாவிலும் உட்காரப் பிடிக்கவில்லை. எழுந்து சுவரில் சாய்ந்து உட்கார்ந்தார். பக்கத்து வீட்டுப் பாட்டி இவ்வாறு சுவரில் சாய்ந்து உட்கார்ந்த போதெல்லாம் எத்தனை முறைகள் தனது எதிர்ப்பைத் தெரிவித்திருந்தார்! இப்போது சுவரில் அழுக்குக் கறை படிவதைப் பற்றிக் கவலை ஏற்படவில்லை. சாப்பாட்டு மேசையின் அருகிலிருந்த சுவர் அலமாரியில் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த விதவிதமான தேநீர்க் கோப்பைகளிலிருந்து பிளாஸ்க் வரை எல்லாப் பொருட்களும் அவரை இகழ்ச்சியுடன் "எங்களது பின்னணி என்ன என்று தெரியுமா?" என்று சவால் விடுவதாகத்

தோன்றியது.

"இனி இது போல் எத்தனை கடிதங்களோ, எவனெவன் எப்படியெல்லாம் தன்னை வர்ணனை செய்து எழுதப் போகிறானோ. அவற்றைப் படிப்பதற்கான தைரியத்துக்கு எங்கே போவது!" என்று எண்ணி நடுங்கத் தொடங்கினார். வழக்கமாகப் பிற்பகலில் பக்கத்து வீட்டுப் பெண்டிர் வந்து கூடுவார்களே. இப்போதைய மனநிலை அவரைக் காட்டிக் கொடுத்துவிடும். தனிமை எவ்வளவு சிரமம் தருவதாக இருந்தாலும் சரி. ஒவ்வொரு நாளும் அப்பெண்களது பிற்பகல் அரட்டை அரங்கத்தை எவ்வளவு ஆவலுடன் எதிர்பார்த்திருப்பார்? தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் கூட அந்த அளவுக்கு இனிப்பதில்லை. இன்று! ஒரே ஒரு கடிதம் இப்படித் தனது சீரான வாழ்வின் அடிமட்டத்தையே அசைத்து விட்டதே! அடிமட்டம் வலுவாக அமைக்கப்படாததுதான் காரணமோ?

முன்னெச்சரிக்கையாக முன்புறக் கதவை வெளியிலிருந்து பூட்டி விட்டுப் பின் வாசல் வழியாக வீட்டுக்குள் நுழைந்து தாழிட்டுக் கொண்டார். தோழிகள் - பெயரளவுக்குத்தான் - வந்து பார்த்துவிட்டுத் தொந்தரவு செய்யாமல் போய் விடுவார்கள். வேலைக்காரி? ஐந்து மணிக்கு வருவாள். அவளைக் கூட நேருக்கு நேர் பார்க்கும் துணிவு இன்று இல்லையே. தடம் புரண்டவர்களுக்குப் பூனையும் புலியாகத் தெரியும் என்பது இதுதானோ?

இரவு ஏழு மணி சுமாருக்கு ராசாங்கம் அலுவலகத்திலிருந்து வருவார். அதற்குச் சற்று முன்பு பூட்டியிருந்த வெளிப்புறக் கதவைத் திறந்து விட்டு வந்தார். அன்று முழுவதுமே பட்டினி தான். எனினும் தனது கணவருக்காக மட்டும் காப்பி கலந்து வைத்தார். மாலை விளக்குப் பூஜை கூட இன்று செய்யப்படவில்லை.

வழக்கமான நேரத்திற்கு ராஜாங்கம் ஜீப்பில் அலுவலகக் கட்டுகள் அடங்கிய பெட்டியுடன் வந்திறங்கினார். ஜீப் திரும்பிச் செல்வது வரை பொறுத்திருந்த யசோதை அம்மாள் குலுங்கி அழத் தொடங்கினார். ஒன்றும் புரியாத ராசாங்கம் அவரைத் தேற்றிவிட்டு தனது மனைவிக்கு அந்த அளவுக்குத் துக்கத்தைத் தந்த கடிதத்தை வாங்கிப் படிக்கலானார். கடிதம் தமிழில் தட்டச்சு செய்யப்பட்டிருந்தது :

"எனது மதிப்பிற்குரிய அம்மையீர்,

தங்களை ஒரு திருமண வீட்டில் பார்க்கும்பேறு இவ்வடியேனுக்குக் கிடைத்தது. தாங்கள் கட்டியிருந்த அந்தப் பட்டுப் புடவையில் தாங்கள் மிக அழகாக இருக்கிறீர்கள். உண்மையில்

# திருமாற்றம்!

எஸ். சுவாமிநாதன்



பயத்தம் பருப்பை வேகத்
நெய்யில் வறுத்தேன். பின்பு ரவை
அரைத்து உடைத்தேன். பின்பு
கேசரி போல் கிளறினேன்.
பட பருப்பு வேக இன்னும் சில
நிமிடங்கள் ஆகும். யாராலும்
என்ன கேசரி என்று சொல்ல
முடியவில்லை. பொன்னிறமாக
அல்வா போல் மின்னியது.

— என். கல்யாணி

நான் அந்தப் புடவையைத் தேர்ந்தெடுக்கும் போது நீங்கள் என்ன நிறம், உங்கள் வயது என்ன என்பது கூட எனக்குத் தெரியாது. புடவையைப் பார்த்ததும் நீங்களாக இருக்குமோ என்று சந்தேகப்பட்டு அருகிலிருந்த ஒருவரைக் கேட்டு உறுதிசெய்து கொண்டேன். ஆனால் அந்தப் புடவைக்கு இணையாக ஒரு ஜாக்கெட் துணியும் எடுத்துக் கொடுத்திருந்தேனே! அது வேறு யாருக்கேனும் பரிசாக அளிக்கப்பட்டிருக்குமோ!

தங்கள் தலைவர் நாடும்
ஓர் அன்பன்."

கூடத்திலிருந்த சொத்துகள் எவையும் தாக்குதலைக் காட்டுவதாக அமையவில்லை. அதே சமயம் அவை ஒவ்வொன்றும் ஆராய்ந்து தேர்ந்தெடுக்கப்பட்டவை. யார் எழுதியது? கண்டுபிடிக்க எந்த நடவடிக்கையுமில்லை. யார் மீதும் காட்ட இயலாத கோபம் புறப்பட்ட இடத்திற்கே திரும்பி வந்து தாக்கும். ராசாங்கத்திற்கு அத்தாக்குதல் அதிகமாகவே ஏற்பட்டது.

இப்போதெல்லாம் ராசாங்கம் அலுவலக ஆணைகளில் கையெழுத்திட பேரம் பேசுவதில்லை. பட்டுப்புடவைகள் கேட்பதில்லை.

# கல்யாண

"கோபு, நாங்க வந்த டாக்ஸியை நிறுத்து..." மேலே சரிந்த சீதாவை அணைத்த படியே சாம்பசிவன் பேசினார். "பாக்யாக்கா, வந்திருக்கறவங்களுக்கு சாப்பாடு போட்டு, தாம்பூலம் குடுத்து வழியனுப்ப வேண்டியது உங்க பொறுப்பு. மலர்விழி, நீ அம்மாவைப் பார்த்துக்க... நாங்க போயிட்டு வந்துடறோம்..."

திகைத்து நின்றவர்களில் ஒருத்தி, "பட்டுப் புடவை, மாலைக் கழுத்தா புதுத் தாலியோட புருஷன் சாவுக்கா!" என்று முகத்தை இடித்தாள்.

சாம்பசிவன் சட்டென்று சீதாவைப் பார்த்தார். தண்ணீர் எடுத்து வரச் சொல்லி முகத்தில் தெளித்தார். கழுத்து மாலையைக் கழட்டி எடுத்தார். கண் விழித்த சீதாவை மெல்ல உள்ளே அழைத்துச் சென்றார். கூட்டம் வேடிக்கை பார்த்தது. என்ன பேசுவது என்று தெரியாமல் குழப்பத்துடன் பார்த்தது.

"மலர், குழந்தைக்கு முதலில் கொஞ்சம் சாப்பாடு போடு. திரும்ப எத்தனை நேரமாகுமோ!" ஒன்றும் புரியாமல் நடப்பதை வேடிக்கை மட்டும் பார்த்துக் கொண்டிருந்த தீபாவை அழைத்தார். "தீபா, இந்த புது ட்ரெஸ்ஸெல்லாம் கழட்டி வச்சுட்டு, ஒரு பிடி சாப்பிட்டு வந்து விடும்மா..." மலர்விழி தீபாவின் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்றாள். சாம்பசிவன் சீதாவை அறையினுள் அழைத்துச் சென்று பழைய புடவை ஒன்றை எடுத்துத் தந்தார்.

அறைக் கதவை மூடி அவர் வெளியே வரவும், "அய்யோ, உங்கதி இப்படி ஆயிடுச்சே" என்று அம்மாவின் ஒப்பாரி துவங்கியது. "ஏற்கெனவே அமங்கலம். அதுலே மறுபடியுமா, வாண்டாம் தம்பி. உங்கநிலை நெனைச்சா பயமாயிருக்குடா..." என்று பாக்யா குரலெடுக்க, கசமுச என்று ஆளுக்கு ஆள் பேசத் துவங்கினர்.

"எல்லாரும் சும்மாயிருங்க. இறந்தது உங்க யாருக்கும் சம்பந்தமில்லாதவர். எந்த மனுஷனுக்கும் சாவு எந்த நேரமும் வரலாம். நீங்க எல்லாரும் சந்தோஷமா சாப்பிட்டுட்டுப் போங்க. இந்தச் சாவைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். யாரோ இறந்ததுனால என் வாழ்க்கைக்கும் ஒன்றும் ஆகிவிடாது..."

வழியெல்லாம் சீதா அழுதபடியே வந்தாள். அவளை "அழாதேம்மா" என்று சமாதானப்படுத்திய தீபாவும் சிறிது நேரத்தில் சேர்ந்து அழத் துவங்கினாள். ரெஜிஸ்திரார் அலுவலகத்திலிருந்து சந்தோஷமாகச் சென்ற இவர்களுக்குத் திடீரென்று என்ன ஆயிற்று என்று புரியாத டிரைவர் குழப்பத்துடன் திரும்பிப் பார்த்தபடியே காரை ஓட்டினார்.

தெரு ஆரம்பத்திலிருந்தே கூட்டம். நல்லதற்கும் கெட்டதற்கும் தோழமையுடன் தோள் கொடுக்கும் காக்கிச் சட்டைக் கூட்டம். காரைத் தூரத்திலேயே நிறுத்திக் கூட்டத்தின் நடுவே நடக்க வேண்டியதாயிற்று. தீபா பயத்தில் "அம்மா, அம்மா..." என்று அலற ஆரம்பித்தாள்.

ரமேஷின் அலுவலகத்தினர் யாரையும் சீதா சந்தித்ததில்லை. ரமேஷின் குடும்பத்திலும் உறவினர் என்று எவருடனும் போக்குவரத்துக் கூடக் கிடையாது. நண்பர்கள், உற



Supplement to Mangayar Malar November '97

# வேலிகள் 5

உஷா சுப்ரமணியன்

வினர்கள் என்று மனித உறவு இல்லாமல் போனதால் சீதாவுக்கு நியாயம் பேசக்கூட எவருமில்லை. ஆனால் இன்று ரமேஷின் சாவு இத்தனை பேரை வரவழைத்துள்ளது!

கட்டையாகக் கிடந்த ரமேஷின் உடல் நடுக்கூடத்தில் கிடத்தப்பட்டிருந்தது. அந்த முகத்தை சீதா வெறித்துப் பார்த்தாள். ஆடிய ஆட்டமென்ன, பேசிய பேச்சு என்ன, அத்தனை குரூரமும் எங்கே சென்று மறைந்தது. ஆறு ஆண்டு உடன் வாழ்ந்தவன் ஆனாலும் சீதா தன் உணர்ச்சிகள் அத்தனையும் மரத்து விட்டதால் உணர்ந்தாளே தவிர, அவனுக்காக அவளுள் எதுவும் அழவில்லை.

தீபா முற்றிலுமாக மறந்திருந்த அப்பா என்கிற உறவு மனிதரின் நிழல் நினைவு எழ, "அம்மா, இது- இது அப்பா இல்லை, ஏன் படுத்திருக்கார்?" என்று உரத்துக் கேட்டதுடன் நில்லாமல், "அம்மா போகலாம். இங்கே வேணாம்..." என்று பழைய நினைவில் சீதாவின் கையைப் பிடித்திழுக்க, நெருக்கமாக நின்றிருந்த பெண்கள், ரமேஷ் என்பவனைப் பற்றி எதுவுமே அறிந்திராமல் அவனுக்காக ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்த பெண்கள், 'சர்' எனத் தலை தூக்கி இவர்களைப் பார்த்தனர்.

"ஏட்டீ.. நீதான் புருசனை வுட்டுட்டு ஓடினவளா... இப்போ பிராவிடெண்ட் பண்ட் காசுக்கு வந்தியா.. வெட்கம் கெட்டவளே.." என்று உரத்த குரலில் சத்தமிட்டாள்.

'புருசனை வுட்டுட்டு ஓடினவள்' 'போடி வீட்டை விட்டு எங்கே போறே பார்க்கிறேன்' என்று நடு இரவில் இவளைக் காரணமின்றியே கதவுக்கு வெளியே தள்ளிப் பூட்டிய நாட்கள். குழந்தையை மடியிலிட்டு இரவு முழுவதும் கதவுக்கு வெளியே கிடந்த நாட்கள் ஒன்றா, இரண்டா.. புருசனைப் பிரிந்து வாழும் பெண் என்றால் கட்டாயம் அவள் ஓடிப் போனவளாகத்தான் இருக்க வேண்டும் என்று முடிவு செய்யும் சமூகம்.

யாரோ ஒருத்தி "புருசனைக் கொன்னுட்டியே பாவி" என்று சீதா முதுகில் அறைந்தாள். வலியில் துடித்தாள் சீதா. 'நான் மறுமணம் செய்து கொண்ட விவரமும் தெரிந்தால் என்னை அடித்தே கொன்று விடுவார்களோ.' சீதா பயத்தில் நடுங்கினாள்.



'பளிச்'சென்று பேண்ட், ஷர்ட் அணிந்திருந்த ஒருவர் சீதாவின் அருகில் வந்தார். "நீங்கதான் மிஸ்டர் ரமேஷ் மனைவியா!"

சீதா அவரைக் குழப்பத்துடன் பார்த்தாள். என்ன பதில் சொல்வது. அவள் இப்போது ரமேஷின் மனைவியா... காலையில்தான் சாம்பசிவனின் மனைவியாக ரிஜிஸ்டர் செய்து கொண்டவள் எப்படி ரமேஷின் மனைவியாக முடியும்?

அவர் தொடர்ந்தார். "ஸாரிம்மா... வெரி ஸாரி, எங்க பேக்டரியிலே இதைப்

அதன்
தனித்தன்மையான
அப்சார்ப் ப்ரொடக்ஷன் டெக்னாலஜி
மூலமாக ஷேப்பர்ஸ் மட்டுமே எனக்கு
நம்பிக்கையை அது அதிகமாகத்
தேவைப்படும் பொழுது
அளிக்கிறது.

"எல்லா சேனிடரி நேப்கின்களும் நடுவில் திரண்டு விடுவதில்லையா? சமமாகப் பரப்பாதா?"



ஷேப்பர்ஸ் அப்படி இல்லை அதன் தனித்தன்மையான அப்சார்ப் ப்ரொடக்ஷன் டெக்னாலஜி சேனல் ஈரத்தை கீழே இழுத்து பேடின் முழு அளவிலும் சமமாகப் பரப்பி ஷேப்பரை மென்மையான உலர்வாக்கி நீண்ட நேரம் உபயோகிக்க உதவுகிறது.

வாருங்கள், நம்பிக்கை பெறுங்கள் - அது உங்களுக்கு அதிகமாகத் தேவைப்படும்பொழுது ஷேப்பர்ஸ் வாங்குங்கள்.







நம்பிக்கையின் வடிவம்.

ரூ. 27/- மட்டுமே (10 கொண்ட ஒரு பேக்)

போல ஒரு ஆக்ஸிடெண்ட் இதுவரையிலே நடந்ததேயில்லை. ஓவர்ஹெட் கிரேன் எப்படி இவர் தலையில் அடித்தது என்றே புரியவில்லை. ரமேஷ் வாஸ் எ வெரி நைஸ் வொர்க்கர்... உங்களுடைய இழப்பு எங்களுக்கும் புரிகிறது. பர்ஸனல் மேனேஜர் என்கிற முறையில் என்னாலான எல்லா உதவிகளையும் செய்கிறேன். எங்க மானேஜ்மெண்டும், எம்.டி.யும் உங்க துக்கத்தில் பங்குகொள்வதுடன், உங்கள் குடும்பத்தின் எல்லா செலவுகளையும், எதிர்காலத்தையும் கவனித்துக் கொள்ளும்..." ஆங்கிலமும், தமிழுமாகக் கலந்து அவர் பேசியதில் பாதிக்கு மேல் சீதாவுக்குப் புரியவில்லை.

"எங்க தோழருக்கு மரியாதை தர எங்களுக்குத் தெரியும். நீங்க மத்ததைக் கவனிச்சுக்குங்க..." தொழிலாளர் தலைவர் பர்ஸனல் ஆபீஸரை ஓரங்கட்ட, மாலைகளும், பொக்கேக்களுமாக இருதரப்பினரும் போட்டி போட்டுக் கொண்டு ரமேஷை மூழ்கடிக்க, ரோஜாவும், சாவு வாசனையுமாகச் சேர்ந்து அந்த அறையை நிரப்பியது.

சீதா, நீபாவை அணைத்தபடி சாம்பசிவனைப் பரிதாபமாகப் பார்த்தாள். "மேலே வர வேண்டியவங்க யாராவது இருக்காங்களா? யாருக்காவது சொல்லி அனுப்பணுமா..." சீதா எல்லாவற்றுக்கும் தலைஅசைத்தாள்.

"ஸார், நீங்க ரமேஷ் ஸாருக்கு உறவா ஸார்?" யாரோ ஒருவர் சாம்பசிவனைக் கேட்க, அவர் வெறுமே தலையாட்டினார். "ரமேஷுக்கு ஒரே பொட்டப்புள்ளேதானே... அண்ணன், தம்பியும் இல்லையே... யாரு ஸார் கொள்ளி போடறது?" என்று கேள்வி எழுப்பினார்.

[redacted]

யார் ஒருவன் தனக்கு
உள்ள கௌரவமும்,
மரியாதையும் போய் விடுமோ என்று
பயந்தபடி இருக்கிறானோ,
அத்தகையவன் அவமானத்தைத்தான்
அடைகிறான்.
— விவேகானந்தர்
தகவல் : கே. விஜயலட்சுமி

[redacted]

"நான் அவர் காரியங்களைச் செய்துடறேன்..." சாம்பசிவன் முன் வர, சீதா திடுக்கிட்டாள். 'இவருக்கு ரமேஷுடன் என்ன உறவு... இவர் காரியம் செய்வதாவது...' இத்தனை பேர் மத்தியில் எப்படிச் சொல்வது...

"நீங்க என்ன தாயாதிக்காரரா... ஸகோதரரா... அப்படி இருந்தாத்தான் கொள்ளி போடலாம். இல்லைன்னா கோவிந்தாக் கொள்ளிக்கு சமம்..." எங்கிருந்தோ வந்து சேர்ந்திருந்த ஐயர் கூற... "எங்க தோழருக்கு கோவிந்தாக் கொள்ளியா... என்ன பேசறே ஐயரே!" என்று தொழிலாளி ஒருவர் பாய, ஐயர் பயத்துடன், "நான் அப்படிச் சொல்லலே. சாஸ்திரத்திலே யார் யார் உறவு முறை கொள்ளி போடலாம்னு எழுதி வச்சிருக்கு. ரமேஷ் ஆத்துக்காரியோ, பெத்த பொண்ணோ, கைப்புல் எடுத்துக் கொடுத்தா யார் வேணுமானாலும் கொள்ளி போடலாம். ஆனா பத்து நாள் காரியம் பண்ணணும்."

சீதாவின் பின்னல் அவிழ்க்கப்பட்டது. அவள் சம்மதம் கேட்காமலே அவள் மேல் தண்ணீர் ஊற்றப்பட்டது. காலையில் அணிந்த கண்ணாடி வளையல்கள் உடைக்கப்பட்டன. அழுது அழுது தூங்கியிருந்த நீபாவின் கையில் தர்ப்பையை வைத்து எடுத்து, சாஸ்திரோக்தமாக சாம்பசிவனிடம் ஐயர் தர, ரமேஷின் இறுதி யாத்திரை தொழிலாளர்கள் தோளில் துவங்கியது. கம்பெனி எம்.டி., முதல் அத்தனை பெரியவர்களும் தலைகுனிந்து மரியாதை செலுத்தினர். வாழ்ந்த நாளில் சகமனிதர்களை மதிக்காதவன், இன்று மனிதர்கள் புடைசூழ மதிப்பாகப் பரலோகம் சென்றான்.

ஆறு வருடம் வாழ்ந்த வீடு முள்ளாகக் குத்தியது சீதாவுக்கு. இதில் எனக்கு சம்பந்தமில்லை. என்னை விட்டு விடு என்று உரக்கக் கத்த வேண்டும் போலிருந்தது. நான் ரமேஷின் மனைவியில்லை. இந்தச் சடங்குகளில் என் பங்கு பொய்யானது. நான் ரமேஷுக்காகக் குழந்தை பெற்றதும், அந்தக் குழந்தை இன்று தந்தைக்குக் கொள்ளிபோடக் கைப்புல் தந்ததும்தான் உண்மை. ரமேஷ் என்பவர் யாரென்றே அறியாத ஒரு மனிதர், என்னை மணந்த கொடுமைக்காக இன்று மயானம் செல்லும் செயல் சமூகத்தால் எவ்வளவு கேவலப்படுத்தப்படும்.

யாரோ காப்பி எடுத்து வந்தார்கள். "போறவன் போயிட்டான். ஒரு வாய் காப்பியாவது குடி..." காப்பியைக் கையிலெடுத்தவுடனேயே ரமேஷுக்குக் காப்பி போட்டுக் கொடுத்த நாள் நினைவுக்கு வர, காப்பி அப்படியே குமட்டி வெளியே வந்தது.

"ஆயிரம்தான் புருஷன், பொன்சாதி

சண்டைன்னு பிரிஞ்சு வாழ்ந்தாலும், இது பிரிக்கிற உறவா" என்று ஒரு இழவு விளக்கம் கொடுத்தான்.

இவர்கள் அனைவரையும் தவிர்த்து, எங்கேயாவது மனிதர்களே இல்லாத காட்டில் இலக்கில்லாமல் ஓட வேண்டும் போலிருந்தது சீதாவிற்கு. அப்படியே துவண்டு படுத்துக் கொண்டாள். "கடவுளே... மனிதர்கள் வாழ்வில் சோதனைகள் வருவதுண்டு. ஆனால் இப்படியா, அடுத்து, அடுத்து... சாம்பசிவனின் குடும்பத்தினர் அவளை ஏற்றுக் கொள்ள இருந்த ஒரே வாய்ப்பும் நழுவிப் போய் 'துக்கிரி' என்ற பெயர் நிலைத்துவிடும். இப்படிப்பட்ட பெண்ணை மணந்து என் வாழ்வையும் கெடுத்துக் கொண்டு விட்டேனே என்று சாம்பசிவனும் அவளை வெறுக்க அதிக நாளாகாது.

துயரங்கள் இதோடு முடிந்து விட்டதா அல்லது இன்னும் தொடருமா?

மயானம் சென்றவர்கள மதியத்துக்கு மேல்தான் திரும்பினர். சாம்பசிவனுடன், தொழிலாளர்கள் பத்து பேரும் உடன் வந்தனர். இறந்த நண்பனுக்குக் கொள்ளி போட்டவன் என்பது தவிர சாம்பசிவனைப் பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது. இறந்த சக ஊழியனின் மனைவி என்பது தவிர சீதாவின் முகத்தை இதுவரை யாரும் பார்த்ததுமில்லை. ஆனாலும் அவசியத்தில் சேரும் பலத்துடன் அவர்கள் ரமேஷ் வீட்டில் கூடியிருந்தார்கள். ஒருவர் ஹோட்டலிலிருந்து உணவு எடுத்து வந்தார். யாரோ ஒரு பெண்மணி தீபாவை அணைத்து சாதம் ஊட்டினார்.

"அண்ணி, நீங்க மத்த எதுவும் கவலைப் படாதீங்க. மானேஜ்மெண்டில் அஞ்சாயிரம் ரூபா உங்கிட்ட மத்த செலவுக்குத் தரச் சொன்னாங்க. பத்து நாளில் காம்பன்சேஷன் கிடைக்க நாங்க ஏற்பாடு செய்துடறோம். மாக்ஸிமம் எவ்வளவு வாங்கித் தர முடியுமோ செய்துடறோம்..." பேசியவர் யூனியன் தலைவராக இருக்க வேண்டும்.

"எங்க வீட்டுலே வேணா, உங்க கூட நாலு நாள் இருக்கச் சொல்லட்டா..."

வேண்டாம் என்று சீதா தலையாட்டினாள். அவள் குறிப்பை உணர்ந்த சாம்பசிவன், "அதெல்லாம் அவசியமில்லைங்க... நீங்க எல்லோரும் இதுவரை சொந்த அண்ணனுக்கு மேல அவங்களை கவனிச்சுட்டு இருக்கீங்க. இனிமே நாங்க பாத்துக்கிறோங்க" என்று கைகூப்பினார்.

"நாளைக்கு பால் ஊத்த எப்ப அண்ணே வரணும்?" நண்பர்கள் தயங்கிக் கேட்க, சாம்பசிவன் அவர்களிடம் தோழமையுடன் பேசினார். "நாளைக்கு வொர்க்கிங்டே... நீங்க வர வேணாங்க. ரிலேடிவ்ஸ் வர்றவங்களைக் கூட்டிட்டு நான் போறேங்க..."



முந்திரிப் பருப்பு கடைகளில் இருந்து வாங்கி வந்தால் அதை அப்படியே உபயோகிக்க வேண்டாம். இரண்டாக உடைத்துப் பார்த்துத்தான் உணவுப் பொருட்களில் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில், ஒருசில முந்திரிப் பருப்புகளில் பூச்சி கூடு கட்டி புழுக்கள் இருக்க வாய்ப்பு உள்ளது. ஆகவே இரண்டாக உடைத்துப் பார்த்துச் செய்தால் சுகாதாரத்திற்கும் நல்லது. அளவும் அதிகமாகி பண்டங்களில் அதிக அளவில் சேர்த்தது போல் இருக்கும்.

– சி. பூங்கோதை

வந்தவர் அனைவரும் நகர, சற்று நேரத்தில் அங்கே உண்மையான மயான அமைதி நிலவியது. பூவும், ஊதுவத்தியும், சேறுமாக ஒரு விசித்திர வாடை... அடித்தது. தரையில் சரிந்து உட்கார்ந்திருந்த சீதாவின் மடியில் குழந்தை தூங்கிக் கொண்டிருந்தாள்.

சாம்பசிவன் சமையலறையிலிருந்த துடைப்பத்தைத் தேடி எடுத்து வந்து அந்த இடத்தைச் சுத்தம் செய்யத் துவங்கினார். துடைப்பம் உரசும் சப்தத்தில் திடீரெனக் கண்விழித்த சீதா... "ஐயோ, யார் வீட்டையோ நீங்க ஏங்க கூட்டறீங்க..." என்று படபடத்தாள். சாம்பசிவன் பதிலேதும் பேசாமல் வேலையில் கண்ணாயிருந்தார்.

தான் பேசியதன் எதிரொலி தன் மேலேயே பட்டு, சீதா திடுக்கிட்டாள். ஆமாம்... அவன் ஏன் இந்த வீட்டில் இருக்கிறான்... அவனுக்கு இந்த வீட்டில் என்ன சம்பந்தம் உள்ளது? இங்கே அவனுக்கு எந்த உரிமையும் கிடையாது. இங்கே ஒரு சின்னப் பொருளை அவன் தொட்டாலும், அது அபகரிப்பாகும். "என்னங்க..."

சாம்பசிவன் திரும்பிப் பார்த்தார்.

"இங்கே நாம இருக்கக் கூடாதுங்க. வீட்டைப் பூட்டி யாரிட்டயாவது சாவியைக் கொடுத்துட்டுப் போயிடலாங்க. நாளைக்கு ஏதாச்சும் சாமான் காணும்னு நம்ம மேல பழி வந்துடுங்க. எனக்கு ரொம்ப பயமா இருக்குங்க."

சீதா கூறுவதிலும் நியாயம் உள்ளது. ஆனால் வீட்டைப் பூட்டி யாரிடம் சாவியைக்

“**பருவா!** எனக்கா! அது மறைஞ்சு போய்
எத்தனையோ நாளாச்சு !” என்கிறார் நளினி.

தன் **சருமம் வறண்டு** போய் இருந்ததை
சங்கீதா எப்போதோ மறந்து விட்டார்.

“இப்போதெல்லாம் **வெயிலில்** போனா முகம்
கறுக்காமல் இருக்க எனக்குச் சரியான
**பாதுகாப்பு கிடைச்சாச்சு**” என்கிறார் விஜயா.

“என் **மென்மையான சருமத்தை** நினைச்சா எனக்கு
ரொம்ப **பெருமையா** இருக்கு” என்கிறார் மது.



பருக்களினால் அவதியா? சருமம் வறண்டு போகிறதா? முகத்தில் சுருக்கம் விழுகிறதா - வெயிலினால் முகம் கறுத்து விடுகிறதா? ஃபேஸ் டு ஃபேஸ் ஆயுர்வேத க்ரீம் இத்தகைய பிரச்னைகளை நிச்சயமாகப் போக்கி விடுகிறது. நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்றுள்ள ஆயுர்வேத மருத்துவ முறை தான் அதற்கு காரணம். அந்த மருத்துவ முறையினால் தான் ஒரே ஃபார்முலேஷனைக் கொண்டு பல்வேறு சருமப் பிரச்னைகளையும் நீக்க முடிகிறது. ஃபேஸ் டு ஃபேஸ் ஒரு ஆயுர்வேத க்ரீமாகவும், லோஷனாகவும் கூட இரு ரகங்களில் கிடைக்கிறது. இவற்றைப் பயன்படுத்துவது மிகவும் சுலபம். ஃபேஸ் டு ஃபேஸ் சருமத்தினுள் எளிதில் உட்புகுந்து மிகச் சிறப்பாகச் செயல்படுகிறது. முக்கியமாக எத்தகைய பக்கவிளைவுகளும் இல்லாமல். எனவே உங்கள் சருமம் நாள் முழுவதும் பளிச்சென்று மிருதுவாகத் திகழ முடிகிறது. ஃபேஸ் டு ஃபேஸ் பல்லாயிரக்கணக்கான பெண்களுக்கு பலனளித்து வரும் அழகு சாதனம். நீங்களும் பலனடையுங்களேன்.

இப்போது
லோஷனாகவும்
கிடைக்கிறது









**ஃபேஸ் டு ஃபேஸ்**

**பல்வேறு சருமப் பிரச்னைகளுக்கும் ஆயுர்வேதம் அளித்திடும் நிவாரணம்.**

டாலர் கம்பெனி தயாரிப்பு

# கலாசாரக் கல்வியை



ழை பெய்து விட்டிருந்த பிற்பகல் மூன்று மணி. ஆரக்கோணத்தில் பல்வேறு அமைப்புக் களைச் சார்ந்தவர்களை ஒன்றாக அழைத் திருந்தார்கள் கவியரசு கண்ணதாசன் கலை மன்றத்தினர். அவர்களைச் சந்தித்துப் பேசும் ஆவலில் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ். கலைமன்றத்தின் சார்பில் அவரை வரவேற்றார் திருமதி பரீதா கரீம்.

நுகர்வோர் நலத்திற்கான திட்டங்கள் அதன் செயல்பாடுகள் பற்றிப் பேசி கலந்துரையாடலைத் துவக்கினார் ருக்மா வேணுகோபாலன். தான் சார்ந்துள்ள அமைப்பின் துணையோடு, வரதட்சணைக் கொடுமைக் குள்ளான ஒரு பெண்ணுக் காக போராடி வருவதையும் குறிப்பிட்டார் அந்தத் தலைமை ஆசிரியை.



தற்காலத்தில் பெரும்பாலனவர்களுக்கு அழகுக்கலையைப் பற்றிய விழிப்புணர்வு ஏற்பட்டு இருக்கிறது. குறிப்பாக மங்கையர் மலரில் வருகின்ற அழகுக் கலை பற்றிய கட்டுரைகள் எங்களைப் போன்று சிறிய ஊரில் பார்லர் வைத் திருப்பவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. நிறைய விஷயங்களை அவற்றிலிருந்து தெரிந்து கொள்கிறோம்" என்றார் அழகு கலை நிபுணர் இந்திராணி வாசுதேவன்.





"ஆணின் வெற்றிக்குப் பின் ஒரு பெண் இருப்பது எந்த அளவுக்கு உண்மையோ... அதைப் போலவே பெண்ணின் வெற்றிக்குப் பின்னும் ஒரு ஆண் அவசியம் இருக் கிறார். 'பரீதா' சம்பிரதாயங்களைக் கடந்து என் தந்தையார் என்னை கல்லூரிக்கு அனுப்பியதால்தான் எம்.ஏ. இலக்கியம் படிக்க முடிந்தது. கம்ப்யூட்டர் கோர்ஸ் முடித்து தற்போது பணியாற்றவும் முடிகிறது.

எனது இலக்கியப் பொது வாழ்வு



ஈடுபாட்டிற்கு, என் கணவர் உதவி செய்வதால்தான் இந்தச் சந்திப்பில் பங்கு கொள்ள முடிந்தது.

ஆணுக்குப் பெண்ணும் பெண்ணுக்கு ஆணும் அன்பினால் அடிமையாவதில் தப்பேயில்லை! என்றார் பரீதா கரீம். இவர் ஒரு பட்டிமன்ற பேச்சாளர்.

மல்லிகா பூர்னேஷ் : "தெரு சிறுவர் மன்றம் என்ற ஒரு அமைப்பினை ஏற்படுத்தி, குழந்தைகளுக்கு முறையான





கல்வியினையும் விளையாட்டு ஆர்வத்தினையும் ஏற்படுத்த காத்திருக்கிறேன். ஆனால் பள்ளி பள்ளியாக ஏறி இறங்கினாலும் ஸ்போர்ட்ஸின் அவசியம் பற்றித் தெரிந்து கொள்ள மறுக்கிறார்கள். சகோதரிகள் மற்றும் பள்ளி ஆசிரியைகள் எனக்கு உதவி செய்ய வேண்டும்." என்றார். உடனே அங்கே இருந்த பள்ளித் தலைமை ஆசிரியை மற்றும் ஆசிரியைகள் விவரம் தெரிந்து கொண்டனர். ஒரு பயனுள்ள இணைப்பு அங்கு ஏற்பட்டது சந்தோஷமாக இருந்தது.

"அர்ச்சுனா விருது என் இலட்சியம்' அதுதான் என்னுடைய கனவாக இருக்கிறது. இந்த வார்த்தைகளுக்கு சொந்தக்காரர் ஷோபனா பளுதூக்கும் சாம்பியன். தற்போது சாய் கேம்ப் பெங்களூரில் பயிற்சி பெறுகிறார். நிறைய விருதுகள் மாநில அளவிலும் வாங்கிக் குவித்துள்ள 'வலிமை'யான சகோதரி இவர். வசதிகள் அதிகம் இல்லாத நிலையிலும் பழைய சோறு சாப்பிட்டு பளுதூக்கும் விளையாட்டில் ஆர்வத்துடன் ஈடுபட்டு வருகிறார்.

"வாழ்க்கையில் பொது நிகழ்ச்சிகள் எதிலும் பங்கு கொள்ளாமல் முதல் முறையாக இந்த நிகழ்ச்சியில் பங்கேற்கிறேன். 'மங்கையர் மலர்' எனக்குக் கற்றுத் தந்தது ஏராளம் - முயற்சி கட்டுரைகள் பலவற்றைப் படித்து இன்று நான் ஒரு பொறுப்புள்ள தாயாக இருக்கிறேன்.

அந்த நிறைவு, மகிழ்ச்சியின்

# மாறுவேடப் போட்டிகள் தராது!

அடையாளங்கள்தான் மகளின் பி.இ. மெகானிக்கல் படிப்பும், மகனின் பி.எஸ்ஸி படிப்பும்.

முன்பெல்லாம் தெய்வம் என்ற ஒரு சக்தி ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருப்பதாக வணங்குவேன். இப்போது அந்தக் குறுகிய எல்லை மாறியது. ஒவ்வொர் முகத்திலும் இயற்கையின் ஒவ்வொரு வடிவத்திலும் தெய்வம் இருப்பதை தரிசிக்கிறேன்.

இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் தியானம் அமைதியை தருகிறது. தியானம் நமது ஆன்ம பலத்தை அதிகப்படுத்துகிறது" என்று மென்மையாக பேசி அனைவரையும் ஈர்த்தார் விசாலாட்சி அம்மாள்.

"நம் பிள்ளைகளுக்குக் கலாச்சார கல்வியின் தேவை அவசியம். அது குருகுலம் போன்ற ஒழுக்க நெறி சார்ந்த கல்வியாக அமைய வேண்டும். அந்தக் கலாச்சாரக் கல்வியை பள்ளிகளில் நடக்கும் 'பேன்ஸி டிரஸ் காம்படிஷன்கள்' தந்து விட முடியாது. தன்னலம் கருதாத சிறிய அமைப்பின் மூலம்தான் கலாச்சார கல்வி சாத்தியப்படும்" என்றார் ஆனந்தி ரங்கராஜன்.



நல்லாசிரியர் விருது பெற்ற புலவர் கமலவேணி, "நம் பெண்கள் மனம் விட்டுப் பேச, நகரில் பெண்களே பிரதானமாக பங்கேற்கும் முதல் நிகழ்ச்சி இந்தக் கலந்துரையாடல் நிகழ்ச்சி.

மனம் விட்டுப் பேச இது போன்ற நிகழ்ச்சிகள் அடிக்கடி நடைபெற வேண்டும். அதற்கு மங்கையர் மலர் ஆசிரியர்தான் ஒரு வழி சொல்ல வேண்டும்" என்று கோரிக்கை விடுத்தார்.

"சட்டத்தினைப் பற்றிய தெளிவான ஞானம் பெண்கள் பெற வேண்டியது காலத்தின் தேவை. அந்த ஞானம் பெண்களுக்கு எதிரான பாலியல் வன்முறைகளை தடுக்கும்" என்றார் வழக்கறிஞர் ராஜேஸ்வரி.

நிறைவாக, "பெண்களின் வருங்காலம் செம்மையானதாக அமைய அவர்கள் ஆன்மிக நெறிக் கல்வியை செலுத்திட வேண்டும். இங்கே மகளிர் அமைப்புக் கான கோரிக்கையை வைத்த கமலவேணியின் கோரிக்கை அவசியமான ஒன்று. அந்த அவசியம் கருதி 'அரக்கோணம் மங்கையர் மன்றம்' என்ற அமைப்பு ஏற்படுத்தலாம்.

அந்த அமைப்பிற்கு இந்தக் கூட்டமே முதல் கூட்டமாக அமையட்டும். வரும் ஆண்டில் இதே நாளில் 500 உறுப்பினர்களோடு இந்த மங்கையர் மன்றம் செயல்பட வேண்டும். அப்போது உங்கள் அழைப்பினை ஏற்று நானே வருவேன்" என்றார் மஞ்சுளா ரமேஷ்.

நிகழ்ச்சியில் பங்கேற்ற ஹேமலதா சுந்தரம், டாக்டர் புஷ்பா பண்டரிநாதன், மணிமேகலை ரமணி, ஆர்.கே. கமலி, இரா ரவிச்சந்திரன், கஸ்தூரி, சந்திரா வீரராகவன் மற்றும் ரவிச்சந்திரன், சுந்தர் வஞ்ச்றோம் சுந்தர், மாசிலாமணி, கவிஞர் வாசுதேவன், கவியாக கண்ணதாசன் மன்றத் தலைவர் ப. சத்தியநாராயணன், பாபு, ரவி, அலி என நிறைய அரக்கோண அன்பர்கள் வந்திருந்தார்கள். ஒரு கலகலப்பான குடும்ப நிகழ்ச்சியில் கலந்து கொண்டு விடைபெற்ற மனநிறைவு அனைவருக்கும் ஏற்பட்டது.

தொகுப்பு : **இஸ்மாயில்**
படங்கள் : **ஓம் சுப்ரமணியம்**



ல் சுரப்பு இல்லாத பெண்களுக்கு பார்லி அரிசியை கஞ்சியாக தயாரித்துக் கொடுத்துவர பலன் கிடைக்கும். 25 கிராம் அளவு தோல் நீக்கிய வெண்ணைப் பூண்டை 300 மிலி பசும்பாலிலிட்டு குழைந்து போகும்படி வேகவைத்து கடைந்து அத்துடன் 2 கிராம் ஏலரிசி தூளும், போதுமான சர்க்கரையும் சேர்த்து தினம் காலை 6 மணி அளவில் சாப்பிட்டு 10 மணி அளவில் உணவு சாப்பிட்டு வர தாராளமாக பால் சுரக்கும். பால் சுரப்பை நிறுத்த வேண்டுமானால் உதிரியான மல்லிகைப் பூவை மார் பகங்களின் மேல் பரவலாக வைத்து கட்டி வரவும். சில நாட்களில் பால் வறண்டுவிடும். இவைகளுக்கெல்லாம் வேறு மருந்து வேண்டியதே இல்லை!

பிரசவ வலி போல ஆரம்பித்து ஆஸ்பத்திரிக்கு சென்ற சில மணி நேரங்களில் அது நின்று போய்விடும் சில பெண்களுக்கு! இவர்கள் வீட்டுக்கும் மருத்துவமனைக்குமாக பலமுறை கூட போய் வர வேண்டி இருக்கும். இதற்கு குங்குமப்பூ, சோம்பு சேர்த்த கஷாயம் நல்ல மருந்தாகும். இதன் அதிசய குணம் என்னவென்றால் உண்மையிலேயே பிரசவ வலியானால் அதை மேலும் தூண்டி விரைவில் பிரசவிக்கச் செய்யும். பொய்வலியாக இருந்தால் உடனே நிறுத்தி விடும்!

இன்னும் பனிக் குடம் உடைந்தும் வலியே எடுக்காமல் இருப்பதும், பல நாட்கள் வலி நீடித்தும் பிரசவம் ஆகாத நிலைமைக்கும் கூட பல அபூர்வமான சித்த மருந்துகள் உண்டு. இதற்கு மிகச் சிறந்த மருந்து 'கடக ரோகிணி மாத்திரை ஆகும். இது பேதி ஆகும் தன்மை உடையது. நவீன மருத்துவமனையில் பிரசவ வார்டுக்குப் போகும் முன்பு 'எனிமா' கொடுத்து குடலை சுத்தம் செய்வது உண்டு. பிரசவ வேதனையின் உச்சக்கட்டத்தில் முக்கும் போது மலம் கழியக் கூடாது என்கிறதுதான் இதன் முக்கிய நோக்கம்! ஆனால் கடகரோகிணி மாத்திரை வெறும் பேதி மாத்திரை அல்ல; கருப்பையை தூண்டி பிரசவத்தை எளிதாக்கி விடுகிறதுதான் இதன் தனிச்சிறப்பு! அனுபவமான ரகசியம் இதில் உண்டு. கடைகளில் இது கிடைப்பது இல்லை. அனுபவம் உள்ள மருத்துவர் மூலம்தான் பெற்று உபயோகிக்க முடியும்! வேறு வேறு அனுபானத்துடன் இந்த மாத்திரை கொடுப்பதால் கர்ப்பம் தரிக்காத மலட்டு நோய்கள் தொடங்கி கஷ்டப்பிரசவம் மற்றும் 50 சதவீதம் கருப்பை நோய்களுக்கும் இது போன்ற சிறந்த மருந்து கிடையாது!



# ஆணும் காரணமாகிறார்கள்!

**டாக்டர் எஸ். ஜெயராமன்**

'கருத்தரிப்பு' என்று வரும் போது ஆணின் உயிரணுவின் ஆரோக்கிய நிலைமைக்கும் முக்கிய பங்கு உண்டு. நிலம் செழுமையாக இருந்து விதை பழுதாக இருந்தாலும் பயிர் வளர்வதில்லை அல்லவா? அது போலத்தான், குழந்தை தங்கவில்லை என்றதும் பெண்ணின் மீதே பழிபோட்டு ஆண்கள் தப்பித்துக் கொள்ள முயல்வதுதான் சமுதாயத்தில் வழக்கமாக இருந்து வருகிறது. இம்மாதிரி விஷயங்களில் ஆண்களின் உயிரணு நிலைமை என்ன? என்று தெரிந்து கொள்ளக்கூட விரும்பாமல் பெண்களை மட்டுமே சிகிச்சைக்கு அனுப்பும் ஆண்களில் பலர் உண்டு. இந்த 'பயம்' அல்லது தயக்கத்துக்கு வெளியிட முடியாத காரணங்களும் கூட இருக்கலாம். எனவே இது தொடர்பான சில முக்கியமான உண்மைகளையாவது பெண்கள் தெரிந்து கொள்வது அவசியம்!

ஆண்களின் குறைகளில் உயிரணுவின் குறைபாடுகள் மற்றும் உறுப்பு பலவீனம் என 2 முக்கிய பிரிவு உண்டு. நவீன மருத்துவத்தில் உயிரணுக்களின் எண்ணிக்கை 60 - 120 மில்லியன் வரை இருந்தாலே போதும் என்று ஆண்களுக்கு வேறு சிகிச்சை தேவை இல்லை என முடிவு கட்டிவிடுகிறது. உறுப்பு பல




## ஆண் பாதி, பெண் பாதி

சுதந்திர தின பொன் விழாவினையொட்டி நெல்லையில் மாவட்ட அறிவியல் மையத்தில் மாணவ மாணவியர்க்கான மாறுவேடப் போட்டி நடந்தது.

இதில் ஒரு சிறுமி அர்த்தநாரீஸ்வரராக வேடமிட்டு வந்து அனைவரையும் அசத்தினார். இந்தச் சிறுமி சுதந்திரப் போராட்ட வீரரும், முன்னாள் எம்பி., எம்எல்ஏவுமான தியாகி அமரர் ஆர்.எஸ். ஆறுமுகம் அவர்களின் மகள் வயிற்றுப் பேத்தி என்பது சிறப்பம்சம். இவளது அழகிய அலங்காரத்திற்குக் காரணம் அவளது அம்மா பூரணியே.

தகவல் : பானைபசும்பிரான்
படம் : ஆனந்த் வீடியோ

வீனத்தைக் கண்டறிய சரியான சோதனை முறை இல்லை. ஆண்கள் கூச்சத்தினால் சரி பாகத்தான் உள்ளது என்று கூறுவதை ஏற்றுக் கொள்கிறார்கள். இயற்கையாக கருத்தரிக்க இது முக்கியம் தேவை. இப்படிப்பட்ட பலவீனம் உள்ளவர்களை கை நாடி மூலம்தான் எங்களால் சரியாகக் கண்டறிய முடிகிறது. கண்டறிந்து சிகிச்சை அளித்தபின் விரைவிலேயே கர்ப்பமான பெண்கள் அநேகர்! இன்னும் உயிரணு உற்பத்தித் திறன் ஆண்களிடம் குறைந்து வருவதாக உலக சுகாதார நிறுவனம் (WHO) அறிவித்து உள்ளது. இந்த ரீதியில் போனால் இன்னும் 70 ஆண்டுகளில் உயிரணுவே இல்லாத ஆண்கள் பலர் இருந்து "விந்தணு தானம்" பெற வேண்டிய நிலைமை உருவாகும் என்றும் கூறி உள்ளது. இது கவலையோடு சிந்திக்க வேண்டிய விஷயம்!

இம்மாதிரி உயிரணு குறைவுக்கு சிறுவயது முதல் ஊட்டச்சத்து குறைவு, சில வகை மூளை நரம்பியல் நோய்கள் மற்றும் சுற்றுப்புற சுகாதாரக் கேடு என்று பல வெளிக்காரணங்கள் கூறுவது உண்டு. ஆனால் 'டீன் ஏஜில்' ஆண்களில் சிலர் தகாத ரகசிய பழக்கங்களும் முக்கிய காரணம். பலவிதமான கற்பனைகளுக்கு ஆட்பட்டு இயற்கைக்கு விரோதமான முறையில் விந்தை அதிக அளவில் நஷ்டப் படுத்தி வருவதன் விளைவாக விரைகளில் (Testis) உள்ள உயிரணு உற்பத்தி செய்யும் Seminiferous Tubules அதிக சூட்டினால் மெல்ல மெல்ல சுருங்கி (Atrophy) உற்பத்தியே (Spermatogenesis) குறைந்து 35 வயது அளவில் நின்றும் போய்விடும் அபாயம் உள்ளது. சித்த மருத்துவம் கூறும் வெட்டைச் சூடு காரணமாக இது ஏற்படுவதை விஞ்ஞான ரீதியாக மறுப்பதற்கு இல்லை. ஏனெனில் அடிவயிற்றுப் பகுதியைவிட விரைகளில் 2 டிகிரி சென்டிகிரேட் உஷ்ணம் குறைவாக இருந்தால் தான் விந்தணு உற்பத்தி செய்யும் வேலை சீராக, முழுமையாக நடைபெறும் என்று நவீன மருத்துவ ஆய்வும் கூறுகிறது.

இவ்வாறு பாதிக்கப்பட்டவர்கள் உறுப்பு பலவீனம் மற்றும் உயிரணு குறைவு (Oligo-spermia) அல்லது துடிப்பின்மை அல்லது உயிரணுவே இல்லாமை (Azoospermia) என்ற நிலைமைக்கு ஆளாகின்றனர். இப்படிப்பட்டவர்களுக்கு ஆர்மோன் மருந்துகள் தற்காலிகமான பலனே அளிக்கின்றன. கருத்தரித்தாலும் கூட இப்படி உருவான கரு 2 வது 3 வது மாதமே சிதையும் வாய்ப்பும் உள்ளது. இதன் மற்றொரு பக்கவிளைவு - (இது அவசியம் தெரிந்து கொள்ள வேண்டியது ஆகும்) என்ன வெனில் செயற்கையான ஆர்மோன் மருந்து சிகிச்சையை நிறுத்தியபின் 3 - 4 மாதம் கழித்து பரிசோதனை செய்த சிலருக்கு முன்பு இருந்த குறைவான உயிரணு கூட இல்லாமலும் போய் இருக்கிறது. இதன் பிறகு இயற்கையான வேறு நல்ல மருந்துகளும் கூட பலனளிக்க முடியாமல் போகும் அபாயம் உள்ளது.

இளம் வயதில் Mumps என்கிற புட்டாலம்மை அல்லது பொன்னுக்கு வீங்கி ஏற்பட்டாலோ அல்லது அம்மை வார்த்திருந்தாலோ விந்தணு உற்பத்தி கெட்டுப் போய்விடும் என்று ஒரு கருத்தும் நவீன மருத்துவர்கள் கூறுவதுண்டு. ஆனால் இது நிரூபிக்கப்பட்ட உண்மையில்லை என்று "The Encyclopaedia of Health & Medicine" என்கிற அமெரிக்காவில் வெளியான மருத்துவ கலைக்களஞ்சியம் கூறுகிறது. மேலும் இது உண்மையாக இருக்குமானால், உஷ்ண பிரதேசமான நம் நாட்டில்

Registered with the Registrar of Newspaper of India under No. 33309/79 * Registered No. TN/MS (S) 23/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 9 * Registered as a Newspaper in Sri Lanka
Supplement to the Mangayar Malar November '97 issue

# உங்கள் கைனெட்டிக் ஹோண்டாவிற்கு இந்தியன் ஆயில் பரிவுடன் வழங்கும்

# கைனெட்டிக் ஹோண்டா ஜெனுயின் 2T ஆயில்



உயர் செயல்திறன் கொண்ட கைனெட்டிக் ஹோண்டா ஸ்கூட்டர்களின் லூப்ரிகேஷன் தேவைகளுக்காக இந்தியன் ஆயிலினால் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டது **கைனெட்டிக் ஹோண்டா ஜெனுயின் 2T ஆயில்.**

இந்த ஆயில், **ஜப்பானின் ஹோண்டா மோட்டார் கம்பெனியால்,** கைனெட்டிக் ஹோண்டாவிற்கு மிகவும் சரியான எஞ்சின் ஆயில் என சான்றிதழ் பெற்றுள்ளது.

மேலும், அமெரிக்கன் பெட்ரோலியம் இன்ஸ்டிட்யூட்டின் API-TC செயல் திறன் நிர்ணயங்கள் மற்றும் சமீபத்திய JASO குறியீடுகளையும் இது மிஞ்சுகிறது.




**கைனெட்டிக் ஹோண்டா ஜெனுயின் 2T ஆயில்** அளிக்கும் சிறந்த பயன்கள்:

- ☑ உடனடி ஸ்டார்ட்டிங்
- ☑ நீடித்த எஞ்சின் ஆயுட்காலம்
- ☑ குறைந்த பெட்ரோல்/ஆயில் செலவு
- ☑ குறைந்த அளவு புகை வெளியேற்றம்
- ☑ எஞ்சின் மற்றும் ஸ்பார்க் பிளக்கின் அபரிமிதமான சுத்தம்

**கைனெட்டிக் ஹோண்டா ஜெனுயின் 2T ஆயில்** அனைத்து இந்தியன் ஆயில் பெட்ரோல் விற்பனை நிலையங்கள் மற்றும் கைனெட்டிக் ஹோண்டா சர்வீஸ் மையங்களில் கிடைக்கின்றது.




இந்தியன் ஆயில்

SERVO உலகத் தரமுடைய லூப்ரிகன்ட்ஸ்

Registered with the Registrar of Newspaper of India under No. 3030975 * Registered No. TN/MS (S) 23/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/ 35/9 * Registered as a Newspaper in Srilanka